# கூரேச விம்ஶதி

# கூரநாத பஞ்சாஶத்

## ஆகிய ஸ்தோத்ரங்கள்



ஸ்ரீ உ.வே தி. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி
இயற்றிய தமிழுரையுடன்

முதல் பதிப்பு ஜனவரி 1998
500 பிரதிகள்

விலை: ரூ. 25.00

**ஸ்ரீநாசார்யன்** வெளியீடு
7, தெற்கு மாட வீதி,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005

அச்சிட்டோர்
கொப்பரம் பிரிண்டர்ஸ்
45, டி.பி.கோயில் லேன்,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005



# முன்னுரை

ஆழ்வானுடைய அருமை பெருமைகளை அளவிட்டுரைத்தல் ஆயிரவாய்படைத்த ஆதிசேஷனுக்கும் இயலாத காரியமாகும். எவ்வுலகும் இன்பமெய்த வந்த எம்பெருமானார் தாமும் தம்முடைய மோக்ஷ இன்பத்திற்கு ஆழ்வானுடைய ஸம்பந்தத்தையே காரணமாக அறுதியிட்டு அருளினாராம். இது தன்னை ப்ராசீனச்லோகமொன்று தெரிவிக்கிறது. "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா: தேசிகா: முக்திமாபு: ஸோZயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்த்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:" என்பதே அந்த ச்லோகம். எம்பெருமானார்க்குப் பிற்பட்ட எம்பார் முதலிய ஆசாரியர்கள் அவர் தம்முடைய திருவடித்தாமரையிணையில் தம் தலைகளை மடுத்தும், முற்பட்ட பெரிய நம்பிகள் தொடக்கமான ஆசாரியர்கள் அவருடைய திருமுடியில் தம் திருவடிகளை வைத்தும் ஏதோ ஒரு வகையில் அவரோடு ஸம்பந்தத்தைப் பெற்று முத்தி பெற்றார்கள். இங்ஙனம் தம் சிஷ்யர்களோடு ஆசார்யர்களோடு வாசியற மோக்ஷமளிக்க வல்ல அவ்வெம்பெருமானார் தாமும் கூரத்தாழ்வானாகிற ஸச்சிஷ்யருடைய ஸம்பந்தத்தாலேயே தம்முடைய மோக்ஷத்தைத் தம் கைவசமிருப்பதாக நிச்சயித்தாரென்றால் அக்கூரத்தாழ்வானுடைய பெருமைகள் எங்ஙனம் நம்மால் வருணிக்கமுடியும் - என்பது இந்த ச்லோகத்தின் தாத்பர்யமாகும்.

அத்தகைய கூரத்தாழ்வானுடைய பெருமைகளில் சிலவற்றை, முற்காலத்தில் பட்டர் சீராமப் பிள்ளை என்னும் ஆழ்வான்குமாரரிருவரில் சிறியவரான சீராமப் பிள்ளையாகிய வேதவ்யாஸபட்டரின் திருமகனாரான ஸர்வஜ்ஞபட்டரென்கிற நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் இருபது ச்லோகம் கொண்ட கூரேசவிம்சதி என்னும் ஸ்தோத்ரத்தின் மூலமாகவும்,

பிற்காலத்தில் ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் மடத்தில் முதன்முதலில் பட்டாபிஷிக்தரான திருவேங்கடராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸந்நிதியில் க்ரந்தாந்வயம் பெற்ற சுத்தஸத்த்வம் தொட்டாசார்யஸ்வாமி ஐம்பது ச்லோகம் கொண்ட கூரநாதபஞ்சாசத் என்ற ஸ்தோத்ரத்தின் வாயிலாகவும் வெளியிட்டு உலகோரை உஜ்ஜீவிப்பித்தருளினர். இவையிரண்டு துதி நூல்களும் கூரத்தில் ஆழ்வானுடைய மஹோத்ஸவ காலங்களில் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

இவற்றிற்கு இதுகாறும் உரையேதும் கிடைக்காததனால், ஸ்ரீ கூரநகராபிஜநரும், ஸ்ரீகைரவிணீநித்ய நிவாஸரஸிகராய் ஸ்ரீ பார்த்தஸாரதி எம்பெருமான் திருவடிவாரத்தில் செய்யும் அருளிச் செயலோதுதலாகிய கைங்கர்யத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவருமாகிய ஸ்ரீமான் உ.வே கூரம் வீரவல்லி. பாஷ்யகாராசார்யர் ஸ்வாமி அடியேனிடம் நிர்ஹேதுக க்ருபை உண்டாகப் பெற்று, இவையிரண்டு ஸ்தோத்ரங்களுக்கும் உரையெழுதித் தருமாறு நியமித்தருளினார். மஹான்கள் இருவரருளிய இவற்றிற்கு உரையெழுதத் தகுதி இறையுமில்லாதிருப்பினும் அடியேன் அவர் நியமனத்தையே பற்றாசாகக் கொண்டு, தெரிந்தவரையில் ஒருரையை எழுதத் துணிந்து விட்டேன். இவ்வுரையோடு கூட இவ்விரண்டு ஸ்தோத்ரங்களும் அச்சாகி வெளிவருகின்றன இப்போது. இதன் கண், அடியேனுக்கு இயற்கையாக அமைந்த அறியாமை, அஜாக்ரதை மருள் முதலிய தோஷங்களால் ஏற்பட்ட சொற்குற்றம் பொருட்குற்றம் மற்றுமுள்ள எல்லாக் குற்றம் ஆகியவற்றை, இயற்கையாகவே இன்னருள்கொண்ட - கற்றறிந்த பெரியோர்கள் பொறுத்தருளி அடியேனைக் குளிரக் கடாக்ஷிக்க வேணுமென்று விநயத்துடன் வேண்டுகிறேன்.

திருப்பதி — தி. அ. க்ருஷ்ணமாசார்ய தாஸன்.
26-9-97.

## ஸர்வஜ்ஞபட்டர் அருளிய

# கூரேஶ விம்ஶதி

### தனியன்

श्रीरङ्गोज्ज्वलमध्यवीथिनिलयं श्रीराममिश्रात्मजं
श्रीभट्टार्यपदाश्रयं शुभगुणं वाचांजयिभ्रातरम् ।
लोकार्यप्रवणं तदुक्तिरसिकं सर्वज्ञभट्टारकं
वन्दे तं भुवि विंशति व्यतनुत श्रीवत्सचिह्नस्य यः ।।

*ஸ்ரீரங்கோ$_3$ஜ்ஜ்வலமத்$_4$யவீதி$_2$நிலயம் ஸ்ரீராமமிஶ்ராத்மஜம்*
*ஸ்ரீப$_4$ட்டார்யபதா$_3$ச்ரயம் ஶுப$_4$கு$_3$ணம் வாசாம்ஜயிப்$_4$ராதரம்*
*லோகார்யப்ரணவம் தது$_3$த்திரஸிகம் ஸர்வஜ்ஞப$_4$ட்டாரகம்*
*வந்தே$_3$ தம் பு$_4$வி விம்ஶதிம் வ்யதநுத ஸ்ரீவத்ஸசிஹ்நஸ்ய ய:*

ய: - யாவரொருவர், புவி- உலகில், ஸ்ரீவத்ஸசிஹ்நஸ்ய - கூரத்தாழ்வானைப் பற்றிய, விம்சதிம் - இருபது ச்லோகங்களைக் கொண்ட ஸ்தோத்ரத்தை, வ்யதநுத - அருளிச் செய்தாரோ, தம் - அப்படிப்பட்ட, ஸ்ரீரங்க உஜ்வல மத்யவீதி நிலயம் - ஸ்ரீரங்கத்தில் விளங்குகிற நடுவில் திருவீதியை இருப்பிடமாகக் கொண்டவரும், ஸ்ரீராமமிச்ர ஆத்மஜம் - வேதவ்யாஸ பட்டரென்னும் ஸ்ரீராமமிச்ரரின் திருக்குமாரரும், வாசாம் ஜயி ப்ராதரம் - வாக்விஜயிபட்டரின் ஸஹோதரரும், ஸ்ரீபட்டார்ய பதாச்ரயம் - ஸ்ரீபராசரபட்டரின் திருவடிகளைஆச்ரயித்தவரும், லோகார்ய ப்ரவணம் - லோகாசார்யராகிய நம்பிள்ளையினிடம் பக்தியை உடையவரும், ததுக்தி ரஸிகம் - அந்த நம்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளின் சுவையறிந்தவரும், சுபகுணம் - நல்ல குணங்களைக் கொண்டவருமான, ஸர்வஜ்ஞ பட்டாரகம் - ஸர்வஜ்ஞ பட்டரை, வந்தே - வணங்கித் துதி செய்கிறேன்.

கூரேச விம்சதி என்னும் இந்த ஸ்தோத்ர க்ரந்தத்திற்கு விஷய பூதரான கூரத்தாழ்வானுக்குத் திருக்குமாரர்கள் இருவர், ஸ்ரீரங்கநாதரென்றும் ஸ்ரீராமமிச்ரரென்றும் முறையே இவ்விருவரின் இயற்பெயர்களாகும். இவர்களுக்கு எம்பெருமானார் சாத்தியருளிய திருநாமங்கள் - ஸ்ரீபராசரபட்டர் வேதவ்யாஸ பட்டர் என்பனவாகும். ஸ்ரீராமமிச்ரரின் ஸத் புத்ரர்களில் ஒருவரான ஸர்வஜ்ஞ பட்டரே இக்கூரேச விம்சதியின் கர்த்தா. மற்றொருவர் வாக் விஜயி பட்டர். இந்த ஸர்வஜ்ஞபட்டர் நடுவில் திருவீதியில் வாஸம் செய்து வந்தமையால் நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரென்று வழங்கப் பட்டார். இவர் தமது பெரிய தமப்பனாரான ஸ்ரீபராசர பட்டர் ஸந்நிதியில் ஆச்ரயித்தவர். இவர் நம்பிள்ளையிடம் பக்தி கொண்டதற்குக் காரணம் அவருடைய ஸ்ரீஸூக்தியின் சுவை அறிந்தமையே ஆகும். இந் நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர், நம்பிள்ளை திறத்தில் - அவருடைய ஜ்ஞான பக்தி வைராக்யங்களையும் சிஷ்ய ஸம்பத்தையும் உலகம் போற்ற நின்றமையையும் கண்டு முதன்முதலில் பொறாமைப்பட்டு, கடிகடி என்றிருந்தார். பின்பொருகால் இவர் சோழராஜஸபைக்குச் செல்ல, அரசன் ''பட்டரே! 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' (=என்னை நான் மனிதனாக நினைத்திருக்கிறேன்) என்று ஸ்ரீராமபிரான் தனது பரத்வத்தை மறைத்து மநுஷ்யத்வத்தை வெளிப்படுத்திக் கொண்டிருந்தவன் - ஜடாயுவைக் குறித்து 'மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாந் அநுத்தமாந்' (=என்னால் அனுமதிக்கப் பெற்ற நீர் ஸ்ரீவைகுண்டலோகத்தை அடையக் கடவீர் என்று சொல்லி அவருக்கு மோக்ஷம் கொடுத்தது எப்படிப் பொருந்தும்? மோக்ஷம் தருவது பரதத்வமான விஷ்ணுவின் காரியமன்றோ?'' என்று கேட்க, இவர் அதற்குத் தக்க விடை தோன்றாமையாலே, பக்கத்திலிருந்த நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகிய பெருமாள் சீயரிடம் ''நம்பிள்ளை இதற்கு என்ன ஸமாதானம் சொல்லுவர்?'' என்று ரஹஸ்யமாக வினவ, அவர்



''ஸத்யேந லோகாந் ஜயதி என்று தசரதமகாராஜன் கைகேயிக்குச் சொன்ன வார்த்தையைக் கொண்டு ஸமாதாநம் சொல்லுவர்'' என்று கூற, பட்டர், ''அரசே! 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்று ஸ்ரீராமாயணத்திலுள்ள வசநமே நீ கேட்ட கேள்விக்கு விடை பகர வல்லது. ராமபிரான் பிராணிகளுக்கு நன்மை பயக்கும் ஸத்யம் சொல்லும் ஸ்வபாவமுடையவனாகையாலே ஸ்வர்க்கம் முதலாக ஸ்ரீவைகுண்டம் ஈறாக உள்ள லோகங்களையெல்லாம் தன் வசமாக்கிக் கொள்வன் என்று அவ்வசனத்திற்குப் பொருளாகையால், தன்னுடைய ஸத்யவாக்யத்வத்தினால் ஜடாயுவுக்கு மோக்ஷம் தந்தருளினார். இதனால் பரத்வம் வெளிப்பட்டு விடாது'' என்று அரசனுக்கு விடை கூறி, அவனை மகிழ்வித்து, பல ஆபரணங்களும் பட்டு வஸ்த்ரங்களும் பஹுதநங்களும் பஹுமாநமாகப் பெற்று, அவற்றை யெடுத்துக் கொண்டு ஜீயருடன் நம்பிள்ளையின் திருமாளிகைக்குச் சென்று அவர் திருவடிகளில் ஸமர்ப்பித்துவிட்டு, முன்பு பொறாமைப் பட்டதை க்ஷமிக்கும்படி ப்ரார்த்தித்து, அவர் அங்கீகாரம் பெற்று அவரை ஒரு க்ஷணமும் பிரியாமல் ஸேவித்துக்கொண்டு மகிழ்ச்சியோடிருந்தார் என்று ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்திலுள்ள விஷயம் 'லோகார்யப்ரவணம் ததுக்தி ரஸிகம்' என்கிற இந்த இடத்தில் அநுஸந்திக்கத் தக்கது.

பட்டர், பட்டாரகர் என்பவை வேத சாஸ்த்ரங்களை நன்றாகக் கற்றறிந்த அந்தணர்களுக்கு அளிக்கும் பட்டப் பெயர்கள் என்பர்.

பரமகம்பீரமாக அமைந்த இத் தனியனை அருளிய பெரியார் யாரென்று தெரியவில்லை. இந்நூலாசிரியருடைய திருவம்சத்தில் தோன்றிய ஒருவரே இதைப் பணித்திருக்கலாம் என்று கொள்ளல் தகும்.

श्रीरङ्गराजकरुणामयदृष्टिवीक्षा
सम्प्राप्त सर्वगुणराजि विराजमाने ।

श्रीमच्छठप्रमथने स्थिरभावबन्धं
श्रीवत्सचिह्नगुरुमन्वहमाश्रयामि ।। १. ।।

*ஸ்ரீரங்க$_3$ராஜகருணாமயத்$_3$ருஷ்டிவீக்ஷா*
*ஸம்ப்ராப்த ஸர்வகு$_3$ணராஜி விராஜமாநே,*
*ஸ்ரீமச்சட$_2$ப்ரமத$_2$நே ஸ்தி$_2$ரப$_4$ாவப$_3$ந்த$_4$ம்*
*ஸ்ரீவத்ஸசிஹ்நகு$_3$ருமந்வஹமாஶ்ரயாமி.(1)*

ஸ்ரீரங்கராஜ கருணாமய த்ருஷ்டிவீக்ஷா ஸம்ப்ராப்த ஸர்வகுணராஜி விராஜமாநே - திருவரங்கநாதனுடைய கருணை பொங்கிய திருக்கண் பார்வையினால் அடையப் பெற்ற ஸகல ஸத்குண ஸமூஹங்களாலே மிகவும் விளங்குகின்ற, ஸ்ரீமாந் சடப்ரமதநே - ஸ்ரீக்ருஷ்ணபக்தியாகிற செல்வத்தைப் பெற்ற சடகோப முனிவரிடத்தில், ஸ்திர பாவ பந்தம் - நிலைபெற்ற திருவுள்ளப் பிணைப்பையுடையவரான, ஸ்ரீவத்ஸசிஹ்நகுரும் - கூரத்தாழ்வானாகிய ஆசார்யரை, அந்வஹம் - தினந்தோறும், ஆச்ரயாமி - ஆச்ரயிக்கிறேன். (ஸேவிக்கிறேன்.)

ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடைய கூரத்தாழ்வானை ஸேவிக்கிறேன் என்று, ஆழ்வாரிடத்தில் பக்தியை ஆழ்வானுக்கு முதல் யோக்யதையாக அருளிச் செய்கிறார் இதனால். அவ்வாழ்வார் எத்தகையவர் என்றால் - உயர்வற உயர்நலமுடைய பெரிய பெருமாள் கடாக்ஷத்தாலே பெற்ற மயர்வற மதியும் நலமென்னும் பக்தியும் வைராக்யம் முதலிய பிறவுமான எல்லா நற்குணங்களாலும் விளங்குமவர் என்கிறது - முன்னிரண்டடிகளால்.

சடப்ரமதனர் - சடகோபர். ''கர்ப்பத்திலிருக்கும்பொழுது ஞானமுடையனவாயிருக்கிற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது ஸ்பரிசத்தால் அஜ்ஞானத்துக்கு உள்ளாக்கி அழுதல்



அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடும் தன்மையதான சடமென்னும் வாயு இவரையும் பிறந்தபொழுது தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை ஹூங்காரத்தால் ஒறுத்து ஒட்டி ஒழித்ததனால், இவர்க்கு 'சடகோபர்' என்று திருநாமமாயிற்று'' என்பர் மஹாவித்வான் வை.மு.கோபாலகிருஷ்ண்மாசார்யர் ஸ்வாமி.

அன்றிக்கே, சடதீதி சட: . சட கைதவே என்னும் தாதுவிலிருந்து உண்டான சட: என்றும் சப்தம் வஞ்சகனைக் குறிக்கும். வேதத்தை இல்லை செய்யும் ஜைந பௌத்தாதிகளும், வேதத்துக்கு அவப்பொருள்கூறும் அத்வைதிகள் முதலானவர்களும் வஞ்சகர்களேயாவர். அவர்களை வேத தாத்பர்யமான தமது திருவாய்மொழி முதலிய ப்ரபந்தங்களால் தமது ஸமீபத்தில் நில்லாதபடி கோபித்துத் துரத்தியதனால் நம்மாழ்வாருக்கு சடகோபரென்னும் திருநாமம் உண்டாயிற்று என்றும் கொள்ளலாம். இது, ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில், 'இதுக்கு மூலம் - யான் நீ யென்று மறுதலைத்து' என்று தொடங்கும் 7வது சூர்ணிகையில் 'சடரை ஓட்டி' என்பதற்கு மணவாளமாமுனிகள் அருளிய வ்யாக்யானப் பகுதியில் ஸ்பஷ்டம்.

நம்மாழ்வார் திறத்தில் ஆழ்வானுக்கு நிலைநின்ற பக்தியுடைமை, ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் 'த்ரைவித்யவ்ருத்த', 'பக்திப்ரபாவ' என்ற இரண்டு மூன்றாம் ச்லோகங்களிலும், அதிமாநுஷஸ்தவத்தில் 'ஸ்ரீமத்பராங்குசமுநீந்த்ரமநோ நிவாஸாத்' என்கிற மூன்றாம் ச்லோகத்திலும் பிறவற்றிலும் காணலாம்.

ஸ்ரீவத்ஸசிஹ்நன் (=திருமறுமார்பன்) என்பது திருமாலின் பெயர். இது ஆழ்வானுக்கு அவர் தந்தையாரால் நாமகரண காலத்தில் இடப்பெற்றது. ஆழ்வான் என்றது - எம்பெருமானுடைய குணங்களிலும், அவற்றை உள்ளபடியே அறிவிக்கின்ற ஆழ்வார்ஸ்ரீஸூக்திகளிலும் ஆழங்காற் பட்டிருந்ததனால் உண்டாயிற்று என்பர் பெரியோர். (1)

श्रीयामुनार्यपदपङ्कजसक्तचित्ते
श्रीमत्पराङ्कुशगुरूत्तमलब्धविद्ये ।
श्रीलक्ष्मणे मुनिवरेऽर्पित सर्वभारं
श्रीवत्सचिह्नगुरुमन्वहमाश्रयामि ।। २ ।।

*ஸ்ரீயாமுநார்யபத$_3$பங்கஜஸக்தசித்தே*
*ஸ்ரீமத்பராங்குஶகு$_3$ரூத்தமலப்த$_4$வித்$_3$யே,*
*ஸ்ரீலக்ஷ்மணேமுநிவரே அர்ப்பித ஸர்வப$_4$ாரம்*
*ஸ்ரீவத்ஸசிஹ்நகு$_3$ருமந்வஹமாஶ்ரயாமி. (2)*

ஸ்ரீயாமுநார்ய பதபங்கஜ ஸக்தசித்தே - ஆளவந்தாருடைய திருவடித் தாமரைகளில் ஈடுபட்ட திருவுள்ளமுடையவரும், ஸ்ரீமத் பராங்குச குரூத்தம லப்தவித்யே - பெரியநம்பிகள் என்னும் ஆசார்ய ச்ரேஷ்டரிடமிருந்து பெறப்பட்ட மோக்ஷோபாயமுடையவருமான, ஸ்ரீலக்ஷ்மணே - பகவத் ராமாநுஜராகிய, முநிவரே - முனிவர் பெருமானிடத்தில், அர்ப்பித ஸர்வபாரம் - ஒப்படைக்கப்பட்ட (தம்மைக்காக்கும்) பொறுப்பனைத்தையுமுடைய, ஸ்ரீவத்ஸசிஹ்நகுரும் - ஸ்ரீவத்ஸ சிஹ்நரென்னுமாசார்யரை, அந்வஹம் ஆச்ரயாமி - தினந்தோறும் ஸேவிக்கிறேன்.

ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடமுள்ள பக்தியை முன் ச்லோகத்தால் குறிப்பிட்டு, இந்த ச்லோகத்தால் அவருக்கு எம்பெருமானார்திறத்திலுண்டான கௌரவத்தைக் குறிப்பிட்டருளுகிறார். ஆழ்வார் திருவடிகளே சரணம் என்றவுடன், எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றன்றோ ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்திப்பது.

யாமுனன் - யமுனைத்துறைவன். கண்ணபிரானுடைய திருநாமமாகிய இது, ஸ்ரீமந்நாதமுனிகளுடைய நியமனத்தினால் அவர் குமாரரான ஈச்வரபட்டாழ்வான் தம் குமாரராகிய ஆளவந்தார்க்குச் சாத்தின திருநாமமாகும். வெகுநாட்கள் ப்ருந்தாவனத்தில் வாழ்ந்த நாதமுனிகள் தம் திருப்பேரனார்க்கு இப்பெயரை இடும்படி நியமித்தது பொருத்தமுடையதன்றோ?



பராங்குசர் - புறச்சமயிகள் என்னும் யானைகளை வருத்தும் அங்குசம் (மாவட்டி) போன்றிருத்தலால் நம்மாழ்வார்க்குத் திருப்பெயராகிய இது பெரியநம்பிகளின் இயற்பெயராகும். வாக்யகுருபரம்பரையில் பெரியநம்பிகளை ஸ்ரீபராங்குசதாஸர் என்றன்றோ நாம் அநுஸந்தித்துப் போருவது. பெரியநம்பி என்பதும், ஆழ்வாருடைய - 'பெரியவண்குருகூர் நம்பி' என்பதனுடைய ஸங்க்ரஹமென்பர்.

எம்பெருமானார் ஆளவந்தார் திருவடித்தாமரைகளில் ஈடுபாடு கொண்டதும், பெரியநம்பிகளிடத்தில் மோக்ஷோபாயமான ப்ரபத்திரூபமான வித்யையை (=த்வய மந்த்ரத்தை) உபதேசம் பெற்றதும் குருபரம்பராப்ரபாவாதி க்ரந்தங்களில் ப்ரஸித்தம்.

அத்தகைய எம்பெருமானார் ஸன்னிதியில் ஆழ்வான் தம்முடைய ஸர்வபரங்களையும் ஸமர்ப்பித்தமை, 'யோநித்யம் அச்சுத' என்ற ச்லோகத்தில் 'ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே' என்று எம்பெருமானார் திருவடிகளில் சரணம் புகுந்தமை கொண்டு அறியலாகும். பரஸமர்ப்பணமென்பது சரணாகதனுக்கு ஏற்படும் ஸ்வபாவமன்றோ?

லக்ஷ்மணன் - இது இளையபெருமாளின் திருநாமம். 'இளையபெருமாளைப்போல் ஸகல கைங்கர்யங்களையும் செய்வர் இவர்' என்று பெரியதிருமலைநம்பிகளின் திருவுள்ளத்தில் தோன்றியதனால், அவர் தம் மருமகனாரான எம்பெருமானார்க்கு, லக்ஷ்மணன் (=இளையாழ்வார் - ராமாநுஜன்) என்று திருநாமம் சாத்தியதாக, குருபரம்பராப்ரபாவ நூல் கூறுவது காணத்தக்கது. 'லக்ஷ்மீவாந் லக்ஷ்மண: ச்ரீல: ச்ரீமாந்' என்ற அமரகோசத்தின்படி லக்ஷ்மணசப்தம் செல்வமுடையவனைக் காட்டும். பகவத்கைங்கர்ய

மாகிற செல்வமுடையவர்களன்றோ இளையபெருமாளும் இளையாழ்வாரும்!

ஆழ்வானுடைய ராமாநுஜபக்தி, 'ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே' (ஸ்ரீவை.1), 'ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி' (வரத.102), 'ராமாநுஜார்ய வசக: பரிவர்த்திஷீய' (ஸுந்.129) என்னுமிவ்விடங்களில் காணலாகும். இவற்றுள் முதலிரண்டிடங் களில் ஆழ்வான் தாம் எம்பெருமானார் திருவடிகளில் சரணம் புகுந்ததாகவும், மூன்றாமிடத்தில் எம்பெருமானார்க்குப் பரதந்த்ரராய், அவர்தம் திருவடி நிழலில் தாம் நித்யவாஸம் செய்ய வேண்டுவதாகவும் உள்ளமை நினைக்கத் தக்கது. (2)

आचार्यवर्यविभवस्य च शिष्यवृत्तेः
सीमेति देशिकवरैः परितुष्यमाणम्।
नित्यानवद्यकरुणाविलसत्कटाक्षं
श्रीवत्सचिह्नगुरुमन्वहमाश्रयामि।। ३ ।।

*ஆசார்யவர்யவிப$_4$வஸ்ய ச ஶிஷ்யவ்ருத்தே:*
*ஸீமேதிதே$_3$ஶிகவரை: பரிதுஷ்யமாணம்,*
*நித்யாநவத்$_3$யகருணாவிலஸத்கடாக்ஷம்*
*ஸ்ரீவத்ஸசிஹ்நகு$_3$ருமந்வஹமாஶ்ரயாமி. (3)*

ஆசார்யவர்ய விபவஸ்ய - மஹாசார்யர்க்கு உரிய பெருமைக்கும், சிஷ்யவ்ருத்தே: ச - சிஷ்யர்க்குத் தக்க நடத்தைக்கும், ஸீமா இதி - இவர் எல்லைநிலமானவர் என்று, தேசிகவரை: - ஆசார்ய ச்ரேஷ்டர்களாலே, பரிதுஷ்யமாணம் - மிகமகிழ்ச்சியோடு கொண்டாடப்பெற்றவரும், நித்ய அநவத்ய கருணா விலஸத் கடாக்ஷம் - எப்போதுமுள்ளதாய் குற்றமற்றதுமான கருணையினால் குளிர்ந்து விளங்குகின்ற கடைக்கண் பார்வையை உடையவருமான, ஸ்ரீவத்ஸசிஹ்நகுரும் - கூரத்தாழ்வானை, அந்வஹம் ஆச்ரயாமி - தினமும் ஸேவிக்கிறேன்.



ஆசார்யனுடைய முக்கியமான பெருமை - சிஷ்யனுடைய உஜ்ஜீவனத்திலே ஊன்றிப் போருகை. சிஷ்யனுடைய முக்கியமான நல்ல நடத்தை ஆசார்யனுடைய திருமேனியிலே கண்ணும் கருத்துமாயிருக்கை. "ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணக் கடவன்;" என்ற ஸ்ரீவசனபூஷண சூர்ணிகை(333)யும், 'ஆசார்யன் சிச்சனாருயிரைப் பேணுமவன் - தேசாருஞ்சிச்சன் அவன் சீர்வடிவை - ஆசையுடன் நோக்குமவன்' என்னும் உபதேசரத்தினமாலை(65) பாசுர அடிகளும் இதில் ப்ரமாணமாகும். மோக்ஷ விரோதியாய் ஆத்ம ஸ்வரூப விநாசத்தை உண்டாக்குகின்ற பாகவதாபசாரத்திலே ஊன்றி நின்ற பிள்ளைப் பிள்ளையாழ்வானை ஸதுபதேசத்தாலே திருத்தி பாகவதாபசாரம் நேராதவாறு செய்து அவருடைய ஆத்ம ஸ்வரூபத்தை ரக்ஷித்த ஆசார்ய லக்ஷணம் ஆழ்வானிடம் மிகப் பொருந்தும். இது ஸ்ரீவசனபூஷணம் 203 'பிள்ளைப் பிள்ளையாவானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையை ஸ்மரிப்பது' என்ற இடத்தில் காணத்தகும். நாலூரான் ஆழ்வான் சிஷ்யனென்று தெரிவிக்கும் பெரிய திருமுடியடைவு ப்ராமாணிகமாகில், 'நான் பெற்ற பேறு நாலூரானும் பெற வேணும்' என்று பேரருளாளப் பெருமாளிடம் வேண்டிக் கொண்டு அவனுடைய ஆத்ம ஸ்வரூபத்திலே ஊன்றியிருந்தமை கொண்டும் ஆசார்யலக்ஷணம் ஆழ்வானிடம் குறைவறப் பொருந்தும். 'நாலூரான் தனக்கு முத்தி நல்கினான் வாழியே' என்ற ஆழ்வான் வாழித் திருநாமமும் இது தன்னை வலியுறுத்தும். இனி ஆசாரியனது திருமேனியைக் காப்பாற்றுகையாகிற சிஷ்ய லக்ஷணமும், எம்பெருமானாரைஅழைத்துச் செல்வதற்காகச் சோழராஜ படர்கள் வர, அவருடைய காஷாய த்ரிதண்டங்களைத் தாமே தாங்கி அவருக்குப் பிரதிநிதியாகச் சோழராஜஸபைக்கு எழுந்தருளிப் பரதத்வநிர்ணயம் செய்து, அது காரணமாகத் தமது

திருமேனிக்கு நேர்ந்த ஆபத்தையும் பொருட்படுத்தாமலிருந்து எம்பெருமானார் திருமேனியைக் காப்பாற்றிய ஆழ்வானிடம் பொருந்தத் தட்டில்லை. இவ்விஷயத்தை ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தின் முடிவில், யாரோ ஒரு பெரியவரால் இயற்றப்பட்டு எல்லோராலும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற 'வ்யக்தீ குர்வந்' என்னும் ச்லோகத்தின் ஈற்றடியான - '(ஈடே) ஸ்ரீவத்ஸாங்கம் ச்ருதிமத குருச்சாத்ர சிலைகதாம' என்ற இடத்தில் காணலாம். வேத ஸித்தமான - குருவினுடையவும் சிஷ்யனுடையவும் நல்ல நடத்தைகளுக்கு நிகரற்ற இருப்பிடமான கூரத்தாழ்வானைத் துதிக்கிறேன்' என்பது இதற்குப் பொருள்.

இனி மூன்றாவது பாதத்தில் பணிக்கப்பட்ட - ஆழ்வானுடைய கருணா கடாக்ஷத்தின் பெருமை - ஒரு ப்ராஹ்மண குமாரன் பௌத்த மதத்தில் சேர்ந்து பூணூலையும் குடுமியையும் அறுத்துப் போகட்டிருந்தவன் ஆழ்வானுடைய கடாக்ஷம் பெற்றவுடன் அவற்றைத் தரித்துக் கொண்டான் என்ற சரித்திரத்தினால் புலப்படுகின்றது. இச்சரித்திரம் சிலையிலங்கு பொன்னாழி (பெரிய திருமொழி 8-1)யின் வ்யாக்யான ப்ரவேசத்தில் பெரியவாச்சான் பிள்ளையினால் காட்டப்பட்டுள்ளது. (3)

रामानुजार्यमतसिन्धुविधो कुदृष्टि
बाह्यान्धकारपटलीहरणाब्जबन्धो ।
अस्मद्गुरोर्जनक भट्टपराशरस्य
श्रीवत्सचिह्नशरणं भव मे दयालो ।। ४ ।।



ராமாநுஜார்யமதஸிந்து$_4$விதே$_4$ா! குத்$_3$ருஷ்டி
ப$_3$ாஹ்யாந்த$_4$காரபடலீஹரணாப்$_3$ஜப$_3$ந்தே$_4$ா!
அஸ்மத்$_3$கு$_3$ரோர்ஜநக! ப$_4$ட்டபராஶரஸ்ய
ஸ்ரீவத்ஸசிஹ்ந ஶரணம் ப$_4$வ மே த$_3$யாளோ! (4)



ராமாநுஜார்யமத ஸிந்து விதோ - எம்பெருமானார்க்கு இஷ்டமான விசிஷ்டாத்வைத மதமென்கிற கடலுக்குப் பொங்கு தலையுண்டு பண்ணும் சந்திரனே!, குத்ருஷ்டி - வேதத்திற்கு அவப் பொருள் கூறும் சங்கராதிகளாலும், பாஹ்ய -வேதத்திற்குப் புறம்பான ஜைநபௌத்தாதிகளாலும் உண்டாக்கப்பட்ட, அந்தகாரபடலீ - அஜ்ஞானமாகிய இருளின் திரட்சியை போக்கும் சூரியனே, அஸ்மத் குரோ: - அடியேனுடைய ஆசாரியரான, பட்டபராசரஸ்ய - ஸ்ரீபராசரபட்டருக்கு, ஜநக - தந்தையானவரே! தயாளோ - தயையுடையவரே!, ஸ்ரீவத்ஸசிஹ்ந - கூரத்தாழ்வானே! (தேவரீர்), மே - அடியேனுக்கு, சரணம் பவ - தஞ்சமாக வேணும்.

முதல் மூன்று ச்லோகங்களால், இந்நூலாசிரியர் ஆழ்வானைத் தாம் ஆச்ரயிப்பதாகக் கூறி, இந் நான்காவது ச்லோகத்தினால் அவரையே ஸம்போதித்து, தேவரீர் அடியேனுக்கு சரணமாக (உபாயமாக) ஆக வேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

பௌர்ணமியன்று சந்திரன் கடலைப் பொங்கச் செய்கிறான். ஆழ்வானாகிற சந்திரன் எம்பெருமானார் தரிசனமாகிற கடலை மிகவும் வளரச் செய்கிறான். சூரியன் வெளியிருளைப் போக்குகிறான். ஆழ்வானாகிற சூரியன் - வேதத்தைப் பிரமாணமாக இசையாத ஜைன பௌத்தாதிகளாலும் வேதத்தை ப்ராமாணமாக ஒப்புக் கொண்டு அதற்குத் தான் தோன்றி யாக அவப்பொருள் கூறும் சங்கராதிகளாலும் தம்தம் நீசமதங்களை ப்ரசாரம் செய்து மக்களுக்கு உண்டாக்கப்பட்ட அறியாமையாகிய அகவிருளைப் போக்குகிறான். இவ்வொப்புமையைக் கொண்டு ஆழ்வானைச் சந்திரனாகவும் சூரியனாகவும் உருவகப்படுத்தினார் முதலிரண்டடிகளால். இந் நூலாசிரியர்க்குப் பராசரபட்டர் ஆசார்யராகையால், அவருக்குப் பிதாவான ஆழ்வானை 'அஸ்மத் குரோ: பட்டபராசரஸ்ய ஜநக!' என்று ஸம்போதித்தார்.

நான்காவது பாதத்தால் - தத்துவத்தைப் பற்றிய அறியாமையைப் போக்குமவராய், தத்துவ அறிவை உண்டாக்கும்

எம்பெருமானார் மதத்தை அபிவிருத்தி செய்பவராகிய தமது ப்ராசார்யராம் ஆழ்வானை மோக்ஷோபாயமாக வேணுமென்று ப்ரார்த்தித்தார். ஆசார்யரைச் சரணமடைவது போல, ப்ராசார்யரையும் சரணமடைய வேணுமென்பது - ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவாரம்பத்தில் 'ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே' என்று தம்முடைய ஆசார்யரான எம்பெருமானாரைச் சரணம் பற்றியவர். அடுத்த ச்லோகத்தில் 'தத் ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம்' என்று எம்பெருமானார்க்கும் ஆசார்யரான நம்மாழ்வாரைச் சரணம் பற்றியது கொண்டு அறியலாகும். 'மாறனடி பணிந்து உய்ந்தவன்' என்று = எம்பெருமானார்க்கு மாறன் ஆசார்யராக அருளிச் செய்தாரிறே அமுதனார். சக்தியும் தயையுமுடையவனையே சரணம் பற்ற வேஸணுமாகையால், அறியாமையைப் போக்கி அறிவைத் தரும் ராமாநுஜமதத்தை வளர்க்கும் சக்தியை முன்னிரண்டடிகளால் கூறி, கடைசியில் 'தயாளோ' என்று தயை உடைமையைக் குறிப்பிட்டு, அத்தகைய ஆழ்வானை 'சரணம் பவ' என்று - இச்லோகத்தினால் - தஞ்சமாக வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. (4)

श्रीवत्सचिह्न भवतश्चरणारविन्द
सेवामृतैकरसिकान् करुणासुपूर्णान् ।
भट्टार्यवर्य निगमान्तमुनीन्द्र लोक
गुर्वादि देशिकवरान् शरणं प्रपद्य ।।५ ।।



*ஸ்ரீவத்ஸசிஹ்ந! ப$_{4}$வதஶ்சரணாரவிந்த$_{3}$*
*ஸேவாம்ருதைகரஸிகாந் கருணாஸுபூர்ணாந்*
*ப$_{4}$ட்டார்யவர்ய நிக$_{3}$மாந்தமுநீந்த்$_{3}$ர லோக*
*கு$_{3}$ர்வாதி$_{3}$ தே$_{3}$ஶிகவராந் ஶரணம் ப்ரபத்$_{3}$யே.* (5)



ஸ்ரீவத்ஸசிஹ்ந - கூரத்தாழ்வானே! பவத: - தேவரீருடைய, சரணாரவிந்த ஸேவாம்ருத ஏக ரஸிகாந் - திருவடித் தாமரைகளில் பண்ணும் கைங்கர்யமாகிய அம்ருதமொன்றையே சுவைப்பவர்களும், கருணா ஸுபூர்ணாந் - தயையினால் மிகவும் நிறையப் பெற்றவர்களுமான, பட்டார்யவர்ய - தேவரீர் திருக்குமாரராய் அடியேனுக்கு ஆசார்யரான ஸ்ரீபராசரபட்டரென்ன, நிகமாந்தமுநீந்த்ர லோககுரு ஆதி தேசிகவராந் - அவரை ஆச்ரயித்த நஞ்சீயரென்ன, அந் நஞ்சீயர் சிஷ்யரான நம்பிள்ளையென்ன, இவர்கள் முதலான ஆசார்யச்ரேஷ்டர்களை, சரணம் ப்ரபத்யே - சரணம் பற்றுகிறேன்.

முன் ச்லோகத்தில் ஆழ்வானைச் சரணம் பற்றியவர் இந்த ச்லோகத்தில் அவருடைய உகப்புக்கு இலக்காகிய சிஷ்ய பரம்பரையையும சரணம் புகுகிறார். அதுதன்னில் முதலில் தம்மாசார்யரான பராசரபட்டரையும் பின்பு மற்றவர்களையும் குறிப்பிட்டுள்ளார். பட்டருக்கு எம்பார் போலக் கூரத்தாழ்வானும் ஆசார்யராவார். இவ்விஷயம் பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்ய மங்கள ச்லோகத்தில் 'வுந்தே கோவிந்த தாதௌ' (= எம்பாரையும் தமப்பனாரையிம் வணங்கித் துதிக்கிறேன்) என்று அருளியது கொண்டு அறிதல் தகும்.

நிகமாந்த முனி - (வேதாந்த முனி) என்பது நஞ்சீயரை. லோககுரு - நம்பிள்ளை. இப்பெயர் நம்பிள்ளைக்கு - கந்தாடைத் தோழப்பரால் உகந்து சாத்தப் பெற்றதாகும். தேசிக: திசதி - உபதிசதீதி தேசிக: என்னும் வ்யுத்பத்தியினால் தேசிக; என்பது ஹிதோபதேசம் பண்ணும் ஆசார்யனுக்குப் பெயராயிற்று. ஆழ்வானுடைய சிஷ்யர்களைச் சரணம் புகுதல் ஆழ்வானுக்கு உகப்பை உண்டு பண்ணுமாதலால் அவர்களையும் இச்லோகத்தால் சரணம் புகுந்தாராயிற்று. அல்லது - இது தன்னைப் புருஷகார சரணாகதியாகவும் கொள்ளலாம். இதற்கு த்ருஷ்டாந்தமாக - மணவாளமாமுனிகற் யதிராஜவிம்சதியில், 'ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாதி மூர்த்நா' என்றும், 'ஸ்ரீவத்ஸசிஹ்நசரணம் யதிராஜமீடே'

என்றும் 'எம்பெருமானாரை வணங்கித் துதித்தபின்பு,'கூராதிநாத குருகேச முகாத்ய பும்ஸாம் பாதாநுசிந்தநபர: ஸததம் பவேயம்' என்று - எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயித்த கூரத்தாழ்வான், திருக்குருகைப் பிரான் பிள்ளான் தொடக்கமானாருடைய திருவடிகளை எப்போதும் த்யானிக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டதனை அனுஸந்தித்தல் யுக்தம்.

(5)

श्रीरङ्गराजमहिषीकरलालनेन
सम्प्राप्तसर्वविभवस्य पराशरस्य ।
कुर्यां मदन्वयगुरोः गुरुतां गतस्य
कूराधिपस्य गुणचिन्तनमन्तरङ्गैः ।।६।।

ஸ்ரீரங்கராஜ மஹிஷீகரலாலநேந
ஸம்ப்ராப்த ஸர்வவிப₄வஸ்ய பராஶரஸ்ய,
குர்யாம் மத₃ந்வயகு₃ரோ: கு₃ருதாம் க₃தஸ்ய
கூராதி₄பஸ்ய கு₃ணசிந்தநமந்தரங்கை₃:. (6)

ஸ்ரீரங்கராஜ மஹிஷீகர லாலநேந - ஸ்ரீரங்க நாச்சியாரால் தமது திருக்கைகளில் எடுத்துச் சீராட்டப் பெற்றதனால், ஸம்ப்ராப்த ஸர்வவிபவஸ்ய - நன்றாகப் பெற்ற எல்லாப் பெருமைகளையும் உடையவரும், மதந்வயகுரோ: - அடியேனுடைய குலத்திற்குத் தலைவருமான, பராசரஸ்ய - ஸ்ரீபராசரபட்டருக்கு, குருதாம் கதஸ்ய - தமப்பனாராகுந்த தன்மையை அடைந்த, கூராதிபஸ்ய - கூரத்தாழ்வானுடைய, குண சிந்தநம் - குணாநுபவத்தை, அந்தரங்கை: (ஸஹ) - நெருங்கிய நண்பர்களுடன் கூடி, குர்யாம் - செய்யக் கடவேன்.

முன் ச்லோகத்தில் ஆழ்வானுடைய சிஷ்ய பரம்பரையைச் சரணம் பற்றி, தமக்கு அந்தரங்கர்களான அச்சிஷ்யர்களுடன் கூடி



ஆழ்வானுடைய திருக்கல்யாணகுணங்களை அனுபவிக்க ஆசைப்படுகிறார் இச்லோகத்தில். ஸதாசார்ய குணாநுஸந்தான மன்றோ ஸச்சிஷ்யனுக்குஉத்தாரகம்.

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யும்போது, போதாயன வ்ருத்தி க்ரந்தத்தைத் திருவுள்ளத்தில் தரித்திருந்து அவருக்கு உசாத்துணையாக இருந்ததனால் ஜ்ஞானமும், பகவத் குணங்களில் ஆழங்கால் பட்டு ஆழ்வான் என்ற திருநாமம் பெற்றதனால் பக்தியும், கூரத்திலுள்ள ஸமஸ்தைச்வர்யத்தையும் பரித்யஜித்து, தேவியார் மடியிலிருந்த வெள்ளிப் பாத்திரத்தையும் புதரிலே எறிந்து, எம்பெருமானார் திருவடிகளே தநமென்று அவர் பின்னே ஸ்ரீரங்கத்திற்குச் சென்றதனால் வைராக்யமும், தம்மைப் பகைத்த நாலூரானுக்கும் மோக்ஷத்தை அபேக்ஷித்ததனால் தயையும் முதலான ஆழ்வானுடைய குணங்கள் அனந்தமிறே. அவற்றை ஒரிருவர் அனுபவித்தால் பர்யாப்தி பிறவாமல், ஆழ்வானுக்கும் தமக்கும் அந்தரங்கர் களான பலரோடும் சேர்ந்து அனுபவித்து ஆனந்திக்க ஆசைப்படுவது யுக்தமிறே.

ஆழ்வானுக்குப் பல பெருமைகள் இயற்கையாக இருக்கச் செய்தே, பராசரபட்டருக்குத் தமப்பனாரும் ஆசார்யருமாயிருக்கையும் ஒரு பெருமையாதலால், 4ம் ச்லோகத்தில் 'அஸ்மத் குரோ: பட்டபராசரஸ்ய ஜநக' என்று குறித்தது போதாதென்று, இந்த ச்லோகத்திலும் 'மதந்வயகுரோ: குருதாம் கதஸ்ய' என்று அப் பெருமையை வெளியிடுகிறார். குரு: என்பது பிதாவையும் ஆசார்யனையும் குறிக்கும்.

பட்டருடைய பெருமையாவது - ஸ்ரீரங்க நாச்சியாராலே சீராட்டி வளர்க்கப் படுதலாகும். கூரத்தாழ்வான் தேவிகளான ஆண்டாளுக்கு முதலில் ஒரு பிள்ளை பிறந்து மரிக்க, பின்பு பட்டர் அவதரித்தவுடன், 'இவனாவது ஜீவிக்கட்டும்', என்று எம்பெருமானார் பட்டரை ஸ்ரீரங்க நாச்சியாருக்கு - தேவரீர் தத்த புத்ரனாக இவனை வளர்க்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு

கொடுத்ததனால் அப்பிராட்டியார் அவரைச் சீராட்டி வளர்த்தமை கூறப்பட்டது. இவ்விஷயம் திருவாசிரியம் முதற் பாட்டு வ்யாக்யானத்தில் பெரியவாச்சான் பிள்ளையால் குறிக்கப் பட்டுள்ளமை காணத்தக்கது. இக்காரணத்தால் அனந்தாழ்வான் பட்டரை 'பெரியபிராட்டியார் மகன்' என்றே குறிப்பிடுவராம்., இப்படிப்பட்ட பட்டருடைய குரு என்பது ஆழ்வானுடைய பெருமைகளில் சிறந்தொன்றாம். பெரியபெருமாளும் பெரிய பிராட்டியாரும் தத்தம் மடிகளிருத்திச் சீராட்டி வளர்க்கப் பெற்றதனால் தமக்கு ஸ்ரீரங்கராஜஸ்தவம் அருளிச் செய்வதில் துணிவுண்டானதாக, பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ பூர்வசதகம் 17வது ச்லோகத்தில் அருளிச் செய்துள்ளமை இங்கு நினைக்கத்தக்கது. இப்படிப்பட்ட பெருமையினால் மற்றுமுள்ள எல்லாப் பெருமைகளையும் பட்டர் பெற்றிருப்பரென்பதில் ஸந்தேஹமேதுமில்லையன்றோ?

பட்டர் திருவம்சமென்று இப்போதும் பிரசித்தி பெற்றுள்ள வம்சத்திற்குத் தலைவர் பட்டரேயாகையால், அவர் - நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் குலத்திற்குத் தலைவரானார். (6)

वैराग्यभक्तिजलधेः कृतिनश्च सत्य
सङ्कल्पनस्य मृदितारिगणास्य नाथ ।
श्रीवत्सचिह्न पुरतस्तव गन्तुमेव
नार्होऽहमेवमधुना प्रलपामि हन्त ।। ७ ।।



*வைராக்$_3$ய பக்திஜலதே$_4$: க்ருதிநஶ்ச ஸத்ய*
*ஸங்கல்பநஸ்ய ம்ருதி$_3$தாரிக$_3$ணஸ்ய நாத$_2$,*
*ஸ்ரீவத்ஸசிஹ்ந புரதஸ்தவ க$_3$ந்துமேவ*
*நார்ஹோऽஹமேவமது$_4$நா ப்ரலபாமிஹந்த. (7)*



நாத ஸ்ரீவத்ஸசிஹ்ந - ஸ்வாமீ கூரத்தாழ்வானே! வைராக்ய பக்தி ஜலதே: - உலகப்பொருளில் ஆசையில்லாமை என்னும் வைராக்யத்திற்கும், எம்பெருமானிடம் ஆசையுள்ளமையாகிற பக்திக்கும் கடல் போன்றவரும், க்ருதிந: - பண்டிதரும், ஸத்ய ஸங்கல்பநஸ்ய - நினைத்தமாத்திரத்தில் எதையும் ஸாதிக்க வல்லவரும், ம்ருதித அரிகணஸ்ய - காமம் வெகுளி மயக்கம் முதலிய உட்பகைக் கூட்டத்தை அழித்தவருமாகிய, தவ புரத: - தேவரீருடைய எதிரில், கந்துமேவ - சென்று நிற்பதற்குக் கூட, அஹம் ந அர்ஹ: - (குற்றம் நிறைந்து குணங்களில் ஒன்றும் இல்லாத) அடியேன் தகுந்தவனல்லேன். (இப்படியிருக்க), அதுநா - இப்போது, ஏவம் ப்ரலபாமி - இங்ஙனம் (ஸ்தோத்ரம் என்றிட்டு எதையோ) பிதற்றுகிறேன்; ஹந்த - கஷ்டம்!

குணாநுபவம் செய்யக்கடவேன் என்று முன் ச்லோகத்தில் பாரித்தவர், அத்தகைய குணாநுபவம் வழிந்து சொற்களாகப் புறப்படுதலாகிற ஸ்தோத்ரத்தைச் செய்ய எண்ணி, அதற்குத் தமக்குத் தகுதியில்லையென்று நைச்யாநுஸந்தானம் செய்கிறார் இந்த ச்லோகத்தால்.

காமம், வெகுளி, உலோபம், மயக்கம், செருக்கு, பொறாமை ஆகிய உட்பகையை அறவே வென்று, ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் முதலிய குணங்கள் நிறைந்த கூரத்தாழ்வானைத் துதி செய்ய வேணுமென்றால், அத்தகைய ஒருவனே தகுதி பெற்றவனாவான். அதற்கு எதிர்த்தட்டாக உட்பகையை வெல்லாமல் முற்கூறிய குணங்களில் ஏதுமில்லாத அடியேன் - வெறுமனே தேவரீரெதிரே வந்து நிற்கவும் யோக்யதை இல்லாதிருக்கவும் ஸ்தோத்ரமென்று பேர்வைத்து ஏதோ ஒன்றை உளறத் தொடங்குகின்றேனே, இது என்னாய் விடுமோ! கஷ்டம் என்கிறார்.

காமமில்லை என்பது - அழகியமணவாளனுடைய அரவணை ப்ரஸாதத்தின் இரண்டு திரளைகளே பட்டரும் சீராமப் பிள்ளையும் அவதரிக்கக் காரணமாயிருந்தன என்று

குருபரம்பரைநூல் தெரிவிப்பதனால் தெளியலாம். தமக்கு ஆபத்து விளையக் காரணமாயிருந்த சோழனையோ நாலூரானையோ வாயால் சபிக்காமையால் கோபமில்லை என்பதும், கூரைச்வர்யத்தை விட்டு வந்தமையால் பணத்தில் பற்றுள்ளமாகிற உலோமிலை என்பதும், மஹா வித்வானாகை யாலே மோஹம் (திரிபுணர்ச்சி, ப்ரமம்) இல்லை என்பதும், 'வஞ்சமுக்குறும்பாம் குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான்' என்ற - நேரே ஸேவித்துச் சிஷ்யரான அமுதனாரின் ஸத்யவாக்கினால் கல்விச் செருக்கும் செல்வச் செருக்கும் கலச் செருக்கும் ஆகிய மதமில்லை என்பதும், இக் குற்றங்களைந்தும் இல்லை என்கையாலே, இவையுள்ளவர்களுக்கே ஏற்படும் பொறாமை யில்லை என்பதும் அறியவெளிதாகும்.

க்ருதிந் சப்தத்திற்கு, 'தீமாந் ஸூரி: க்ருதீ' என்றும், 'க்ருதீ குசல:' என்றுமுள்ள அமரகோசத்தின்படி பண்டிதன் என்றும் ஸமர்த்தன் என்றும் முறையே இரண்டு பொருள்கள் உள்ளனவேலும், ஜ்ஞான பக்தி வைராக்யங்களில் 'வைராக்ய பக்தி ஜலதே:' என்று பக்தியும் வைராக்யமும் கூறப்பட்ட படியாலே எஞ்சியுள்ள ஞானத்தைச் சொல்லுவது அவசியமாகை யால் இங்கு 'க்ருதீ' என்பதற்குப் பண்டிதனென்று பொருள் கூறப்பட்டது. பண்டிதன் = ஞானமுடையவன். பண்டா = ஞானம்.

मायाविदूरमनसां मधुराकृतीनां
मात्सर्यलोभमदमानविवर्जितानाम् ।
श्रीवत्सचिह्न भवतश्चरणाश्रितानां
अन्तर्गतोऽस्यहमहो विभयश्चरामि ।। ८ ।।

*மாயாவிதூ$_3$ரமநஸாம் மது$_4$ராக்ருதீநாம்*
*மாத்ஸர்யலோப$_4$மத$_3$மாநவிவர்ஜிதாநாம்,*



*ஸ்ரீவத்ஸசிஹ்ந ப$_4$வதஶ்சரணாஶ்ரிதாநாம்*
*அந்தர்க$_3$தோஸ்யஹமஹோ விப$_4$யஶ்சராமி. (8)*

ஸ்ரீவத்ஸசிஹ்ந - வாரீர் கூரத்தாழ்வானே! மயா விதூர மநஸாம் - கபடத்திற்கு வெகுதூரத்திலுள்ள மனதையுடையவர்களும், மதுர ஆக்ருதீநாம் - காண்பதற்கினிய திருமேனியை உடையவர்களும், மாத்ஸர்ய லோப மத மாந விவர்ஜிதாநாம் - பொறாமை, உலோபித்தனம், விஷயபோகக் களிப்ப, செருக்கு இவற்றால் அடியோடு விடப்பட்டவர்களுமான, பவத: சரண ஆச்ரிதாநாம் - தேவரீர் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றினவர்களுக்குள்ளே, அஹமபி - அடியேனும், அந்தர்கத: - உட்பட்டவனாய்க் கொண்டு, விபய: சராமி - பயமற்றவனாய்த் திரிகிறேன்; அஹோ - ஆச்சர்யம்.

தேவரீரெதிரில் வந்து நிற்பதற்கும் ஒன்று விண்ணப்பிப்பதற்கும் அடியேனுக்குத் தகுதியில்லாமல் இருப்பினும், வந்து நின்று ஏதோவென்றைச் சொல்லுகிறேன் என்ற குற்றம் ஒன்றேயன்று. தேவரீர் திருவடிகளுக்கு நல்லவர்களான பெரியோர்களின் நடுவே அடியேனும் ஒருவனாய், அச்சங்கெட்டுத் திரிகிறேனே! இதைவிடக் குற்றம் உண்டோ? 'யச்சீல: ஸ்வாமீ, தச்சீலோ தாஸ:' (ஸ்வாமி எத்தகைய நடத்தைகளை உடையவரோ, தாஸனும் அத்தகைய நடத்தைகளை உடையவன்) என்ற வசனத்தின்படி, தேவரீருடைய அடியவர்கள் தேவரீரைப்போல் நல்லவர்கள் ஆகையால் ஸம்ஸாரபயமின்றி 'நமக்கு மோக்ஷம் கிடைப்பது நிச்சயம்' என்று ஸந்தோஷமாகத் திரியலாம். அவர்களுடைய நன்மைகளில் ஏகதேசமுமில்லாத அடியேன்கூட அவர்கள் நடுவே பயமில்லாமல் களித்துத் திரிகின்றேனே! இது அடியேனுக்கும் ஆச்சர்யமாக இருக்கிறது என்கிறார். இங்கு 'மதுராக்ருதீநாம்' என்று ஆழ்வானடியார் களுடைய அழகிய திருமேனியைக் குறிப்பிட்டருளியது - இத் திருமேனியழகைக் கொண்டே இதற்கு முன்பும் பின்பும் சொல்லிய மாயை மாத்ஸர்யம்

முதலிய தோஷங்கள் இல்லாமையை ஊஹித்தறியலாம் என்பதற்காக. 'ரூபமேவ அஸ்ய ஏதத் மஹிமாநம் வ்யாசஷ்டே' (=இவருடைய இந்தத் திருமேனி அழகே இவருடைய பெருமையை விளக்குகிறது) என்றன்றோ வசனமிருக்கும்படி!

(8)

कूराधिप त्रिविधतापनिदानमेतत्
संरक्ष्य हेयतरमेव कलेबरं हा।
आत्मस्वरूपमतिनिर्मलमत्युपेक्ष्य
तस्यानुरूपफलशून्य इहैव वर्ते।। ९।।

கூராதி₄ப த்ரிவித₄தாபநித₃ாநமேதத்
ஸம்ரக்ஷ்ய ஹேயதரமேவ கலேப₃ரம் ஹா,
ஆத்மஸ்வரூபமதிநிர்மலமத்யுபேக்ஷ்ய
தஸ்யாநுரூபப₂லஶூந்ய இஹைவ வர்தே. (9)

ஹே கூராதிப - கூரத்தாழ்வானே! த்ரிவித தாப நிதாநம் (அத ஏவ) - மூன்றுவகைக் கஷ்டங்களுக்கும் மூலகாரணமாகையாலே, ஹேயதரம் - அடியோடு விடத்தக்கதான, ஏதத் - இந்த (அசுத்தமான), கலேபரமேவ - சரீரத்தை மட்டுமே, ஸம்ரக்ஷ்ய - நன்றாகக் காப்பாற்றி, அதிநிர்மலம் - மிகவும் பரிசுத்தமான, ஆத்மஸ்வரூபம் - பகவச்சேஷமான எனது ஆத்மஸ்வரூபத்தை, அதி உபேக்ஷ்ய - மிகவும் அலக்ஷ்யம் செய்து, தஸ்ய அநுரூப பல சூந்ய: - அத்தகைய ஆத்மஸ்வரூபத்துக்குத் தக்க மோக்ஷமாகிய பயன்பெறாதவனாய், இஹைவ வர்தே - இவ்வுலகிலேயே இருக்கிறேன்; ஹா - கஷ்டம்!

"தோஷங்களே நிறைந்த நீர் உம்மைப் போன்றவர்களின் நடுவே திரியலாமே, நல்லோர்களின் நடுவே திரிவானேன்?" என்று ஆழ்வான் தம்மைக் கேட்கக் கூடுமென்று கருதி, இதனால் அதற்கு



விடையளிக்கிறார். தேஹதாரணத்துக்கு வேண்டும்படி சிறிதளவே உண்டு, விஷயபோகங்களை நீக்கி, தேஹத்தை அலக்ஷ்யம் செய்து, பகவத்சேஷத்வமே ஸ்வரூபமான ஆத்மாவை அந்த ஸ்வரூபத்துக்குச் சேரும்படியாக பகவத் கைங்கர்யத்திலே செலுத்தினால், மோக்ஷம் கிடைக்கும். அவ்விரண்டும் அடியேனுக்கு இயலாத காரியங்கள். ஆகையால் தேவரீருடைய அபிமானம் கிடைக்குமாகையால், ஆசார்யாபிமானத்தாலே மோக்ஷம் பெற்று விடலாமென்று அவர்களின் பின்னே திரிகிறேன். மோக்ஷம் பெறாமல் இவ்வுலகில் இருக்க அடியேன் விரும்பவில்லை என்று பதிலளிக்கிறார்.

சரீரம் மூன்று வகைத் தாபங்களுக்கு மூலகாரணம். ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தைவிகம் என்பவை மூன்று தாபங்கள். ஆத்மா = சரீரமும் மனமும். பூதம் = பிராண. தைவம் = சூரியன் அக்நி. வாயு வருணன் முதலியவை. ஆக, சரீரத்தில் உண்டாகும் நோய்களும் மனத்தில் உண்டாகும் வேதனையும் ஆத்யாத்மிகம். சிங்கம், புலி, பாம்பு, தேள், பகைவர் முதலியவர்களால் உண்டாகுமது ஆதிபௌதிகம். அதிகமான வெயில், நெருப்பு, அதிகமான காற்று, பெருமழை முதலியவற்றால் உண்டாகுமவை ஆதிதைவிகம். இத்தகைய மூன்றுவிதமான கஷ்டங்களுக்கு மூலம் சரீரம். ஆகவே இதனை அலக்ஷ்யம் செய்யவேணும். ஜீவாத்மா பகவானுக்கு அடிமை செய்யத் தகுதி பெற்றிருக்கையாலே மிகவும் சுத்தமானது. அதுதன்னை பகவத் கைங்கர்யாதிகளைச் செய்து ஆதரிக்க வேணும். 'மணத்தையும் ஒளியையும் கொண்டு பூவையும் ரத்நத்தையும் விரும்புமாபோலே சேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது' என்றாரிறே பிள்ளைலோகாசார்யர்.

அவ்வாசிரியர்தாமே ஸ்ரீவசனபூஷணத்தில் ஸ்ரீவைஷ்ணவ திநசர்யா ப்ரகரணத்தில், 'தேஹயாத்ரையில் உபேக்ஷையும் ஆத்மயாத்ரையில் அபேக்ஷையும்' வேணுமென்று

அருளிச்செய்தது காணத்தக்கது. இவ்விரண்டும் இப்போதில்லாவிட்டாலும், ஆழ்வான் சிஷ்யர்களோடு சேர்ந்து அவற்றையும் ஸம்பாதித்துக் கொண்டு ஆசார்யாபிமானத்துக்க இலக்காகி, நிச்சயமாக முக்தி பெறலாமென்று - இந்த ச்லோகத்தினால் கருதினாராயிற்று. (9)

ज्ञात्वाऽप्यकृत्यकरणं विहिताप्रवृत्तिं
क्रूरप्रमत्त इव जात्वनुतापशून्यः ।
पापाकृतिस्त्वदनुबन्धिषु सज्जनेषु
कूराधिपाहमपि हृष्टमनाश्चरामि ।। १० ।।

ஜ்ஞாத்வாப்யக்ருத்யகரணம் விஹிதாப்ரவ்ருத்திம்
க்ரூரப்ரமத்த இவ ஜாத்வநுதாபஶூந்ய:
பாபாக்ருதிஸ்த்வத₃நுப₃ந்தி₄ஷு ஸஜ்ஜநேஷு
கூராதி₄பாஹமபி ஹ்ருஷ்டமநாஶ்சராமி. (10)

கூராதிப - கூரத்தாழ்வானே! அக்ருத்யகரணம் - செய்யத் தகாத காரியங்களை நாம் செய்கிறோமென்றும், விஹித அப்ரவ்ருத்திம் - சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நல்ல காரியங்களை நாம் செய்கிறோமல்லோமென்றும், ஜ்ஞாத்வா அபி - அடியேன் அறிந்து வைத்தும், க்ரூர ப்ரமத்த இவ - கொலையாளியாக் காம வெறியும் பிடித்தவன் போல, ஜாது - ஒருகாலும், அநுதாப சூந்ய: பச்சாத்தாபமற்றவனாய், பாப ஆக்ருதி: - (மேலும் பாபங்ககளையே செய்து) பாவமே வடிவெடுத்தவனாகிய, அஹமபி - அடியேனும், த்வத் அநுபந்திஷு - தேவரீரைச் சேர்ந்த நல்லோர்களின் நடுவில், ஹ்ருஷ்டமநா: - மனம் மகிழப் பெற்று, சராமி - ஸஞ்சரிக்கிறேன்; (ஹா - கஷ்டம்!)

முன்ச்லோகத்தில் கூறப்பட்ட தேஹரக்ஷணத்திற்கும் ஆத்மஸ்வரூப உபேக்ஷணத்திற்கும் காரணமான பாபத்தை ப்ரஸ்தாவித்து, அத்தகைய பாபத்தை புத்திபூர்வகமாகவே செய்து,



ஐயோ இப்படிப் பாவத்தைச் செய்து விட்டோமே என்ற கழிவிரக்கமுமில்லாமல் மேன்மேலும் பாவங்களையே செய்து கொண்டு உமக்கு வேண்டிய நல்லோர்களின் நடுவே திரிகின்றேனே. அடியேன் உய்ந்து போவது எங்ஙனம்? என்று கேட்கிறார் இந்த ச்லோகத்தினால்.

செய்யத்தகாதவற்றைச் செய்வதும் செய்ய வேண்டியவற்றைச் செய்யாமையும், முறையே தேஹ ரக்ஷணத்திற்கும் ஆத்ம ஸ்வரூபோபேக்ஷைக்கும் காரணங்களான பாவங்களாகும்.

ஆக இத்தால், பாபம் செய்தாலும் பச்சாதாபமுண்டாகில் மேலும் பாபம் செய்வதில் மனிதன் மூளமாட்டான். எம்பெருமான் பழைய பாவங்களை க்ஷமித்து முக்தி நல்கக் கூடும். பச்சாதாபம் விளையாமல் மேலும் தாம் பாபத்திலேயே மூண்டு பாவியேயானபடியால் அவன் முக்தியளிக்க மாட்டான். ஆழ்வானடியார்களில் சேர்ந்து ஆழ்வானுடைய அபிமானம் பெற்று அதனால் மோக்ஷம் பெறலாமென்று தாம் கருதியிருப்பதை வெளியிட்டருளினாராயிற்று. தமக்குப் பச்சாதாப முண்டாகாமை என்னும் விஷயத்தில் கொலையாளியும் காமவெறியனும் உபமானபூதர்கள், அவர்களிருவரும் பாபம் செய்வர். பச்சாதாபமடையார்களன்றோ? (10)

कूरान्वयस्य तव दोषचयस्तवेऽहं
सर्वात्मनाऽभिमत एव हि वत्सलस्य ।
स्वामिंस्तथापि मम तत्करणे तु हन्त
तापो भवत्यहरहःकथमुत्सहेय ।। ११ ।।

கூராந்வயஸ்ய தவ தே₃ாஷசயஸ்தவேஹம்
ஸர்வாத்மநாபி₄மத ஏவ ஹி வத்ஸலஸ்ய

*ஸ்வாமிந்ஸ்தத$_2$ாபி மம தத்கரேண து ஹந்த*
*தாபோ ப$_4$வத்யஹரஹ: கத$_2$முத்ஸஹேய? (11)*

ஸ்வாமிந் - ஸ்வாமீ கூரத்தாழ்வானே!, தோஷசயஸ்தவே - சொற்குற்றமும் பொருட்குற்றமுமே வடிவெடுத்த (தேவரீரைப் பற்றிய) ஸ்தோத்ரம் செய்யும் விஷயத்தில், கூராந்வயஸ்ய - (அடியேன் போல்) கூரகுலத்தில் உதித்தவரும், வத்ஸலஸ்ய - தோஷங்களை குணமாக நினைப்பவருமாகிய, தவ - தேவரீருக்கு அஹம் - அடியேன், ஸர்வாத்மநா - எல்லாவகையாலும், அபிமத: ஏவ ஹி - இஷ்டமானவனேயன்றோ?, ததாபி - அப்படியிருந்தாலும் மம து - எனக்கோவென்றால், தத்கரணே - அத்தகைய ஸ்தோத்ரம் செய்வதில், அஹரஹ: - தினந்தோறும், தாப:பவதி - கஷ்டம் உண்டாகிறது. கதம் உத்ஸஹேய -எங்ஙனம் இதில் முயல்வேன்? ஹந்த -கஷ்டம்.

'ஐயா, நீர் கபடம் பொறாமை முதலிய குற்றங்களுக்குக் கொள்கலமாகவும், சரீரத்தையே வளர்த்து ஆத்மாவை உபேக்ஷிப்பவராகவும், பாபங்களைச் செய்பவராகவும், உமக்கு எதிர்த்தட்டான என்னடியார்களின் நடுவே நல்லவர்போல் வேஷம் போட்டுக் கொண்டு திரிபவராகவும் இருக்கலாம், இவை யெல்லாம் நீர் நம்மை ஸ்தோத்ரம் செய்வதற்குத் தடையன்றே, மோக்ஷத்திற்குத் தடையாகில் அதைப் பற்றிப் பிறகு ஆராய்வோம். 'ஏவமதுநா ப்ரலபாமி' (7 ஸ்லோ. = இப்போது இங்ஙனம் பிதற்றுகிறேன்) என்று ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித் தீரே, அதைச் செய்து முடியும்' என்று ஆழ்வான் திரு உள்ளம் பற்றுவதாக நினைத்து அதற்கு இதுதன்னால் விடை தருகிறார்.

தேவரீர் எல்லார் விஷயத்திலும் குற்றங்களைக் குணமாக எண்ணும் வத்ஸலரே. சிறப்பாக, தேவரீர் குலத்திலுதித்த அடியேன் திறத்தில் வாத்ஸல்யமுண்டு என்பதைத் தனிப்படச் சொல்ல வேண்டுவதில்லை. குணம் சிறிதும் கலசாமல் தோஷமேயான ஸ்தோத்ரத்தை அடியேன் தேவரீர் விஷயத்தில் செய்தாலும் அது



தேவரீர்க்கு மிகவும் இஷ்டமாகவே இருக்குமென்பதில் ஸந்தேகமில்லைதான். ஆனாலும், குணக் கடலாய், குணக்கடல்களான சிஷ்யர்களைப் பெற்றுப் பரம பரிசுத்தராகிய தேவரீர் விஷயத்தில் குற்றங்களே வடிவெடுத்த ஸ்தோத்ரத்தை விண்ணப்பிப்பதில் உத்ஸாஹமுண்டாகவில்லை. நாள்தோறும் துதி செய்ய வேணுமென்று தொடங்குவது, குணம் நிறைந்த ஸ்தோத்ரம் செய்ய யோக்யதையில்லாமையால், குற்றம் நிறைந்த துதியை எங்ஙனம் செய்வோம் என்று வருந்தி மீளுவது - என்றிங்ஙனே நாளெல்லாம் கழிகின்றன என்கிறார்.

ஆழ்வானோ, 'நம் குலக் கொழுந்தின் வாயிலிருந்து ஏதாவது வருமா?' என்று எதிர்பார்க்கிறார். குலக் கொழுந்தோ இறாய்க்கிறது. நாம் என் செய்வோம்? (11)

श्रीवत्सचिह्न तव भूरिदयापगायां
स्नात्वाऽतिनिर्मलतमोऽपि मितंपचोऽहम् ।
निन्द्येषु कर्मनिचयेषु निरूढबुद्धिः
मज्जायधस्तमसि हा तव निर्भरोऽस्मि ।। १२ ।।

*ஸ்ரீவத்ஸசிஹ்ந தவ பூ$_4$ரித$_3$யாபக$_3$ாயாம்*
*ஸ்நாத்வாதிநிர்மலதமோபி மிதம்பசோஹம்*
*நிந்த்$_3$யேஷு கர்மநிசயேஷு நிரூட$_4$பு$_3$த்$_3$தி$_4$:*
*மஜ்ஜாம்யத$_4$ஸ்தமஸி ஹா தவ நிர்ப$_4$ரோஸ்மி.*

ஸ்ரீவத்ஸசிஹ்ந - வாரீர் ஆழ்வானே!, தவ - தேவரீருடைய , பூரி தயா ஆபகாயாம் - பெருங்கருணையாகிய ஆற்றில், ஸ்நாத்வா - நீராடியதனால், அதி நிர்மலதமோபி - மிகப் பரிசுத்தனாயிருந்த போதிலும், மிதம்பச: அஹம் - நீசனான அடியேன், நிந்த்யேஷு - இகழத்தக்க, கர்மநிசயேஷு - பாப காரிய ஸமூஹங்களில்,

நிருட புத்தி: - வேரூன்றிய எண்ணமுடையவனாய், தமஸி - தமோ குணம் நிறைந்த இந்த ஸம்ஸாரத்தில், மஜ்ஜாமி - மூழ்குகிறேன் (ஆகையால்), தவ - தேவரீருடைய, நிர்பர:அஸ்மி - ரக்ஷணப் பொறுப்பிலிருந்து விலகுகிறனேன். ஹா - ஐயோ!

ஆழ்வான் இவரிடம் 'நம்மைப் பற்றித் துதி செய்யும்' என்றால் தம்மைப் பற்றி நிந்தனை செய்து கொள்ளுகிறார். 'பெரியோர்களின் குணங்களை அனுஸந்திப்பதுதான் ஸ்தோத்ர மென்று நினைக்க வேண்டாம். அவர்களெதிரில் தமது தோஷங்களை விண்ணப்பிப்பதும் ஸ்தோத்ரத்திற்கு அங்கந்தான் என்று சிலர் நினைவு போலும். அது யுக்தமே. யதிராஜவிம்சதியில எம்பெருமானாருடைய குணங்களின் ப்ரஸ்தாவம் குறைவுபட்டு, ஸ்தோத்ரகர்த்தாவான மாமுனிகளின் நைச்யாநுஸந்தானமன்றோ நிறைந்து கிடக்கிறது.

'தேவரீருடைய ரக்ஷணப் பொறுப்பிலிருந்து விலகு கிறேன்' என்பதற்கு அடியேனை ரக்ஷிக்க தேவரீரால் முடியா தென்பது பொருள். ஏன் முடியாது? நோய் மிகவும் விஞ்சினால் வைத்யன் பரம ஸமர்த்தனானாலும் நோயாளியைக் காப்பாற்ற இயலாதிறே. ஏன் இவருக்கு நோய் மிக விஞ்சிற்றோ? ஆம் விஞ்சிற்று. ஆழ்வானுடைய தயையென்னும் ப்ரவாஹத்தில் மூழ்கிய போதிலும், தமக்குக் கெட்ட காரியங்களில் மனம் செல்லாமலிருந்தால், அவருடைய தயை வேலை செய்யும். தமக்கு முன் செய்த முழுவினையால் பாபகாரியங்களில் மனம் வேரூன்றி விட்டபடியால் ஆழ்வானுடைய தயையும் பயன் பெறாதென்று நினைத்து தம்மை வெறுக்கிறார். 'தேவ த்வதீய சரண ப்ரணய ப்ரவீண ராமாநுஜார்ய விஷயீக்ருதமப்யஹோ மாம்! பூய: ப்ரதர்ஷயத் வைஷயிகோ விமோஹ: மத் கர்மண: கதரத் அத்ர ஸமாநஸாரம்' என்ற ஸ்ரீவைகுண்டஸ்தவம் 90வது ச்லோகம் இங்கு ஸ்மரித்தல் தகும். 'எம்பெருமானே!தேவரீர் திருவடிகளில் மிகவும் பக்தி செலுத்துகின்ற எம்பெருமானாரால் அடியேன் தம் தயைக்குப் பாத்திரமாக்கப் பட்டிருந்தபோதிலும், சப்தாதி விஷயங்களில்



மோஹம் அடியேனை அலைக்கின்றது. அடியேனுடைய தீவினையை விட வலியது வேறொன்று உண்டோ? என்பது இதன் பொருள். இதனால் ஸ்தோத்ரத்திற்கு இலக்காகிய பெரியோர்களுக்குத் தம்மைக் காப்பாற்ற ஆற்றல் இல்லை என்று சொல்லுவதில் முழுநோக்கமில்லை: தம்முடைய நைச்யத்தை அநுஸந்திக்கையில் மட்டும் நோக்கம் என்று கருதத்தக்கது. நிதம்பச: - நீசன். தீவினை நிறைந்தவன். நிர்ப்பர:- துர்ப்பர:- காப்பாற்றுதற்கு அப்பாற்பட்டவன் என்றபடி. காப்பாற் றும் ஸமயத்தைக் கடந்தவன் என்பது முக்கிய கருத்தாகும். (12)

**श्रीवत्सचिह्न भवतश्चरणाश्रितानां**
**अस्माकमप्यनुचितेषु भवेच्चिकीर्षा ।**
**सा सर्वथा भवति दुःखकरी तवैव**
**तस्मात्त्वमेव हर तादृशकर्मचिन्ताम् ।। १३ ।।**

*ஸ்ரீவத்ஸசிஹ்ந ப$_4$வதஶ்சரணாஶ்ரிதாநாம்*
*அஸ்மாகமப்யநுசிதேஷு ப$_4$வேச்சிகீர்ஷா*
*ஸா ஸர்வதா$_2$ ப$_4$வதி து$_3$:க$_2$கரீ தவைவ*
*தஸ்மாத் த்வமேவ ஹர தாத்$_3$ருஶகர்மசிந்தாம்.*

ஸ்ரீவத்ஸசிஹ்ந - ஆழ்வானே!, பவத: - தேவரீருடைய , சரண ஆச்ரிதாநாமபி - திருவடிகளை ஆச்ரயித்திருந்த போதிலும், அஸ்மாகம் - அடியோங்களுக்கு, அநுசிதேஷு - தகாத காரியங்களில், சிகீர்ஷா - செய்ய வேண்டுமென்னும் ஆசையானது, பவேத் - உண்டாகக் கூடும், ஸா - அந்த ஆசை, ஸர்வதா - எல்லாவகையாலும், தவ ஏவ - தேவரீருக்கே, துக்ககரீ - வருத்தத்தை உண்டு பண்ணுவதாக, பவதீ - ஆகிறது, தஸ்மாத் - ஆகையால், த்வமேவ - தேவரீரே, தாத்ருசகர்ம சிந்தாம் - அத்தீய செய்கைகளைப் பற்றிய சிந்தனையை, ஹர - போக்கி அருள வேணும்.

பாபகாரியங்களில் தமது மனம் வேரூன்றி விட்டதென்று முன் ச்லோகத்தில் அருளிச் செய்தவர், அப்படிப்பட்ட மனஸ்ஸை அவற்றிலிருந்து மீட்கத் தம்மாலியலாமையை நினைத்து, ஆழ்வானை - தேவரீரே அடியேனுக்குப் பாபகாரியத்தைப் பற்றிய எண்ணமே உண்டாகாதபடி அருள் செய்ய வேணுமென்று ப்ரார்த்திக்கிறார் - இதனால்.

பாபகாரியத்தில் தமக்கு உண்டாகும் எண்ணம், பழகிப் போய்விட்டதால் தமக்கு வருத்தத்தை உண்டுபண்ண மாட்டாது. தம்மை ரக்ஷிப்பதாக அங்கீகரித்த ஆழ்வானுக்கே வருத்தத்தைத் தருமென்று கருதி - தேவரீர் வருந்தாமலிருக்க வேண்டு மென்றால் அடியேனுக்கு உண்டாகும் தீய நினைவைப் போக்கியருளவேணும் என்கிறார்.

தீய எண்ணம் எங்களுக்கு உண்டாகக்கூடுமென்று, பஹுவசனமாகக் கூறியது - தம்மைபோல் மற்றும் சிலர் இருக்கக் கூடுமென்ற எண்ணத்தினாலன்று, தம்மை இகழத் தக்கவராக எண்ணி, 'நிந்தாயாம் பஹுவசன'மாகக் குறிப்பிட்டருளினார் என்று கொள்க.

ஆழ்வானுடைய ப்ரபாவம் தம்மை ஆச்ரயித்தவர் களுடைய கெட்ட எண்ணத்தைப் போக்க வல்லதென்று இதனால் தெரிவித்தபடி. (13)

कूराधिपालमतिवेलकृतेन कर्म
मूलेन यत्सखमवाप्तमथापि दुःखम् ।
तच्छक्नुमो नु न निवारयितुं च सोढुं
तत्सङ्गमेव विनिवर्तय ते प्रभावात् ।। १४ ।।

கூராதி$_3$பாலமதிவேலக்ருதேந கர்ம
மூலேந யத்ஸுக$_2$மவாப்தமதாபி து$_3$:க$_2$ம்



*தச்ச$_2$க்நுமோ நு ந நிவாரயிதும் ச ஸோடு$_4$ம்*
*தத்ஸங்க$_3$மேவ விநிவர்தய தே ப்ரப$_4$ாவாத். (14)*

கூராதிப - கூரேசரே! அதிவேல க்ருதேந - அடியேனால் எல்லை கடந்து செய்யப் பட்ட, கர்மமூலேந - தீவினை என்னும் காரணமானது, அலம் - இனி வேண்டாம் (செய்தது போதும்); யத் அவாப்தம் - அதனால் எது அடையப் பட்டதோ, தத் ஸுகம் அதாபி - அது சுகமென்று மேலெழத் தோன்றினாலும், து:கம் - (ஆராய்ந்தால்) துக்கமேயாகும். தத் - அந்த துக்கத்தை, நிவாரயிதும் - வராமல் தடுப்பதற்கும், ஸோடும் ச - வந்தால் பொறுத்துக் கொள்வதற்கும், சக்நும: நு - (அடியோங்கள்) வல்லமையுடையோமோ? ந - அல்லோம். (ஆகையால்), தே ப்ரபாவாத் - தேவரீருடைய மகிமையினால், தத் ஸங்கமேவ - அத் தீவினையில் அடியோமுக்கு உண்டாகும் ஆசையையே விநிவர்தய - நன்றாகப் போக்கியருளவேணும்.

திவினை செய்வதில் ஆசை நீங்கினாலன்றி உய்வு பெற முடியாமையாலும், தம்மால் அவ்வாசையை அடக்க முடியாமையாலும், முன் ச்லோகத்தில் - த்வமேவ ஹர தாத்ருச கர்ம சிந்தாம் (=தேவரீரே அத்தீய செயல்களைப் பற்றிய சிந்தனையைப் போக்கியருளவேணும்) என்று ப்ரார்த்தித்ததையே, மறுபடியும், 'தத்ஸங்கமேவ விநிவர்த்தய (=அத்தீயவினையில் எமக்கு உண்டாகும் ஆசையையே அடியோடு போக்கியருளவேணும்) என்று ப்ராத்திக்கிறார். முக்கியமான ப்ரார்த்தனையாகையால் இதற்குப் புநருக்தி (கூறியதையே கூறுதல்) தோஷம் இல்லை என்று கருத்து.

தம் தீவினையெண்ணம் ஆழ்வானுக்கே வருத்தத்தை யுண்டாக்குமென்று முன்பு ஆராயாமல் கூறியருளியவர், இதில் ஆராய்ந்து பார்த்து, தீவினையெண்ணத்தினால் உண்டாவது மேலெழுந்தவாறு சுகமென்று தோன்றினாலும் உண்மையில் துக்கம்தான் என்று அது துக்கத்தையுண்டாக்குகிறதென்று கூறுகிறார்.

'நான் எப்படிப் போக்குவேன்' என்றால் தேவரீர் எவ்வளவு உபதேசித்தாலும் அது அடியேனுக்குப் போகாது. தேவரீர்கே அஸாதாரமான மஹிமையினால் போக்கியருள வேண்டுமென்பார். 'தேப்ரபாவாத் விநிவர்த்தய' என்றருளினார். (14)

स्मृत्वा मदीयविपरीतगतीस्तदैव
भग्नाशयोऽप्यथ च हृष्टमनाश्चरामि ।
श्रीवत्सचिह्न भवतस्त्वतिवेलशील
वात्सल्यसौहृददयादिगुणान्विमृश्य ।। १५ ।।

ஸ்ம்ருத்வா மதீயவிபரீதகதீஸ்ததைவ
பக்நாஶயோப்யத ச ஹ்ருஷ்டமநாஶ்சராமி
ஸ்ரீவத்ஸசிஹ்ந பவதஸ்த்வதிவேலஶீல
வாத்ஸல்யஸௌஹ்ருதயாதிகுணாந்விம்ருஶ்ய.

ஸ்ரீவத்ஸசிஹ்ந - ஆழ்வானே! மதீய விபரீத கதி: - அடியேனுடைய நியாய விருத்தமான நடத்தைகளை, ஸ்ம்ருத்வா - நினைத்து, பக்ந ஆசய: அபி - நமக்கு நன்மை கிடைக்கப் போகிறதில்லை என்று மனம் உடையப் பெற்றவனா யிருந்தபோதிலும், (அஹம் - அடியேன்), அத ச - அதற்கு அடுத்த க்ஷணத்திலேயே, பவத: - தேவரீருடைய, அதிவேல சீல வாத்ஸல்ய ஸௌஹ்ருத தயா ஆதி குணாந் - எல்லைகடந்த நீர்மை, பேரன்பு, நல்லமனமுடைமை, கருணை, முதலிய நற்குணங்களை, விம்ருச்ய து - ஆராய்ந்து பார்த்தாலோ என்றால், ஹ்ருஷ்டமநா: - நமக்குக் கிடைப்பது உறுதி என்று மனம் மகிழப்பெற்றவனாய், சராமி - ஸஞ்சரிக்கிறேன்.

கீழே ஒன்பதாம் ச்லோகம் தொடங்கிப் பதினான்காம் ச்லோகமீறாகக் கூறப்பட்ட சரீரத்தையே காப்பாற்றுதல், ஆத்மஸ்வரூபத்தை அலக்ஷியம் செய்தல், அதன் விவரணமான



செய்யத்தகாதன செய்தல், செய்யவேண்டியன செய்யாதிருத்தல், நாம் இப்படியிருக்கிறோமே நமக்கு உய்வு கிடைப்பதெப்படி யென்று பச்சாத்தாபப்படுதல், ஸ்தோத்ரம் செய்யத் துணிவில்லாதிருத்தல், கெட்ட செய்கைகளில் மனமூன்றப் பெறுதல், ஆழ்வானாலும் தம்மைக் காப்பாற்ற முடியாதென்று நினைத்தல், பாபத்தை செய்யும் போது மகிழ்ந்து செய்துவிட்டுப் பின்பு அதனால் உண்டாகும் துன்பத்தைப் போக்கிக் கொள்ளவோ, பொறுத்துக் கொள்ளவோ தம்மால் இயலாமையால் வருத்தமுறுதல் ஆகிய தமது விபரீதச் செய்கைகளை எண்ணி நமக்கு உய்வு கிடைக்காதென்று வெறுத்தவராய், உடனே முன் ச்லோகத்தில் 'தே ப்ரபாவாத்' என்று ஆழ்வானுடைய மகிமையாகக் குறிப்பிட்ட குணங்களாகிய மகிமையை நினைத்து நமக்கு உய்வு உண்டாகுமென்று அறுதியிட்டுத் தாம் மகிழ்வதாக ஆழ்வானிடம் விண்ணப்பிக்கிறார் இதனால். சீலம் - தாழ்ந்தவர்களோடும் பெரியவன் பேதமில்லாமல் கலந்திருக்கை. வாத்ஸல்யம் - பேரன்பு - தோஷத்தையும் குணமாக எண்ணுகை. ஸௌஹ்ருதம் - எல்லாரிடமும் நன்மையெண்ணும் மனமுடையவனாயிருத்தல். தயை - வருந்தியவர்களைக் கண்டு ஐயோ என்று தானும் வருந்துகை. ஆக, மிகப் பெரியவராகிய ஆழ்வான் - மிகத் தாழ்ந்தவராகிய தம்மோடு கலந்து பழகி, தம்முடைய தோஷத்தையும் குணமாகவே நினைத்து, தமக்கு நன்மையையே சிந்திக்குமவராயிருந்து, ஐயோ இவன் இப்படி வருந்துகிறானே என்று தாமும் வருந்தி - அதன் விளைவாக நம்மைக் காப்பாற்றுவார் என்று நிச்சயித்து மகிழ்ச்சியடைவதை விவரித்தருளினாராய்த்து இதனால். (15)

कूराधिनाथ गुणसन्तति चिन्तनेन
कस्याशयस्तव न याति परं प्रमोदम् ।
निस्संशयत्वमथ निर्भयतां च सम्यग्
वृत्तिप्रवृत्त्यभिरतिं परमां विरक्तिम् ।। १६ ।।

கூராதி$_4$நாத$_2$ கு$_3$ணஸந்ததி சிந்தநேந
கஸ்யாஶயஸ்தவ ந யாதி பரம் ப்ரமோத$_3$ம்
நிஸ்ஸம்ஶயத்வமத$_2$ நிர்ப$_4$யதாம் ச ஸம்யக்
வ்ருத்திப்ரவ்ருத்யபி$_4$ரதிம் பரமாம் விரக்திம். (16)

கூராதி நாத! - வாரீர் கூரேசரே! தவ - தேவரீருடைய, குணஸந்ததி சிந்தநேந - குணஸமூஹத்தை நினைப்பதனால், கஸ்ய ஆசய: - எவனுடைய மனம்தான், பரம் ப்ரமோதம் - உயர்ந்த மகிழ்ச்சியையும், நிஸ்ஸம்சயத்வம் - உய்வுபெறுவதில் ஸந்தேஹ மில்லாமையையும், அத - மேலும், நிர்ப்பயதாம் - ஸம்ஸாரபய மில்லாமையையும், ஸம்யக் வ்ருத்தி ப்ரவ்ருத்தி அபிரதம் - நல்ல பகவத்பாகவதாசார்ய கைங்கர்யத்தில் உண்டாகும் முயற்சியில் விருப்பத்தையும், பரமாம் - மிகவுயர்ந்த, விரக்திம் ச - இதர விஷயங்களில் பற்றில்லாமையையும், ந யாதி - அடைய மாட்டாது?

ஆழ்வானுடைய குணங்களை ஆராய்ந்தால் மகிழ்ச்சியுண்டாகுமென்று கீழ் ச்லோகத்தில் தெரிவித்தவர், அதனால் மகிழ்ச்சியேயன்றி மேலும் சில நன்மைகளும் உண்டாகுமென்கிறார் இது தன்னில். அந்நன்மைகளாவன - நமக்கு மோக்ஷம் தப்பாதென்கிற துணிவும் மேலும் இஸ்ஸம்ஸாரத்திலேயே உழலவேண்டியிருந்தால் என் செய்வ தென்னும் அச்சமின்மையும், பகவத் பாகவதாசார்யகைங்கர் யங்களைச் செய்ய வேணுமென்னும் ஆசையும், அவ்வாசைக்குத் தடையாக இதரவிஷயங்களி லுண்டாகும் பற்று நீங்கப் பெறுத லாகிய விரக்தியும் ஆம். ஆழ்வானுடைய குணங்கள் முன் ச்லோகத்தில் கூறப்பட்ட சீலம் வாத்ஸல்யம் முதலியனவும் பிறவும் ஆகும். (16)

श्रीरङ्गनायकभवत्प्रतिभाषणानि
श्रुत्वा प्रहृष्टमनसा यतिशेखरेण ।



उक्तां सुभाषितसुधां च निशम्य नाथ
त्वद्बन्धुताऽस्ति मम चेत्यभयश्चरामि ।। १७ ।।

ஸ்ரீரங்க$_3$நாயகப$_4$வத்ப்ரதிபா$_4$ஷணாநி
ஶ்ருத்வா ப்ரஹ்ருஷ்டமநஸா யதிசேக$_2$ரேண
உக்தாம் ஸுபா$_4$ஷிதஸுதா$_4$ம் ச நிஶம்ய நாத$_2$
த்வத்$_3$ப$_3$ந்து$_3$தாஸ்தி மம சேத்யப$_3$யஶ்சராமி.(17)

நாத - ஸ்வாமீ ஆசார்யனே! ஸ்ரீரங்கநாயகபவத்ப்ரதிபாஷணாநி - ஸ்ரீரங்கநாதனால் தேவரீருக்கு அருளிச்செய்யப்பட்ட விடை வார்த்தைகளை, ச்ருத்வா - கேட்டு, ப்ரஹ்ருஷ்டமநா: - ஸந்தோஷமுடையவரான, யதிசேகரேண - யதிராஜரான எம்பெருமானராலே, உக்தாம் - அருளிச்செய்யப்பெற்ற, ஸுபாஷிதஸுதாம் - அமுதம்போலினிய நல்வார்த்தையை, நிசம்ய - கேட்டு, மம ச - அடியேனுக்கும், த்வத் பந்துதா - தேவரீரோடு உறவானது, அஸ்தி இதி - இருக்கிறதென்று நினைத்து, அபய: - ஸம்ஸாரபயமற்றவனாய் (அடியேன்), சராமி - திரிகிறேன்.

தாம் ஸம்ஸார பயமற்று ஸஞ்சரிப்பதற்கு ஆழ்வானுடைய குணசிந்தனம் மட்டும் காரணமன்று. அவரோடு தமக்குண்டான உறவும் காரணமென்கிறாரிதில் ஆழ்வானோடு உறவுண்டானவர் எல்லார்க்கும் தான் மோக்ஷமளிப்பதாக ஸ்ரீரங்கநாதன் ஆழ்வானுக்கு வார்த்தை அருளிச்செய்துவைத்துள்ளான் ஆகையால். அவரோடு உறவுண்டானால் அச்சம் கெட்டிருக்கலாம் என்று கருத்து. அது தன்னை ஒரு ஐதிஹ்யத்தை நினைவூட்டி முதலிக்கிறார். இந்த ஐதிஹ்யத்தில் ஸ்ரீரங்கநாதன் கூரத்தாழ்வான் எம்பெருமானாராகிய மூவர்க்கும் தொடர்புள்ளது.

ஆழ்வான் ஒரு நாள் ஸ்ரீரங்கநாதஸந்நிதியில் ஒருச்லோகத்தை உபந்யஸித்து அப்பெருமானை உகப்பிக்க அவன்

'உமக்கு வேண்டியதைத் தருகிறோம், வேண்டிக் கொள்ளும்' என்றருளிச் செய்ய ஆழ்வான் தேவரீருடைய பரமபதானுபவத்திற்கு விரோதியான இந்த சரீரத்தைப் போக்கி அவ்வனுபவத்தைத் தந்தருள வேணும் என்று வேண்டிக்கொள்ள பெருமாள் 'உமக்கும் உம்முடைய ஸம்பந்தமுடையார்க்கும் பரமபதம் தந்தோம்' என்றருளிச்செய்ய, அந்தவிஷயங்கேட்ட எம்பெருமானார். ஆழ்வானோடு, ஆசார்யசி யபாவமாகிற ஸம்பந்தமிருப்பதனால் 'நமக்கும் பரமபதம் கிடைக்கும்' என்று கூறி ஸந்தோஷித்து, உடுத்த காஷாயத்தை வாங்கி ஆகாசத்திலே எறிந்து ஏற்றுக் கொண்டார் என்பதே இந்த ச்லோகத்தில் கூறப்பட்ட ஐதிஹ்யமாகும். இது ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவ க்ரந்தத்தில் குறிக்கப் பெற்றுள்ளது.

ஆக, ஆழ்வான் ஸம்பந்தத்தால் தமக்குப் பரமபதம் கிடைப்பது நிச்சிதமாகையால், அது கொண்டு ஸம்ஸாரபயம் தீர்ந்து தாம் திரிவதாகக் கூறினாராயிற்று. பெரியபெருமாள் ஆழ்வானுக்கருளிய வார்த்தை கேட்டு எம்பெருமானார் ஸந்தோஷித்தார். அதுகேட்டு, ஆழ்வானோடு தமக்கும் ஸம்பந்தமுள்ளமையால் பரமபதம் கிடைக்குமென்று கருதி இவரும் பயங்கெட்டத் திரிகிறார் என்க.

श्रीवत्सचिह्न भवताऽप्यभिमानितोऽहं
इत्यादरेण सततं मयि रङ्गनाथः।
कुर्वन्दयां न विजहति कृतागसं मां
रक्षत्यहो त्वयि तु कीदृगनुग्रहोऽस्य।। १८।।

*ஸ்ரீவத்ஸசிஹ்நப$_4$வதாப்யபி$_4$மாநிதோஹம்*
*இத்யாத$_3$ரேண ஸததம் மயி ரங்க$_3$நாத$_2$:*
*குர்வந் த$_3$யாம் ந விஜஹாதி க்ருதாக$_3$ஸம் மாம்*
*ரக்ஷத்யஹோ த்வயி து கீத்ருக$_3$நுக்$_3$ரஹோஸ்ய. (18)*





ஸ்ரீவத்ஸசிஹ்ந - ஆழ்வானே! பவதா அபி - தேவரீராலும், அஹம் - அடியேன், அபிமாநித: - இவன் நம்முடையவன் என்று அபிமானிக்கப் பட்டவன், இதி - என்ற காரணத்தினால், ரங்கநாத: - திருவரங்கநாதன், ஆதரேண - அன்புடன், ஸததம் - எப்போதும், தயாம் குர்வந் - தயைபுரியுமவராய், க்ருதாகஸம் - பாபங்கள் செய்திருக்கிற, மாம் - அடியேனை, ந விஜஹாதி - அதுகாரணமாக விடுவதில்லை. ரக்ஷதி - (அதற்கெதிராக) காப்பாற்றுகிறார். அஹோ - ஆச்சர்யம். அஸ்ய - இந்தத் திருவரங்கநாதனுக்குத்தான், த்வயி - தேவரீர் திறத்தில், கீத்ருக் அநுக்ரஹ: - எத்தகைய அநுக்ரஹம்!

ஆழ்வானுடைய குணசிந்தனமும் ஆழ்வானோடு தமக்கு உறவும் உண்டானது மட்டும்ன்றி, இவ்விரண்டைவிட உயர்ந்த ஆழ்வானுடைய அபிமானமும் உண்டாகையால், ஆசார்ய அபிமானம் பெற்ற தம்மை மோக்ஷம் கொடுத்து ஸ்ரீரங்கநாதன் ரக்ஷிக்கிறாரென்றும், பாபம் செய்திருந்தும் தம்மைக் கைவிடுவதில்லையென்றும் கூறி, ஆழ்வானிடம் அப்பெருமானுக்கு உண்டான அநுக்ரஹம், அவர் தமக்கு மட்டும் மோக்ஷமளிக்காமல், அவர் தம்மோடு ஆசார்யனாகவோ, சி யனாகவோ ஸம்பந்தமுடையவர் பக்கலிலேயும் ஏறிப்பாய்ந்ததை நினைத்து, அவ்வநுக்ரஹம்தான் எத்தகைத்து என்று கொண்டாடினாராய்த்து இதனால். (18)

श्रीवत्सलक्षण शरीरवशोऽपि नित्यं
नाथानुतप्त इव च प्रलपामि तेऽग्रे।
मैत्र्या शठश्च खल एष इतीह मत्वा
मामन्वहं समभिषिञ्च कृपाकटाक्षैः।। १९ ।।

*ஸ்ரீவத்ஸலக்ஷண ஶரீரவஶோபி நித்யம்*
*நாத$_2$ாநுதப்த இவ ச ப்ரலபாமி தே(அ)க்$_3$ரே*

*மைத்ர்யா ஶட$_{2}$ஶ்ச கல ஏஷ இதீஹ மத்வா*
*மாமந்வஹம் ஸமபி$_{4}$ஷிஞ்ச க்ருபாகடாக்ஷை: (19)*

நாத ஸ்ரீவத்ஸலக்ஷண - ஸ்வாமீ கூரத்தாழ்வானே! (அஹம் - அடியேன்), நித்யம் - எப்போதும், சரீரவச: அபி - சரீர பரதந்த்ரனாய் அஃதொன்றையே பேணுமவனாயிருந்த போதிலும், அநுதப்த இவ - பச்சாத்தாபப்படுகின்ற நல்லவன் போலே, தே அக்ரே - தேவரீர் திருமுன்பே, ப்ரலபாமி ச - வந்து நிற்பதேயன்றிச் சிலவற்றைப் பிதற்றவும் செய்கிறேன். ஏஷ: சட: கல: ச - இவன் வஞ்சகனாகவும் துஷ்டனாகவும் இருக்கிறான், (இவனுக்குத தாமல்லது வேறு கதியில்லை) இதி மத்வா - என்று திருவுள்ளம் பற்றி, இஹ மாம் - இப்போது அடியேனை, மைத்ர்யா - ஸ்நேஹத்தோடு, க்ருபாகடாக்ஷை: - க்ருபையோடு கூடிய கடைக்கண் பார்வைகளாலே, அந்வஹம் - தினந்தோறும், அபிஷிஞ்ச - நீராட்டியருள வேணும்.

கீழே ஒன்பதாம் சிலோகத்தில் 'ஸம்ரக்ஷ்ய ஹேயதரமேவ களேபரம்' என்று தாம் சரீரத்தை மட்டும் ஸம்ரக்ஷிப்பதாகவும், பத்தாவது ச்லோகத்தில் சரீரஸம்ரக்ஷணத்திற்குக் காரணமான பாபங்களைச் செய்வதாகவும், பாபங்களைச் செய்கிறோமென்று தெரிந்திருந்தும் பச்சாதாபப்பட்டால் உய்ந்துபோகலாமாயிருக்க, அதுவுமில்லாமலிருப்தாக அருளிச்செய்தவர், இந்த ச்லோகத்தில் பச்சாத்தாபப்படாத தாம் பச்சதாபப்பட்டவன் போல ஏதோ ஆழ்வானுடைய குணங்களையும் தம்முடைய குற்றங்களையும் விண்ணப்பிப்பதாகக் குறிப்பிட்டு, தமக்கு வேறு கதியில்லாமையைக் குறிப்பாகக் காட்டி, ஆழ்வானே! தேவரீரே அடியேனைக் கடாக்ஷித்தருளவேணுமென்று வேண்டுகிறார். வஞ்சகனும் து டனுமாய், தேவரீர்க்கு ப்ரதிகூலமான நாலூரானையும் கடாக்ஷித்த தேவரீர் - வஞ்சகனும் துஷ்டனுமானாலும் தேவரீர் திறத்தில் ஆநுகூல்யமுடைய அடியேனைக் கடாக்ஷித்தால் வரும் குற்றமென் என்று கருத்து.



आपन्नदीनजनरक्षणबन्ददीक्षा
विज्ञापनं त्विह मयोदितमुक्तिमात्रम् ।
सार्थ विचार्य सहसाऽद्य तवैव पूर्त्या
कूरीधिपोन्नमय मामिह सर्वथा त्वम् ।। २० ।।

*ஆபந்நதீ$_{3}$நஜநரக்ஷணப$_{3}$ந்த$_{3}$தீ$_{3}$க்ஷ*
*விஜ்ஞாபநம் த்விஹ மயோதி$_{3}$தமுக்திமாத்ரம்*
*ஸார்த$_{2}$ விசார்ய ஸஹஸாத்$_{3}$ய தவைவ பூர்த்யா*
*கூராதி$_{4}$போந்நமய மாமிஹ ஸர்வத$_{2}$ா த்வம். (20)*

ஆபந்நதீந ஜந ரக்ஷண பந்ததீக்ஷ - ஆபத்தையடைந்து அதனால் இரங்கத்தக்க ஜனங்களை ரக்ஷிப்பதில் விரதம் பூண்டவரே! கூராதிப - கூரத்தாழ்வானே! இஹ - இப்போது, மயா உதிதம் - அடியேனால் சொல்லப்பட்ட, உக்திமாத்ரம் - அர்த்தமில்லாமல் வெறும் பேச்சான, விஜ்ஞாபநம் து - விண்ணப்ப வார்த்தைகளையே, தவ பூர்த்யா ஏவ - (அடியேனுடைய தோஷபூர்த்தியைப் பாராமல்) தேவரீருடைய குணபூர்த்தி யினால் மட்டுமே, ஸார்த்தம் விசார்ய - அர்த்தத்தோடு கூடிய தாக எண்ணி, அத்ய இஹ - இப்போது இவ்விடத்தில், ஸஹஸா - தாமதம் செய்யாமல், த்வம் - தேவரீர், மாம் - அடியேனை, உந்நமய - உத்தரித்தருளவேணும், (முக்தி நல்கவேணும்,)

இது காறும் (4) 'சரணம் பவ' (தேவரீர் அடியேனுக்குத் தஞ்சமாக வேணும்) என்றும், (13) 'தாத்ருச கர்மசிந்தாம் த்வமேவஹர' (அத்தீய சிந்தனையைப் போக்கியருளவேணும்) என்றும், (14) 'தத்ஸங்கமேவ விநிவர்த்தய தே ப்ரபாவாத்' (அத்தீவினையில் எமக்குண்டாகும் ஆகையை அடியோடு நீக்கியருளவேணும்) என்றும், (19) 'மாமந்வஹம் ஸமபிஷிஞ்ச க்ருபாகடாக்ஷை:' (அடியேனை நாள்தோறும் கருணையினாலே

நனைந்து குளிர்ந்த கடைக்கண் பார்வைகளாலே நீராட்டி யருளவேணும்) என்றும் தாம் செய்த விண்ணப்பத்துக்கும், மற்றும் ஆழ்வானுடைய கல்யாண குணங்களையும் தம்முடைய தோஷங்களையும் பற்றி விஜ்ஞாபித்ததற்கும் பயன் - தம்மை ஸம்ஸராஸாகரத்திலிருந்து உயரவெடுத்துப் பரமபதத்தில் செலுத்துதலே என்பதைக் குறிப்பிட்டு, அது தன்னையே ஆழ்வானைப்ப்ரார்த்தித்து இந்த ஸ்தோத்ரத்தைத் தலைகட்டுகிறார் - ஸர்வஜ்ஞபட்டர்.

அடியேனுடைய இந்த விண்ணப்பம் மனப்பூர்வமாகச் செய்ததன்று, வேஷந்தான். வெறும் பேச்சேதான். ஆயினும் இது தன்னையே, தேவரீருடைய குணபூர்த்தியாலே உண்மையுரையாகத் திருவுள்ளம் பற்றி அடியேனை உத்தரித்தருளவேணும் அடியேனுடைய வாயிலிருந்து. வந்த இந்த ஸ்தோத்ரத்தை உண்மையாகக் கருதி, அடியேனை இந்த ஸம்ஸாரக் கடலிலிருந்து எடுத்து, பரமபதாநுபவத்தைத் தந்தருளவேணும் என்று பிரார்த்தித்து, இந்த கூரேசவிம்சதியைத் தலைக்கட்டி அருளினாராய்த்து.

**ஆழ்வான் திருவடிகளே சரணம்**
**பட்டர் திருவடிகளே சரணம்.**



ஸ்ரீ ஶுத்$_3$த$_4$ஸத்த்வம் தொட்டாசாரியர்
அருளிச் செய்த

# கூரநாத$_2$பஞ்சாஶத்

ஸ்ரீமான் உ.வே தி. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி
எழுதிய தமிழுரையுடன் கூடியது.

## மங்க$_3$ளஶ்லோகம்

श्रीशैललक्ष्मणमुनेश्चरणाब्जयुग्मं
श्रेयस्करं तनुभृतामखिलाघहन्तृ ।
नत्वा करोमि विबुधावलितुष्टयेऽहं
कूराधिपस्तुतिमिमां कुशलप्रदात्रीम् ।।

ஸ்ரீஶைலலக்ஷ்மணமுநேஶ்சரணாப்ஜயுக்$_3$மம்
ஶ்ரேயஸ்கரம் தநுப்$_4$ருதா மகி$_2$லாக$_4$ ஹந்த்ரு,
நத்வா கரோமி விபு$_3$த$_4$ாவலிதுஷ்டயேஹம்
கூராதி$_4$பஸ்துதிமிமாம் குஶலப்ரத$_3$ாத்ரீம்.

தநுப்ருதாம்-உடலெடுத்த மனிதர்களுக்கு, ச்ரேயஸ்கரம் - நன்மைகளைச் செய்யவல்லதும், அகில அக ஹந்த்ரு -எல்லாப் பாபங்களையும் அழிக்கவல்லதுமான,ஸ்ரீசைல லக்ஷ்மணமுநே: - ஸ்ரீசைலலக்ஷ்மண (திருவேங்கடராமானுஜ) முனிவருடைய, சரண அப்ஜ யுக்மம் - திருவடித்தாமரையிணையை, நத்வா- வணங்கி, அஹம் - அடியேன், விபுத ஆவலி துஷ்டயே - ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தின் ஸந்தோஷத்தின் பொருட்டு, இமாம் - இந்த, குசல ப்ரதாத்ரீம் - க்ஷேமத்தை அளிக்கவல்லதான, கூராதிப ஸ்துதிம் - கூரத்தாழ்வானைப் பற்றிய ஸ்தோத்ரத்தை, கரோமி-இயற்றுகிறேன்.

ஸ்ரீ ஶ்ரீவத்ஸ ஸத்த்வம் தொட்டாசாரியர்
அருளிச் செய்த

# கூரநாத₂பஞ்சாஶத்

ஸ்ரீமான் உ.வே தி. அ. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி
எழுதிய தமிழுரையுடன் கூடியது.

## மங்க₃ளஶ்லோகம்

श्रीशैललक्ष्मणमुनेश्चरणाब्जयुग्मं
श्रेयस्करं तनुभृतामखिलाघहन्तृ ।
नत्वा करोमि विबुधावलितुष्टयेऽहं
कूराधिपस्तुतिमिमां कुशलप्रदात्रीम् ।।

ஸ்ரீஶைலலக்ஷ்மணமுநேஶ்சரணாப்ஜயுக்₃மம்
ஶ்ரேயஸ்கரம் தநுப்₄ருதா மகி₂லாக₄ ஹந்த்ரு,
நத்வா கரோமி விபு₃த₄ாவலிதுஷ்டயேZஹம்
கூராதி₄பஸ்துதிமிமாம் குஶலப்ரத₃ாத்ரீம்.

தநுப்ருதாம்-உடலெடுத்த மனிதர்களுக்கு, ச்ரேயஸ்கரம் - நன்மைகளைச் செய்யவல்லதும், அகில அக ஹந்த்ரு -எல்லாப் பாபங்களையும் அழிக்கவல்லதுமான,ஸ்ரீசைல லக்ஷ்மணமுநே: - ஸ்ரீசைலலக்ஷ்மண (திருவேங்கடராமானுஜ) முனிவருடைய, சரண அப்ஜ யுக்மம் - திருவடித்தாமரையிணையை, நத்வா- வணங்கி, அஹம் - அடியேன், விபுத ஆவலி துஷ்டயே - ஸ்ரீவைணவ ஸமூஹத்தின் ஸந்தோஷத்தின் பொருட்டு, இமாம் - இந்த, குசல ப்ரதாத்ரீம் - க்ஷேமத்தை அளிக்கவல்லதான, கூராதிப ஸ்துதிம் - கூரத்தாழ்வானைப் பற்றிய ஸ்தோத்ரத்தை, கரோமி-இயற்றுகிறேன்.

ஸ்ரீ சுத்தஸத்த்வம் தொட்டாசார்யஸ்வாமி தாம் இயற்ற நினைத்த கூரநாதபஞ்சாசத் என்ற - கூரத்தாழ்வான் விஷயமான ஐம்பது ச்லோகங்களைத் தன்னகத்தே கொண்ட ஸ்தோத்ரக்ரந்தம் இடையூறின்றி இனிதே முடிவுபெறுவதற்காக, தம்முடைய ஆசார்யராகிய ஸ்ரீசைல லக்ஷ்மண முநியை வணங்கி, ஸ்ரீவை ணவர்களின் உகப்பொன்றையே பயனாகக்கருதி, அந்த க்ரந்தத்தை இயற்றுவதாக இந்த ச்லோகத்தில் குறிப்பிடுகிறார். இதுதன்னில் அவருடைய திருநாமம் குறிப்பிடப்படாவிடினும், இந்நூலின் இறுதியில் காணப்படுகின்ற 'ஸ்ரீமதா சுத்தஸத்த்வேந தொட்டார்யேண மஹாத்மநா, பஞ்சாசத் கூரநாதஸ்ய ஸ்தோத்ரமீரித முத்தமம்' என்ற ச்லோகங்கொண்டு, இந்த க்ரந்தத்தின் கர்த்தா சுத்தஸத்த்வம் தொட்டாசார்யஸ்வாமி என்று அறிதல் எளிது.

இந்த க்ரந்த கர்த்தாவின் ஆசார்யரான ஸ்ரீசைல லக்ஷ்மண முநி என்பவர் ஸ்ரீவானமாமலை மடத்தைச் சேர்ந்தவர் என்று ஸ்ரீஉ.வே.வித்வான் அகரம் வீரவல்லி. நரஸிம்மாசாரியர்ஸ்வாமி, 1922ம் ஆண்டில் தாம் பதிப்பித்த ஸ்தோத்ரார்ணவம் மூன்றாம் தரங்கம் 88ம் பக்கத்தின் அடிக்குறிப்பில் குறித்திருப்பதனால் அறியப்படுகிறது.



'இந்த ச்லோகத்தில் குறிக்கப்பட்டுள்ள ஸ்ரீசைல லக்ஷ்மண முநியானவர் - ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார்ஜீயர் மடத்தை ஸ்தாபித்த முதல் ஜீயரான திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிதான்' என்று - யதிராஜபாதுகாவின் ஆசிரியர் ஸ்ரீஉ.வே. டாக்டர் வி.வி.ராமாஜநுய்யங்கார் ஸ்வாமி தெரிவித்தருளினார்.

'இந்த ஸ்தோத்ரத்தின் கர்த்தாவாகிய சுத்தஸத்த்வம் தொட்டாசாரியர் ஸ்வாமி - நம் திருமாளிகையில் 20ம் ஸ்வாமியாயும், ஸதநுஷ்டானதர்ப்பணம் அருளிச்செய்த சுத்தஸத்த்வம் திருவாழி அண்ணன் ஸ்வாமிக்குத்



திருத்தமப்பனாராயும் எழுந்தருளியிருந்தவர். திருத் தமப்பனாருக்கும் திருக்குமாரர்க்கும், ஸ்ரீபெரும்பூதூர் ஒன்றான எம்பார் ஜீயர் ஸ்வாமியான திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியிடம் க்ரந்தாந்வயம் ஏற்பட்டுள்ளது' என்று இப்போது ஸ்ரீரங்கநித்யவாஸரஸிகராய், ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்நராய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உ.வே. கோயில் கந்தாடை சிறுபுலியூர் திருவாழி அண்ணன் ஸ்வாமி (பெரியஸ்வாமி) தமது திருவுள்ளத்தை ஸ்ரீமுகம் மூலமாகத் தெரியப்படுத்தி யருளினார்.

இவ்விரு பெரியோர்கள் ஸந்நிதியிலும் அடியேனுடைய க்ருதஜ்ஞதாபூர்வகமான ப்ரணாமங்களை விண்ணப்பிக்கிறேன்.

## நூல்

जय जय यतिराजश्रीपदाम्भोजयुग्म
प्रसृमर मकरन्दास्वादलुब्धान्तरङ्ग ।
जय जय कुमतेभव्रातहर्यक्ष विद्वन्-
मणिवर निगमान्ताकल्प कूराधिनाथ ।। १ ।।

*ஜய ஜய யதிராஜஸ்ரீபத$_3$ாம்பே$_4$ாஜயுக்$_3$ம-*
*ப்ரஸ்ருமர மகரந்த$_3$ாஸ்வாத$_3$ லுப்$_3$த$_4$ாந்தரங்க$_3$*
*ஜய ஜய குமதேப$_4$வ்ராத ஹர்யக்ஷ வித்$_3$வந்-*
*மணிவர நிக$_3$மாந்தாகல்ப கூராதி$_4$நாத$_2$. (1)*

யதிராஜ ஸ்ரீபதாம்போஜயுக்ம ப்ரஸ்ருமர மகரந்த ஆஸ்வாத லுப்த அந்தரங்க - யதிராஜரான எம்பெருமானாருடைய திருவடித் தாமரையிணையிலிருந்து பெருகுகின்ற தேனைச் சுவைப்பதில் ஆசைகொண்ட திருவுள்ளமுடையவரே! குமத இபவ்ராத ஹர்யக்ஷ -

நீசச்சமயிகளென்கிற யானைகளின் கூட்டங்களுக்கு ஸிம்ஹம் போன்றவரே, வித்வந் மணிவர - பண்டித ச்ரே டர்களில் தலைவரே! நிகமாந்த ஆகல்ப - வேதாந்தங்களுக்கு அணிசெய்தவரே! கூராதி நாத -, கூரத்தாழ்வானே! ஜயஜய - தேவரீ ர் எல்லோரினும் மேம்பட்டு விளங்கவேணும்.

சுத்தஸத்த்வம் தொட்டாசார்ய ஸ்வாமி ஆழ்வானைப் பற்றிய ஸ்தோத்ரம் தொடங்கும் போதே அவர்தமக்குப் பல்லாண்டு பாடுகிறார்- ஜயஜய என்ற முதல் ச்லோகத்தினால்.

எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளிலிருந்து பெருகும் தேனை கங்கையென்பது போல, எம்பெருமானா ருடைய திருக்கமலபாதங்களிலிருந்து பெருகும் தேனை அவருடைய ஸ்ரீபாத தீர்த்தமாகக் கொண்டு, அதைப் பருகி ரஸிப்பதில் ஆசையுடையவர் கூரத்தாழ்வான் என்று கொள்ளலாம். இந்த ஸ்ரீபாத தீர்த்தத்தை ஸ்வீகரித்த பெருமையினால் ஆழ்வானுக்கு உண்டான பெருமைகள் - மேலே 'குமதேப' என்று தொடங்கிக் கூறப்படுகின்றன. புறச்சமயிகளாகிய யானைகளை வெல்லுவதில் ஸிம்ஹம் போன்றிருத்தலும் வித்வான்களுக்குள்ளே மிகவும் உயர்ந்தவராய் இருத்தலும் வேதாந்தாகல்பராயிருத்தலுமே அப்பெருமைகள். இவை யித்தனையும் எம்பெருமானார் அநுக்ரஹத்தால் உண்டாயின என்க.

நிகமாந்தாநாம் ஆகல்ப: யேந ஸ: - என்று பஹுவ்ரிஹி ஸமாஸங்கொண்டு, வேதாந்தங்களுக்கு அலங்காரத்தை உண்டாக்கியவர் என்று பொருள் கொள்ளலாம். நிகமங்களுக்கு - வேதங்களுக்கு அந்தங்களாவன - மறையின் முடிவுப் பகுதிகளாகிய உபநிஷத்துக்கள். அவ்வுபநிஷத்தாகிற பெண்ணின் கழுத்தில் ப்ரதானமான அலங்காரத்தை - மங்களஸூத்ரத்தை - மங்கள ஸூத்ரம் போன்ற பஞ்சஸ்தவியை



அருளிச்செய்தவர் என்பது இதன் கருத்து. ஒரு பெண்ணுக்கு ஒருவன் தாலிகட்டினால் அவளுக்கு அவன் கணவன் என்றறியலாமல்லவா? வேதாந்தங்களாகிய பெண்ணுக்கு ஸ்ரீமந்நாராயணனே கணவன் என்று எல்லோரும் அறியும் பொருட்டு, ஆழ்வான் ஸ்ரீரங்கேச புரோஹிதராகையாலே ஐந்து ஸ்தவங்களாகிய மங்களஸூத்ரத்தை ஸித்தப்படுத்தி அதனை ஸ்ரீரங்கநாதன்கையில் தந்து, வேதமாதின் கழுத் தில் கட்டும்படி செய்தார். எம்பெருமானை வேதமாதின் கணவனென்பது உபநிஷத்துக்களில் ஸ்ரீமந் நாராணனையே பரம்பொருளாகக் கூறியிருப்பதனால் என்க. ஒரு பெண் யாவனொருவனை உயர்ந்தவனாகக் கருதுவாளோ அவனல்லவோ அவளுக்குக் கணவனாவான். வேதங்களில் சிற்சில இடங்களில் ப்ரஹ்ம ருத்ராதிகளையும் பரம்பொருள்போல் கூறியுள்ளதனால் உண்மையில் பரம்பொருள் யார் என்பதனை சாதாரணமக்கள் அறியமுடியாமையால், உபயமீமாம்ஸா ந்யாயங்களைக் கொண்டும் இதிஹாஸபுராணாதிகளைக் கொண்டும் எம்பெருமானார் ஸ்ரீமந்நாராயணனையே பரம்பொருளாகத் தமது நூல்களில் அறுதியிட்டிருப்பதை அறிந்த கூரத்தாழ்வான் அதுதன்னைஅறிவிப்பதற்காகத் தாமருளிய ஸ்தவங்களை - ஸ்ரீமந்நாராயணனே வேதத்திற்குக் கணவனாகிய பரதத்வம் என்பதைக் குறிப்பாகக் காட்டும் தாலியாக ஸித்தப்படுத்தி அவ்வேதங்களுக்கு அலங்காரமாகக் கட்டுவித்தார். ஆக வேதத்திற்கு முக்கியவணியான மாங்கல்ய ஸூத்ரத்தை உண்டாக்கினவர் கூரத்தாழ்வானாகையால் அவர் நிகமாந்தா கல்ப: எனப்பட்டார்.

இனி நிகமாந்தா: ஆகல்பா: யஸ்ய ஸ: என்றிவ்விதமான பஹுவ்ரீஹி ஸமாஸமாகக் கொண்டு, வேதாந்தங்களை அலங்காரமாகக் கொண்டவர் ஆழ்வான் என்றும் கூறலாம். பொன்னால் செய்த நகை உடலை விளங்கச் செய்யும் ஆபரணம்.

ஆழ்வானுடைய அறிவை விளங்கச் செய்யும் ஆபரணம் வேதாந்தங்களாகையால் இங்ஙனம் சொல்லத் தடையில்லை.

இப்படிப்பட்ட வேதாந்த ஞானமுள்ளமையால், வேறு தேவதைகளுக்குப் பரதத்துவமாகுந் தன்மையைக் கூறுகிற புறச்சமயிகளை வென்றமைகொண்டு, குமதர்களாகிய யானைகளுக்கு ஸிம்ஹம் போன்றவர் எனப்பட்டார் ஆழ்வான்.

இங்ஙனம் வேதாந்தங்களை நன்கறிந்து, அவற்றை நன்கு அறியாத புறச்சமயிகளையும் வென்றமையினால், பண்டித ச்ரே டர்களில் தலைவராக அவர் குறிப்பிடப்பட்டார்.

யதீநாம் ராஜா - யதிராஜ:- துறவிகளுக்குத் தலைவரென்ற படி, ஹரிணீஅக்ஷே யஸ்ய ஸ :- ஹர்யக்ஷ: - மஞ்சள் நிறமான கண்களையுடைமையினால் ஸிம்ஹத்தின் பெயர் இது. கூராதிநாத: - கூரம் என்னும் ஊருக்குப் பெருந்தலைவர் - கூரத்தாழ்வான்.

जयति जगति नैजोद्वेलमेधाविशेषात्
अधिगततमबोधावासवृत्त्यर्थजालः ।
जनितयतिवरेण्यस्वान्तनिस्सीममोदः
श्रितजनपरिरक्षादीक्षितः कूरनाथः ।। २ ।।



*ஜயதி ஜக$_3$தி நைஜோத்$_3$வேலமேத$_4$ாவிஶேஷாத்*
*அதி$_4$க$_3$ததமபே$_3$ாத$_4$ாவாஸ வ்ருத்த்யர்த்த$_2$ஜால:*
*ஜநிதயதிவரேண்யஸ்வாந்த நிஸ்ஸீமமோத$_3$:*
*ஶ்ரிதஜநபரிரக்ஷாதீ$_3$க்ஷித: கூரநாத$_2$:. (2)*

நைஜ உத்வேல மேதாவிசேஷாத் - தமக்கு இயற்கையாக ஏற்பட்டதும் எல்லைகடந்ததுமான அறிவின் மேன்மையினாலே,



அதிகததம போதாவாஸ வ்ருத்தி அர்த்த ஜால: - நன்றாக அறியப்பட்ட போதாயந - முனிவரியற்றிய வ்யாஸ ஸூத்ர வ்ருத்தியின் அர்த்த ஸமூஹத்தை உடையவரும், (அதுகாரணமாக)ஜநிதயதிவரேண்யஸ்வாந்தநிஸ்ஸீமமோத: - உண்டாக்கப்பட்ட, யதிராஜர் திருவுள்ளத்தில் எல்லையற்ற உகப்பையுடையவரும், ச்ரிதஜந பரிரக்ஷா தீக்ஷித: - தம்மையடைந்த ஜனங்களை நன்றாகக் காப்பாற்றுவதில் விரதம் பூண்டவருமான, கூரநாத: - கூரத்தாழ்வான், ஜகதி - உலகில், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

முதல் ச்லோகத்தில் - எம்பெருமானாருடைய சி யரான கூரத்தாழ்வான் அவ்வாசிரியர்பெருமான் திறத்தில் பத்தி யுடையவராய்ப் பல பெருமைகளைப் பெற்றமையைப் பேசி, இந்த ச்லோகத்தில் எம்பெருமானார்க்கு இவர் மிகவும் உகப்பை உண்டாக்கியதைக் காரணங்காட்டி நிரூபிக்கிறார்.

வேதவியாஸபகவான் இயற்றிய ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு போதாயன முனிவர் மிகவும் விளக்கமாக எழுதிய வ்ருத்தி என்றும் உரை நூல் - எம்பெருமானாருக்கு - ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானமாகிய ஸ்ரீபா யமெழுதுவதன் பொருட்டுத் தேவைப்பட்டது. அதற்காக அவர் காசியில் உள்ள புஸ்தகாலயத்துக்கு ஆழ்வானோடு எழுந்தருளி வ்ருத்தியை வாங்கி, பாதி பாதியாகப் பிரித்துக் கடாக்ஷித்தபோது, ஆழ்வான் - உடையவர் கடாக்ஷியாத பாதிப் பகுதியைத் தாம் பார்த்து மனஸ்ஸிலே தரித்துக் கொண்டிருந்து, திரும்பி ஸ்ரீரங்கத்துக்கு உடையவரோடு எழுந்தருளி, அவர் ஸ்ரீபா யமருளிச் செய்யும்போது உடையவருக்கு விண்ணப்பித்து அவர் திருவுள்ளத்தில் மிகவும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணினார் என்ற சரித்திரம் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வாறு ஆசார்யனுக்கு உகப்பையுண்டாக்கிய கூரத்தாழ்வான் தம்மையடைந்தவர்களை ரக்ஷிக்கத் தடையென்?

போதாவாஸ: - அறிவுக்கு இருப்பிடமான போதாயன மகர்ஷி. அயன சப்தமும் ஆவாஸ சப்தமும் பர்யாயம்.

जयति हरिपरत्वस्थापनोद्वेलमोदात्
उपनिषदुपगूढान् न्यायतोऽर्थान् विवृण्वन् ।
अधरितशिवपारम्यार्थिचोलाधिराजः
शमितविमतवादः शान्तिमान्कूरनाथः ।। ३ ।।

*ஜயதி ஹரிபரத்வஸ்த$_2$ாபநோத்$_3$வேலமோத$_3$ாத்*
*உபநிஷது$_3$பகூ$_3$ட$_4$ாந் ந்யாயதோர்த்த$_3$ாந்விவ்ருண்வந்*
*அத$_4$ரித ஶிவபாரம்யார்த்தி$_2$ சோலாதி$_4$ராஜ:*
*சமிதவிமதவாத$_3$: ஶாந்திமாந் கூரநாத$_2$:.* (3)

ஹரி பரத்வ ஸ்தாபந உத்வேலமோதாத் - திருமாலின் பரம் பொருட்டன்மையை நிலைநாட்டுவதில் எல்லை கடந்த மகிழ்ச்சியினால், உபநிஷத் உபகூடாந் - உபநிஷத்துக்களில் மறைந்து கிடக்கிற, அர்த்தாந் - அர்த்தங்களை, ந்யாயத: - உபய மீமாம்ஸா யுக்திகளைக் கொண்டு, விவ்ருண்வந் - விளக்கா நின்றவராய், அதரித சிவபாரம்ய அர்த்திசோலாதி ராஜ: - வெல்லப்பட்ட, சிவனுடைய பரத்துவத்தைத் தம்மிடம் கேட்க விரும்பிய சோழ அரசனையுடையவரும் (அதுகாரணமாக), சமித விமத வாத: - ஓயச் செய்யப்பட்ட - சிவனே பரனென்று கூறுமவர்களின் எதிர் வாதத்தை யுடையவரும், சாந்திமாந் - பொறுமை யுடையவருமாகிய, கூரநாத: - கூரத்தாழ்வான், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

முதல் ச்லோகத்தில் வித்வந்மணிவர என்றும், குமதேப ஹர்யக்ஷஎன்றும் கூறியவற்றில் முதலான - பண்டித ச்ரே டர்களில் தலைவரானமையை, இரண்டாம் ச்லோகத்தில் போதாயனவ்ருத்தி க்ரந்தத்தின் அர்த்தங்களை நன்றாக



அறிந்தவரென்று கூறி முதலித்து, இரண்டாவதான - நீசச் சமயிகளாகிற யானைகளின் கூட்டங்களுக்கு ஸிம்ஹமாயிருக்கும் தன்மையை, இம்மூன்றாம் ச்லோகத்தில் - சோழராஜனை வென்று சைவர்களின் வாதத்தை முறியடித்தமையைக் காட்டி முதலிக்கிறார்.

'சிவனே பரம்பொருளென்று எழுதி அதன் கீழ் உம்முடைய கையெழுத்திட்டுத் தாரும்' என்று தம்மை வேண்டிய சோழவரசன் முன்பு அவனது கொள்கைக்கு முரணாக - உபநிஷத்துக்களில் மறைந்து கிடக்கிற - நாரர்யணனே பரம்பொருள் என்ற விஷயத்தை - ஜைமினியின் கர்ம மீமாம்ஸா ஸூத்ரங்களிலும் வியாஸரின் ப்ரஹ்ம மீமாம்ஸா ஸூத்ரங்களிலும் உள்ள யுக்திகளைக் காட்டி அறுதியிட்டு சோழனை அடக்கி மற்றும் அங்குள்ள சைவர்களுடைய வாதத்தை ஓயச் செய்தாரென்று பிரஸித்தமான சரித்திரத்தை இங்குக் குறிப்பிட்டமை காண்க.

பின்பு அச்சோழ மன்னவனால், பெரிய நம்பிகளும் தாமும் கண்களையிழக்கும்படி நேரிட்ட போதிலும், அவனுக்கு எவ்விதமான துன்பத்தையும் மனத்தினால் கூட நினையாமையால் ஆழ்வான் 'சாந்திமாந்' எனப்பட்டார்.

भवजलधिनिमग्नोद्धारणे बद्धदीक्षः
किमु भुवमवतीर्णः श्रीपतिः किन्नु सैन्येट् ।
उत शठरिपुरित्युल्लिख्यमानो महद्भिः
जयति गुरुवरेण्यः कूरनाथो महात्मा ।। ४ ।।

*ப$_4$வஜலதி$_4$நிமக்$_3$நோத்த$_4$ாரணே ப$_3$த்$_3$த$_4$தீ$_3$க்ஷ:*
*கிமு பு$_4$வமவதீர்ண: ஶ்ரீபதி: கிந்நு ஸைந்யேட்*

*உத ஶட$_2$ரிபுரித்யுல்லிக்$_2$யமாநோ மஹத்பி$_4$:*
*ஜயதி கு$_3$ருவரேண்ய: கூரநாதே$_2$ா மஹாத்மா.4*

பவஜலதி நிமக்ந உத்தாரண - ஸம்ஸாரமாகிய கடலிலே ஆழ அழுந்தியவர்களை உயரத்தூக்குவதில், பத்த தீக்ஷ: - நியமம் பூண்டவராய், புவம் அவதீர்ண: - பூவுலகில் அவதரித்த, ஸ்ரீபதி: கிமு - திருவின் மணவாளனோ?, ஸைந்ய ஈட கிந்நு - ஸேனை முதல்வரோ?, உத சடரிபு: - நம்மாழ்வாரோ?(இவர்), இதி - என்று, மஹத்பி:- பெரியோர்களாலே உல்லிக்யமாந : - ஊகிக்கப் படுமவரும், குருவரேண்ய: - ஆசார்யச்ரே டரும், மஹாத்மா - பரந்த மனம் படைத்தவருமான, கூரநாத: - கூரத்தாழ்வான், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

இதுவரையில் கூரத்தாழ்வானுடைய ராமாநுஜ பக்தியும் அறிவின் பெருமையும் புறச்சமயிகளை அடக்கிய ஆற்றலும் கூறப்பட்டன. இதில் கூரத்தாழ்வான் தமது பெருங்கருணை யினால், ஸம்ஸாரமாகிய பெருங்கடலில் ஆழ்ந்து துன்பப் படுகின்ற இவ்வுலக மக்களை உபதேசத்தினாலும் நூல்களை இயற்றுவதனாலும் உயரத்தூக்கிப் பரமபதத்தில் இன்புறச் செய்ய வேண்டும் என்று விரதம் பூண்டமையைக் கூற நினைத்து அவரை - அத்தகைய விரதம் பூண்ட திருமால் சேனைமுதலியார் நம்மாழ்வார் ஆகியவர்களின் அவதாரமாகப் பெரியோர்கள் ஊகிப்பதைத் தமக்கு அத்தாட்சியாகக் காட்டுகிறார்.



பிறவிக் கடலைக் கடந்து பரமபதத்தை அடைவதற்கு எளிய வழி சரணாகதியே. சரணாகதிமந்த்ரம் த்வயம். அதுதன்னை முதன் முதலில் திருமால் திருமகளுக்கு உபதேசிக்க, அப்பிராட்டி சேனை முதலியாருக்கு உபதேசிக்க, அவர் நம்மாழ்வாருக்கு உபதேசிக்க, அவ்வுபதேசம் பரம்பரையாகக் கூரத்தாழ்வானுக்குக் கிடைத்து, அவர் அந்த த்வயமந்திரத்தைத் தம் சி யர்களுக்கு நேராக உபதேசிப்பது மட்டுமன்றி, அதன்



பொருள்களை பஞ்சஸ்தவியின் மூலமாகவும் அறிவித்து எல்லோரும் எளிய வழியில் பரமபதமடையும் வழி வகுத்தார். இத்தகைய பெருங்கருணையைக்கொண்ட கூரத்தாழ்வானைச் சாதாரண மனிதராகக் கூறுவதில் த்ருப்தி அடையாத பெரியோர்கள்-முற்கூறிய மூவரின் அவதாரமாக ஊகித்தனர். மூவரைச் சொன்னது திருமகளுக்கும் உபலக்ஷண மென்று கொள்ளலாம். திருமால் திருமகள் சேனை முதலியார் நம்மாழ்வார் என்ற வரிசை - உலகத்தோரை உயர்த்தவேணும் என்ற கருணையெண்ணம் திருமாலை விடத் திருமகளுக்கும், அவளை விட ஸேனை முதல்வர்க்கும், அவர்தம்மை விட நம்மாழ்வார்க்கும் அதிகமென்பதைக் காட்டுவதற்காக என்று கொள்க. இவர்கள் ஏன் கூரத்தாழ்வானாக அவதரிக்க வேண்டுமென்று கேட்டால், வேண்டிய அளவு கருணை யெண்ணம் தமக்குப் போதாமையால் கூரத்தாழ்வானாகப் பிறந்தால் கருணைக் கடலாகிய எம்பெருமானாரை ஆச்ரயித்து அக்கருணைஎண்ணத்தை அதிகமாக ஸம்பாதிக்கலாமென்று எண்ணியே அவர்கள் அங்ஙனம் அவதரித்தார்கள் என்று கூறுதல் ஸ்வரஸம்.

निरवधिकदयाब्धिर्नायमाविर्भवेच्चेत्
इह भुवि विमलात्मा कूरनाथो महीयान् ।
विविधविषयनक्रग्रामजुष्टं कथं वा
भवजलनिधिपूरं निस्तरेयुर्जनौघाः ।। ५ ।।

*நிரவதி$_4$கத$_3$யாப்$_3$தி$_4$ர்நாயமார்விர்ப$_4$வேச்சேத்*
*இஹ பு$_4$வி விமலாத்மா கூரநாதே$_2$ா மஹீயாந்*
*விவித$_4$விஷயநக்ரக்$_3$ராமஜுஷ்டம் கத$_2$ம் வா*
*ப$_4$வஜலநிதி$_4$பூரம் நிஸ்தரேயுர்ஜநௌக$_4$ா:. (5)*

நிரவதிக தயா அப்தி:- எல்லையற்ற கருணைக்குக் கடல் போன்றவரும், விமலாத்மா - மலமற்ற மனம் படைத்தவரும், மஹீயாந் -(அதனால்) மிகப் பெரியவருமான, அயம் கூரநாத: - இந்தக் கூரத்தாழ்வான், இஹ புவி - இந்த உலகில், ந ஆவிர்பவேத் சேத் - அவதரிக்கவில்லையென்றால், விவித விஷய நக்ரக்ராம ஜுடம் - பலவகைப்பட்ட சப்தாதி விஷயங்களாகிய முதலைகளின் கூட்டங்களால் அடையப் பட்ட, பவ ஜலநிதி பூரம் - ஸம்ஸாரமாகிய கடல்வெள்ளத்தை, ஜந ஓகா: - மனிதர்கள் திரள்கள், கதம் வா நிஸ்தரேயு: - எப்படித்தான் தாண்டமுடியும்?

முன் ச்லோகத்தில் ஆழ்வான் மக்களை ஸம்ஸார ஸாகரத்திலிருந்து உயர்த்த வேணுமென்று விரதம் பூண்டமையைக் கூறி அதற்குக் காரணமாக அவர் தமது எல்லை கடந்த தயையை இந்த ச்லோகத்தில் குறிப்பிட்டு, இத்தகைய தயையும் விரதமும் பூண்ட ஆழ்வான் அவதரியாவிடில் மக்கள் ஸம்ஸாரக் கடலைத் தாண்ட முடியாதென்கிறார்.

ஸம்ஸாரமென்னும் இவ்வுலக வாழ்க்கையைக் கடலாக உருவகம் செய்ததற்கேற்ப, இங்கு உள்ள சப்தாதி விஷயங்களை முதலைகளாக உருவகம் செய்தார். கடலில் விழுந்தவனைக் கரையேறவொட்டாமல் அழித்திடும் முதலைகள் போன்றவை யல்லவா, இவ்வுலகில் பிறந்தவர்களை மோக்ஷமடைய வொட்டாமல் ஸ்வரூபநாசத்தையுண்டாக்குகின்ற சப்தாதி விஷயங்கள்!

सुचरितपरिपाकोऽस्मादृशां किन्नु पद्मा-
कमितुरखिलनेतुः प्रेमसारः कृतात्मा ।
विलसति भुवि कूरेशात्मनोदीर्यमाणः
जयति विबुधवर्यैः कूरनाथः कृपालुः ।। ६ ।।



*ஸுசரிதபரிபாகோஸ்மாத்$_3$ருசாம் கிந்து பத்$_3$மா*
*கமிதுரகி$_2$லநேது: ப்ரேமஸார: க்ருதாத்மா*
*விலஸதி பு$_4$வி கூரேசாத்மநோதீ$_3$ர்யமாண:*
*ஜயதி விபு$_4$தவர்யை: கூரநாத$_2$: க்ருபாலு:. (6)*

ய: - யாவரொருவர், கூரேசாத்மநா - கூரேசரென்னும் உருவமுடையவராக, புவி விலஸதி -உலகில் விளங்குகிறாரோ, ஸ: க்ருபாலு: கூரநாத: - அந்த தயைமிக்க கூரத்தாழ்வான், அஸ்மாகம் - நம்முடைய, ஸுசரித பரிபாக: - புண்ணியத்தின் பயனானது, க்ருதாத்மா கிந்து - வடிவெடுத்துவந்தவரோ? (அல்லது) பத்மா கமிது: - திருமகள் மணவாளனாய், அகில நேது: - ஸர்வேச்வரனாகிய எம்பெருமானுடைய, ப்ரேமஸார: - சிறந்த ப்ரீதியானது, க்ருதாத்மா கிந்து - வடிவெடுத்து வந்தவரோ?, இதி - என்று, விபுத வர்யை: - ப்ராஹ்மணோத் தமர்களால், உதீர்யமாண: - புகழப்பட்டவராய்க் கொண்டு, ஜயதி - மேம்பட்டுத் திகழ்கிறார்.

நான்காம் ச்லோகத்தில் திருமால், சேனை முதல்வர், நம்மாழ்வார், இவர்களின் அவதாரமாக ஆழ்வானைச் சில பெரியோர் உல்லேகம் செய்ததைக் குறிப்பிட்டவர், இந்த ச்லோகத்தில் மற்றும் சில மஹான்கள் - நாமெல்லோரும் செய்த புண்ணியத்தின் பயனே ஆழ்வானாக வடிவெடுத்து வந்ததோ? நம்மெல்லோர் திறத்திலும் எம்பெருமானுக்கு ஏற்பட்ட அன்பே ஆழ்வானாக உருவந்தாங்கி வந்ததோ என்று புகழ்வதாகவும் குறிப்பிடுகிறார். இப்படிப் பலர் பலவகையாகக் கூறுவதற்குக் காரணம் - ஐந்தாம் ச்லோகத்தில் கூறப்பட்ட - ஆழ்வானுடைய எல்லையில்லாத கருணையேயாகும்.

நாம் செய்த புண்ணியத்தின் மிகுதியினால் நம்மிடம் எம்பெருமானுக்குப் பேரன்பு விளைந்து அதனால் அவன் நம்மை உயரத்தூக்குவதற்காக ஆழ்வானை அவதரிப்பித்தானா?

அல்லது நிர்ஹேதுகமாகவே நம்மிடம் அவனுக்கு அன்பு உண்டாகி ஆழ்வானை அவதரிப்பித்தானா? என்று கூறுவதை, ஒரு சமத்காரமாக - நாம் செய்த புண்ணியமே கூரத்தாழ்வானாக உருவெடுத்து வந்ததோ, அல்லது எம்பெருமானுடைய பேரன்பே ஆழ்வானாக வடிவெடுத்து வந்ததோ என்று அருளிச்செய்தார்.

ஆழ்வானவதரிப்பதற்குப் போதுமான பெரும்புண்ணியம் நாம் அனைவரும் சேர்ந்தும் செய்யமுடியாமையைக் கருதி, பகவானுடைய பேரன்பே ஆழ்வானாக அவதரித்ததோ என்று பெரியவர்கள் கூறுவதாக அருளிச் செய்தார்.

अपहृतभवतापः(पैः) पावनैः प्रेमसान्द्रैः
अमृतरसनिदानैः आत्मभाजां कटाक्षैः ।
अनुकलमुपकुर्वन् शेमुषी शेषतायाः
जलधिदुहितृजानेः भ्राजते कूरनाथः ।। ७ ।।

*அபஹ்ருதப$_4$வதாப:(பை:) பாவநை: ப்ரேமஸாந்த்$_3$ரை:*
*அம்ருதரஸநித$_3$ாநை: ஆத்மப$_4$ாஜாம் கடாக்ஷை:*
*அநுகலமுபகுர்வந் ஶேமுஷீம் ஶேஷதாயா:*
*ஜலதி$_4$துஹித்ருஜாநே: ப்$_4$ராஜதே கூரநாத$_2$:(7)*

கூரநாத: - கூரத்தாழ்வான், ப்ரேமஸாந்த்ரை: - அன்பு செறிந்தவைகளும், பாவநை: - பரிசுத்தியை உண்டாக்குமவைகளும், அம்ருதரஸநிதாநை: - மோக்ஷானந்தத்துக்கு மூல காரணமானவைகளுமான, கடாக்ஷை: - தமது கடைக்கண் பார்வைகளாலே, ஆத்மபாஜாம் - உடலெடுத்த ஜீவாத்மாக்களுக்கு, ஜலதிதுஹித்ரு ஜாநே: - கடலரசன் பெண்ணான திருமகள் மணவாளனைக் குறித்து, சேஷதாயா:சேமுஷீம்- ''நாமெல்லாரும் அடிமை'' என்னும் அறிவை, அநுகலம் உபகுர்வந் - கணந்தோறும் உண்டாக்கிக் கொண்டு,





(அதனால்) அபஹ்ருத பவதாப: - அவர்களுடைய ஸம்ஸார தாபத்தைப் போக்கு மவராய், ப்ராஜதே - விளங்குகிறார்.

ஸம்ஸாரக்கடலில் அழுந்திய மக்களைத் தமது தயையினால் உயரத்தூக்குவது எப்படி என்று கேள்வி எழ - அதற்கு விடை அருளிச் செய்கிறார் இந்த ச்லோகத்தால். தமது திருமேனியில் உள்ள கைகளைக் கொடுத்து அவர்களை உயரத்தூக்கிப் பரமபதத்தில் சேர்ப்பதில்லை. பின்னையோ வெனில் ஞானமாகிய கையைக் கொடுத்துத் தூக்குகிறாரென்று கூறுவதைக் காண்க. 'ஞானக் கை தா' என்றாரிறே ஆழ்வார். உலகமக்களுக்கு - ''நாம் சுதந்திரர்கள் அல்லோம். சுதந்திரராக இருந்தால் நம்மி டப்படி உலக சுகத்தையனுபவிக்கலாம். அப்படி அனுபவித்தால் அதனால் நமக்குண்டாவது துன்பமே யன்றி வேறொன்றுமில்லை. நாம் திரு மகள் நாதனுக்கு அடிமைப் பட்டவர்களாகிறோம். அப்படிப்பட்ட நாம் நம்மடிமைத்தனத்திற் கேற்ப - அவனையே சரணமாகப் பற்ற வேண்டும். பற்றினால் அவன் நம்மை இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்துப் பரமபதம் சேர்த்துத் தன் திருவடிகளில் கைங்கரியத்தைத் தந்து நமக்கு இன்பமளிப்பான்'' என்று உபதேசித்து ஞானத்தை யுண்டாக்கி அதன் வாயிலாகப் பரமபதம் சேர்ப்பிப்பார் ஆழ்வான் என்றபடி. இப்படி ஞானத்தை உண்டாக்கி ஸம்ஸார தாபத்தைப் போக்குவர் (மோக்ஷமடைவிப்பர்) என்று, மோக்ஷமடைவிக்கும் ப்ரகாரத்தை இதனால் காட்டியருளினாராயிற்று.

'அபஹ்ருதபவதாபை:' என்று த்ருதீயா பஹு வசனமான பாடமிருந்தால், அது 'அம்ருத ரஸ நிதாநை:' என்பது போல் 'கடாக்ஷை:' என்பதற்கு விசேஷணமாகி, ஆழ்வானுடைய கடாக்ஷம் ஸம்ஸார தாபத்தைப் போக்கி மோக்ஷானந்தத்தையும் கொடுக்கும் என்ற பொருளைத் தரும். அது மிகவும் சிறக்கும்.

कृतकुवलयमोदः कोशभूतः कलानां
द्विजपतिरखिलाशाः शोभयन् नैजधाम्ना ।
प्रशमितपरितापः प्राप्य विष्णोः पदं तत्
विलसति विबुधेड्यः कूरनाथौषधीशः ।। ८ ।।

*க்ருதகுவலயமோத$_3$: கோசபூ$_4$த: கலாநாம்*
*த்விஜபதிரகி$_2$லாசா: சோப$_4$யந் நைஜதா$_4$ம்நா*
*ப்ரசமிதபரிதாப: ப்ராப்ய விஷ்ணோ: பத$_3$ம்தத்*
*விலஸதி விபுதேட்ய: கூரநாதௌ$_2$ஷதீ$_4$ச:*

க்ருத குவலயமோத: - 1. பூமண்டலத்திற்கு மகிழ்ச்சியைத் தருமவராய், 2. நெய்தல் மலருக்கு மலர்ச்சியைத் தருமவனாய், கலாநாம் கோசபூத: - 1. சாஸ்த்ரங்களுக்கு நிதியானவராய், 2. சந்த்ரகலைகளுக்கு நிதியானவனாய், த்விஜபதி: - 1.ப்ராஹ்மணர் களுக்குத் தலைவராய், 2.யாகத்திற்கு வேண்டிய ஓஷதிகளை வளர்க்கையால் யாகம் செய்யும் ப்ராஹ்மணர்க்குத் தலைவனாய், நைஜதாம்நா - 1. தனது ஞானவொளியாலே, 2.தனது காந்தியாலே (நிலாவினால்), அகில ஆசா: - எல்லாத் திக்கிலும் உள்ளவர்களையும் 2. எல்லாத் திக்குகளையும், சோபயந் - 1,2 விளங்கச் செய்து கொண்டு, ப்ரசமித பரிதாப: - 1.ஸம்ஸார தாபத்தைத் தணிப்பவராய், 2.வெயிலின் வெம்மையைத் தணிப்பவனாய், விபுத ஈட்ய: - 1.ப்ராஹ்மணர்களாலே துதிக்கத் தக்கவராய், 2.யாகத்துக்கு வேண்டிய ஓஷதிகளை வளர்க்கையாலே யாகத்தில் ஹவிஸ்ஸை ஏற்றுக் கொள்ளுகிற தேவர்களால் துதிக்கத் தக்கவனாய், தத் - 1,2. பிரசித்தமான, விஷ்ணோ: பதம் ப்ராப்ய - 1.பரமபதத்தை அடைந்து. 2.ஆகாசத்தை அடைந்து, கூரநாத ஓஷதீச: -1. கூரத்தாழ்வானாகிற 2. சந்திரன், விலஸதி - விசேஷமாக பிரகாசிக்கிறான்.



முன் ச்லோகத்தில் ஆழ்வானை ஸம்ஸாரதாபத்தைப் போக்குமவராகவும், அறிவாகிய ஒளியை மக்களுக்கு உபகரிப்பவராகவும் குறிப்பிட்டவர், சூரிய தாபத்தைத் தணித்து நிலவொளியைப் பரப்புகிற சந்திரனைப் பற்றிய நினைவு வந்ததனால், அவனுக்கும் ஆழ்வானுக்கும் பொருந்தும்படியாக இருபொருள்கள் தோன்றுமாறு அடைமொழிகளையிட்டு சிலேடையினால் ஆழ்வானைச் சந்திரனாக உருவகப் படுத்துகிறார் இதில்.

பதவுரையில் (1) என்று குறிப்பிட்ட விசேஷங்களை ஆழ்வானுக்கும், (2) என்று குறிப்பிட்டவற்றைச் சந்திரனுக்கும் பொருத்துக. ஆழ்வான் சந்திரன் போன்றவர் என்றால் அது உபமாலங்காரம். ஆழ்வானையே சந்திரனாகக் கூறினால் அது ரூபகாலங்காரம். ரூபகம் - உருவகம்.

सुजनहृदयपद्मोल्लासमाराद्वितन्वन्
कुजनकुवलयानां मीलनं चापि कुर्वन् ।
उदयमधिगतोऽसौ कूरनाथांशुमाली
दुरिततिमिरजालं देहभाजां हिनस्ति ।। ९ ।।

*ஸுஜநஹ்ருத$_3$யபத்$_3$மோல்லாஸமாராத்$_3$விதந்வந்*
*குஜநகுவலயாநாம் மீலநம் சாபி குர்வந்*
*உதயமதி$_4$க$_3$தோZஸௌ கூரநாத$_2$ாம்ஶுமாலீ*
*து$_3$ரிததிமிரஜாலம்தே$_3$ஹப$_4$ாஜாம் ஹிநஸ்தி.(9)*

அஸௌ -அந்த, கூரநாத அம்சுமாலீ - கூரத்தாழ்வானாகிற சூரியன், உதயம் - உதயத்தை, அதிகத:ஸந் - அடைந்தவனாய்க் கொண்டு, ஆராத் - தூரத்திலிருந்தே, ஸுஜந ஹ்ருதய - நல்லோர்களுடைய மனமாகிய, பத்ம உல்லாஸம் -

தாமரையின் மலர்ச்சியை, விதந்வந் - செய்துகொண்டும், குஜந குவலயாநாம் - தீயவர்களாகிய ஆம்பல்மலர்களி னுடைய, மீலநம் சாபி - கூம்புதலையும், குர்வந் - செய்து கொண்டும், தேஹபாஜாம் - உடலெடுத்த மனிதர்களுடைய, துரித திமிர ஜாலம் - பாபங்களாகிய இருளின் திரட்சியை, ஹிநஸ்தி - நாசம் செய்கின்றான்.

ஆழ்வானைச் சந்திரனாக வருணித்தவர் இதில் அவரைச் சூரியனாக உருவகம் செய்கிறார். வானத்திலிருந்து ஒளியைப் பரப்புவதனால் - சந்திரனைக் கூறியவுடன் சூரியனது நினைவு வருவது இயற்கையல்லவா?

முன்பு ஆழ்வானைச் சந்திரனாகக் குறிப்பிட்டபோது அவ்விருவர்க்கும் உள்ள பொருத்தங்களை - சிலேடையினால் இருபொருள்கள் தரக்கூடிய பதங்களையிட்டு விவரித்தார். இதில் அடைமொழிகளில் உள்ள பொருள்களை - ஒன்றை மற்றொன்றாக உருவகப்படுத்திக் கூறுகிறார். உதாரணமாக - 'க்ருதகுவலய - மோத:' - என்பதன்கண் குவலயம் என்பதற்கு - பூமண்டலம், நெய்தல் மலர் என்று இருபொருள்களுள்ளமையால் ஒரேபதத்தினால் இருவர்க்குமுள்ள பொருத்தத்தைக் காட்டினமையும், இதில் 'கூரநாதாம்சுமாலீ' என்று ஆழ்வானை சூரியனாக உருவகப் படுத்தியதுபோல, அடைமொழிகளிலும் - ஸுஜநஹ்ருதய பத்மோல்லாஸம் விதந்வந் (=நல்லோர்களின் மனமாகிய தாமரையின் மலர்ச்சியைச் செய்து கொண்டு) என்றிவ்வாறாக நல்லோர்களின் மனத்தையே தாமரையாக உருவகப்படுத்திக் காட்டினமையும் கருதத் தக்கது. நல்லோர்களின் மனத்தை மலரச்செய்பவர் ஆழ்வான்; தாமரையை மலரச் செய்பவன் சூரியன் என்று தனித் தனியாகக் கூறாமல், மனத்தையே தாமரையாக உருவகப்படுத்தினாரிறே. மற்றும் இங்ஙனமே காண்க.



अमृतजननभूमिः संश्रितानन्ददायी
सकलसुगुणसरत्नावासभूः पूर्णसत्त्वः ।
विमतकथकवर्यैर्नाविकैरप्यलङ्घ्यः
स्फुरति भुवि गभीरः कूरनथामृताब्धिः ।। १० ।।

*அம்ருதஜநநபூ$_4$மி: ஸம்ச்ரிதாநந்த$_3$தா$_3$யீ*
*ஸகலஸுகு$_3$ணரத்நாவாஸபூ$_4$: பூர்ணஸத்த்வ:*
*விமதகத$_2$கவர்யைர்நாவிகைரப்யலங்க்$_4$ய:*
*ஸ்பு$_2$ரதிபு$_4$வி கபீ$_4$ர: கூரநாத$_2$ாம்ருதாப்தி$_4$: (10)*

அம்ருத - 1.மோக்ஷத்திற்கு, 2.அம்ருதத்திற்கு, ஜநந பூமி: - பிறப்பிடமாய், ஸம்ச்ரித ஆநந்ததாயீ - தன்னை யடைந்த 1. முமுக்ஷுக்களுக்கு 2.இந்த்ராதி தேவர்களுக்கு மகிழ்ச்சியைத் 1.தருமவராய், 2.தருமதாய், ஸகல ஸுகுண ரத்ந ஆவாஸபூ: - எல்லா 1.நல்லகுணங்களாகிற 2.ரத்னங்களுக்கு இருப்பிடமாய், பூர்ணஸத்த்வ: - 1.ஸத்த்வகுணம் நிறைந்தவராய், 2. முதலை முதலிய பிராணிகளால் நிறைந்ததாய், விமத கதகவர்யை: - 1. வாதம் செய்யும் புற மதத்தவர்களாகிய, 2. படகோட்டி களாலே, அலங்க்ய: - 1.எதிர்க்க முடியாதவராய், 2. தாண்ட முடியாததாய், கபீர: - 1. ஆழ்ந்த மனமுடையவருமான, 2.ஆழமுடையதுமான, கூரநாத அம்ருதாப்தி: - 1.கூரத்தாழ்வானாகிய, 2.அமுதக்கடல் (பாற்கடல்), புவி - பூமியில், ஸ்புரதி - விளங்குகிறது.

எட்டாவது ச்லோகத்தில் ஆழ்வானைச் சந்திரனாக உருவகித்து, இதில் அவரை அச்சந்திரனுதித்த திருப்பாற்கடலாக உருவகிக்கிறார். இதிலும் (1) என்றும், (2) என்றும் குறிக்கப்பட்டவை முறையே ஆழ்வானிடமும், அமுதக் கடலினிடமும் பொருந்துவன. இது தன்னில் அம்ருத ஜநநபூமி:, பூர்ணஸத்த்வ:, அலங்க்ய:, கபீர: என்பவை இருபொருள்தரும் சிலேடைச்

சொற்கள். ஸுகுணரத்ன, விமதகதகவர்யை: நாவிகை:, கூரநாதாம்ருதாப்தி:, என்பவை நற்குணங்களாகிய ரத்னம், புறச்சமயிகளாகிய படகோட்டிகள், கூரநாதனென்றும் அமுதக் கடலென்று பொருள் தருவதால் உருவகங்கள். அம்ருதம் என்பதற்கு மோக்ஷம், அம்ருதம் (சாவாமருந்து) என்று இரண்டு பொருள்கள். ஆழ்வானிடம் சி யர்களுக்கு மோக்ஷம் கிடைக்கு மாகையால் அவர் மோக்ஷத்திற்குப் பிறப்பிடமானார். கடலைக் கடைந்து தேவர்கள் அம்ருதத்தைப் பெற்றதனால் அது அம்ருதத்திற்குப் பிறப்பிடமாயிற்று. ஆகையால் ஆழ்வான் முமுக்ஷுக்களான சி யர்களுக்கும், கடல் இந்த்ராதி தேவர்களுக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கினமை கூறப்ப ட்டது. மற்றும் இங்ஙனே காண்க.

सदाभिवृद्धिमाश्रितोऽक्षयोऽजडाशयोदयोऽ
कलङ्कभावभासुरो निराकृतोग्रसङ्गमः ।
विराजमानविग्रहो दिवाऽपि मित्रसन्निधौ
विनाकृतास्तसंश्रयो विभाति कूरराड्विधुः ।। ११ ।।

*ஸத$_3$ாபி$_4$வ்ருத்$_3$தி$_4$மாஶ்ரிதோக்ஷயோஜட$_3$ாஶயோத$_3$யோ*
*கலங்கப$_3$ாவபாஸுரோ நிராக்ருதோக்$_3$ரஸங்க$_3$ம:*
*விராஜமாநவிக்$_3$ரஹோ தி$_3$வாபி மித்ரஸந்நிதெ$_4$ள*
*விநாக்ருதாஸ்தாஸ்தஸம்ஶ்ரயோவிப$_4$ாதிகூரராட்$_3$வித$_4$ு:*

ஸதா அபிவ்ருத்திம் ஆச்ரித: -எப்போதும் வளர்ச்சியை அடைந்ததும், அக்ஷய: - தேய்தலில்லாததும், அஜடாசய உதய: - ஜலாசயமான கடலில் தோன்றாததும், புத்திமான் களுடைய மனதில் தோன்றுவதும், அகலங்கபாவ பாஸுர: - மறு(குற்றம்) இல்லாமையால் பிரகாசிக்குமதும், நிராக்ருத உக்ரஸங்கம: - சிவபிரானுடைய (தலையோடு) சேர்த்தியை



மறுத்ததும், மித்ர ஸந்நிதௌ - சூரியனுடைய ஸமீபத்தில், திவா அபி - பகலிலும், விராஜமாந விக்ரஹ: - பிரகாசிக் கின்ற பிம்பத்தை (திருமேனியை) உடையதும், விநாக்ருத அஸ்தஸம்ச்ரய: - மேற்கு மலையை அடைந்து அஸ்தமியாதது மான, கூரராட் விது: - கூரத்தாழ்வானாகிய (மதி சந்திரன்), விபாதி - விளங்குகிறது.

முன்பு எட்டாவது ச்லோகத்தில் ஆழ்வானைச் சந்திரனாக ரூபணம் செய்து. சந்திரனிடத்தில் உள்ள தன்மையனைத்தும் ஆழ்வானிடத்தும் உள்ளமை கூறப்பட்டது. இதில் சந்திரனுக்கு உள்ள தீமைகள் ஆழ்வானிடம் இல்லையென்று கூறப்படுகிறது. இத்தீமைகள் சந்திரனிடம் இல்லாவிட்டால், அல்லது இத்தீமைகள் இல்லாத சந்திரனொருவன் இருந்தால், அப்போது தான் ஆழ்வானைச் சந்திரனாக ரூபணம் செய்யவியலும் என்பது கருத்து. 'ஸதா' என்பதனை எல்லாச் சொற்களோடும் கூட்டுக. ஜலாசய: என்பதே ஜடாசய: என்றாயிற்று. டலயோ: அபேத: (=டகரமும் லகரமும் ஒன்றே) என்பராகையால். ஜலாசய: - ஜலம் தங்குமிடமான கடல். ஜட:- அறிவில்லாதவன் என்று கொண்டு, அஜடாசய: என்பதற்கு - அறிவில்லாதவர் மனதில் தோன்றாமல் அறிவுடையவர் மனதில் தோன்றுமவன் ஆழ்வானாகிய சந்திரன் என்றும் கூறல் தகும். சந்திரனுடைய தீமைகளாவன - சிலநாள் வளர்வதும், சிலநாள் தேய்வதும், மறுவுடைமையும் உக்ரனாகிய - கோபியான சிவன் தலையில் தங்குவதும், பகலில் சூரியன் பக்கத்தில் இருக்கும் போது ஒளிமழுங்குதலும், மேற்குமலையில் மறைதலும் முதலியனவாம்.

प्रसादमेयिवान् सदा प्रकामवीक्ष्यविग्रहः
प्रबोधमावहन् नृणां प्रणाशयंस्तमस्ततिम्
सदोत्तरायणान्वितो विमुक्ततामसग्रहः
त्रयीमयोऽत्रा कूरराड्दिवाकरो विराजते ।। १२ ।।

*ப்ரஸாத$_3$மேயிவாந் ஸத$_3$ா ப்ரகாமவீக்ஷயவிக்$_3$ரஹ:*
*ப்ரபே$_3$ாத$_4$மாவஹந்ந்ருணாம்ப்ரணாஶயம்ஸ்தமஸ்ததி*
*ஸதே$_3$ாத்தராயணாந்விதோவிமுக்ததாமஸக்ரஹ:*
*த்ரயீமயோத்ர கூரராட்$_3$தி$_3$வாகரோ விராஜதே.*

ஸதா - எப்போதும், ப்ரஸாதம் ஏயிவாந் - 1. அனுக்ரஹத்தை அடைந்தவராய், 2. உக்ரமாக அல்லாமல் தெளிவை யடைந்தவனாய், ப்ரகாம வீக்ஷ்ய விக்ரஹ: -1.நன்றாக ஸேவிக்கத்தக்க திருமேனியை யுடையவராய், 2.கண்கூசாமல் காணத்தக்க பிம்பத்தையு டையவனாய், ந்ருணாம் ப்ரபோதம் ஆவஹந் - 1.மனிதர்களுக்கு நல்ல அறிவை உண்டாக்குமவராய், 2.மனிதர்களுக்கு (தூக்கத்திலிருந்து) விழிப்பை உண்டாக்கு மவனாய், தம: ததிம் ப்ரணாசயந் - 1.அறியாமைத்திரட்சியை அழிப்பவராய், 2.இருளின் திரட்சியை அழிப்பவனாய், ஸதா - எப்போதும், உத்தராயண அந்வித: - 1. உயர்ந்த வழியில் சேர்ந்தவராய், 2.உத்தராயணத்தில் சேர்ந்தவனாய், விமுக்த தாமஸக்ரஹ: - 1.தமோகுணமுடையவர்களால் பற்றப் படாதவராய், 2.ராகுவினால் பீடிக்கப்படாதவனாய் (க்ரஹணம் இல்லாதவனாய்), த்ரயீமய: - 1.வேதவிசாரம் செய்வதனால் வேதமயராய், 2. மூன்று வேதத்தையே உருவமாக வுடையவனாய் இருக்கிற, கூரராட்திவாகர: - கூரத்தாழ்வானாகிற சூரியன்,அத்ர- இவ்வுலகில் விராஜதே - மிகவும் விளங்குகிறான்.

முன்ச்லோகத்தில் ஆழ்வானைத் தீமையில்லாத சந்திரனாக ரூபணம் செய்தது போல,இதில் அவரைத் தீமையற்ற சூரியனாக ரூபணம் செய்கிறார். ஒன்பதாம் ச்லோகத்தில் நன்மையுள்ள சூரியனாக ரூபணம் செய்ததும் நினைக்கத் தக்கது. இந்த ச்லோகத்திலும் ஸதா என்பதனை எல்லாப் பதங்களோடும் அந்வயித்துப் பொருள்கொள்க.



சூரியனுக்குத் தீமையாவன - சில ஸமயங்களில் உக்ரமாக இருத்தல், அதுகாரணமாகக் கண்கூசாமல் காணமுடியாதிருத்தல், நல்லகாரியங்கள் செய்யத்தகாத தக்ஷிணாயனத்தில் சேர்ந்திருத் தல், ராகுவினால் பீடிக்கப்பட்டு க்ரஹணதோஷம் உண்டாகப் பெறுதல் ஆகியவை. இருளின் திரட்சியை அழிப்பதும் வேதமயனாயிருப்பதும் குணமே. ஆனாலும் தோஷங்களே மிக்கவையென்க. இப்படிப்பட்ட தோஷங்கள் இல்லாததொரு சூரியன் இருப்பானாகில் அப்போதே ஆழ்வானைச் சூரியனாக ரூபணம் செய்ய முடியுமென்பது கருத்தாகும்.

स्वकीयहृद्गुहाशयालु सारसाक्षकेसरी
परीतवाग्झरीभरो विरक्तमुख्यसंश्रयः ।
विशेषशास्त्रायुक्तिभिः विचित्रधातुभिर्युतः
विभाति कूरराण्महीधरः पुमर्थसिद्धये ।। १३ ।।

*ஸ்வகீயஹ்ருத்$_3$கு$_3$ஹாஶயாலு ஸாரஸாக்ஷகேஸரீ*
*பரீதவாக்ஜ$_4$ரீப$_4$ரோ விரக்தமுக்யஸம்ஶ்ரய:*
*விஶேஷஶாஸ்த்ரயுக்திபி$_4$: விசித்ரத$_4$ாதுபி$_4$ர்யுத:*
*விப$_3$ாதி கூரராண்மஹீத$_4$ர: புமர்த்த$_2$ஸித்$_3$த$_4$யே.*

ஸ்வகீய ஹ்ருத் குஹாசயாலு ஸாரஸாக்ஷ கேஸரீ - தன்னுடைய தான ஹ்ருதயமாகிய குகையில் கிடந்துறங்குகிற புண்டரீகாக்ஷனாகிய (திருமாலாகிய) ஸிம்ஹத்தை யுடையதும், பரீதவாக் ஜரீபர: - நிறைந்த ஸ்ரீஸூக்திகளாகிய அருவிகள் மிகப் பெற்றதும், விரக்த முக்ய ஸம்ச்ரய: - ஆசையற்றவர்களுக்கு முக்கியமான புகலிடமானதும், விசேஷசாஸ்த்ர யுக்திபி: - சிறந்த சாஸ்திரயுக்திகளாகிய, விசித்ர தாதுபி: - பலவகைப்பட்ட தாதுக்களோடு, யுத: - கூடியதுமான, கூரராட் மஹீதர: - கூரத்தாழ்வானாகிய-

ப்ர்வதமானது, புமர்த்தஸித்தயே - மோக்ஷபுருஷார்த்தம் ஸித்திப்பதன் பொருட்டு, விபாதி - மிகவும் விளங்குகிறது.

சந்திரசூரியர்கள் உதிப்பதும் அஸ்தமிப்பதும் மலையில் ஆகையாலே, மலையின் நினைவு வரவே. ஆழ்வானை மலையாக ரூபணம் செய்கிறார் இதுதன்னில். மலையின் குகையில் சிங்கம் கிடந்துறங்கும். ஆழ்வானுடைய ஹ்ருதயத்தில் ஸாரஸாக்ஷ (தாமரைக்கண்ண)னான நரஸிம்ஹப்பெருமான் அவருடைய தியானத்துக்கு விஷயமாகிச் சயனித்துள்ளான். ஆழ்வானுக்குத் திருவாராதனப்பெருமாள் அழகிய சிங்கரென்று பெரிய திருமுடியடைவில் உள்ளமை காண்க. ஸ்ரீஸூக்தி வெள்ளத்தைப் பொழியுமவர் ஆழ்வான். அருவி நீரைப் பெருக்குவது மலை, ஆசையற்ற மகான்களுக்குப் புகலிடமானவர் ஆழ்வான். ஆசையற்று மனத்தை யடக்கித் தவம் செய்யுமவர்களுக்குப் புகலிடமாவது மலை. சிறந்த சாஸ்திர யுக்திகளை நிறைய அறியப் பெற்றவர் ஆழ்வான். கைரிகம் முதலிய தாதுக்களுக்கும் பொன் முதலிய லோஹங்களுக்கும் இருப்பிடம் மலை. இப்படிப்பட்ட ஆழ்வான் சி யர்களுடைய மோக்ஷமென்கிற புருஷார்த்தம் ஸித்திப்பதற்காக விளங்குகிறார். இத்தகைய மலை தன்னிடம் தங்கித் தவம் செய்பவர்களின் தவத்தின் பயனான தர்மார்த்த காமமோக்ஷ ஸித்திக்காக விளங்குகிறது. இங்ஙனம் உள்ள பொருத்தங்களை நினைத்து ஆழ்வானை மலையாக உருவகம் செய்தார். அது போன்றே, அடைமொழிகளிலும் ஹ்ருதய மாகிய குகை. எம்பெருமானாகிய சிங்கம் , ஸ்ரீஸூக்திகளாகிய அருவி, சாஸ்திரயுக்திகளாகிய பலவகைப்பட்ட தாதுக்கள் என்றிவ்வாறாக உருவகம் செய்துள்ளமையும் காணத்தக்கது.

यतीशवाक्सुधाझरीसदानुभूतिमत्तधीः
त्रायीशिरोऽर्थपुङ्खिताः सुयुक्तिसायकावलीः ।



सृजन् कुवादिविद्विषः प्रकालयन् गुरोः पदे
ऽभिषिक्त एष कूरराट् प्रशास्ति वैष्णवीं श्रियम् ॥१४

*யதீஶவாக் ஸுத$_4$ாஜ$_4$ரீஸத$_3$ாநுபூ$_4$திமத்ததீ$_4$:*
*த்ரயீஶிரோர்த$_2$புங்கி$_2$தா: ஸுயுக்திஸாயகாவலீ:*
*ஸ்ருஜந் குவாதி$_3$வித்$_3$விஷ: ப்ரகாலயந் கு$_3$ரோ:பதே$_3$*
*ऽபி$_4$ஷிக்தஏஷகூரராட்ப்ரஶாஸ்திவைஷ்ணவீம்ஶ்ரியம்*

யதீசவாக்ஸுதாஜரீ ஸதாநுபூதி மத்த தீ: - யதிராஜருடைய ஸ்ரீஸூக்திகளாகிய அம்ருதத்தின் வெள்ளத்தை எப்போதும் அனுபவிப்பதனால் செருக்குக்கொண்ட அறிவையுடையவராய், த்ரயீ சிரோர்த்த புங்கிதா: - வேதாந்தார்த்தங்களை மூலமாகக் கொண்டு தொடுக்கப்பட்ட, ஸுயுக்தி ஸாயக ஆவலீ:- நல்ல யுக்திகளாகிய பாணங்களின் வரிசைகளை, ஸ்ருஜந் - விடுமவராய்க் கொண்டு, குவாதி வித்விஷ: - துர்வாதம் செய்யும் புறமதத்தவராகிய பகைவர்களை, ப்ரகாலயந் - மிகவும் அழிப்பவராயும் (மறுப்பவராயும்), குரோ: பதே - ஆசார்யருடையஸ்தானத்திலே, அபிஷிக்த: - பட்டாபிஷேகம் செய்யப்பட்டவராயும் உள்ள, ஏஷ: கூரராட் - இந்தக் கூரத்தாழ்வான், வைஷ்ணவீம் ச்ரியம் - ஸ்ரீவை ணவர்களுடைய செல்வத்தை, ப்ரசாஸ்தி - ஆளுகிறார்.

இதுவரையில் ஆழ்வானுக்குள்ள பகவத் ராமாநுஜாசார்ய விஷயமான பக்தி, மற்ற விஷயங்களில் வைராக்கியம், அறிவு, சாந்தி முதலிய குணங்கள், சந்திரஸூரியர்கள் போன்று ஒளியைப் பரப்பி இருளையகற்றும் ஆற்றல், ஸத்வ குணமுள்ளவர்களால் ஆச்ரயிக்கப்படுதல், அவர்களுக்கு மோக்ஷ புருஷார்த்தத்தைத் தரும் பெருமை முதலிய விசேஷங்களைக் குறிப்பிட்டு, இந்த ச்லோகத்தில் அவர் ஆசார்ய ஸ்தானத்தில் பட்டாபிஷேகம் செய்யப்பட்டு ஸ்ரீவை ணவஸ்ரீயைப் பரிபாலனம் செய்யும் வகையை அருளிச் செய்கிறார்.

ஸ்ரீ வை ணவர்களின் செல்வமாவது - பகவத் ராமாநுஜ முனிவர் வேதங்களை, உபய மீமாம்ஸா நியாயங்களையும் இதிஹாஸங்க ளையும் ஸாத்விகபுராணங்களையும் துணையாகக் கொண்டு நடுநிலை நின்று ஆராய்ந்து தமது ஸ்ரீ பா யாதி க்ரந்தங்களில் பொறித்து வைத்தருளிய அர்த்த விசேஷங்கள். அவற்றைப் பரிபாலநம் செய்தலாவது - அவற்றுக்கு முரணாக மதாந்தரஸ்தர்கள் கூறும் அவப்பொருள்களை - முற்கூறிய க்ரந்தங்களில் உள்ள வேதாந்தார்த்தங்களையும் அவற்றுக்குப் பொருந்திய யுக்திகளையும் சொல்லி மறுத்தலும், அவ்வர்த்தங் களைத் தாமும் அனுபவித்துத் தமது சிஷ்யர்களுக்கும் உபதேசித்தலும் ஆகும். அவற்றில் முதலது இரண்டு மூன்றாம் பாதங்களிலும் இரண்டாமது முதல் பாதத்திலும் கூறப்பட்டது. ''யதீச வாக்ஸுதாஜரீ ஸதாநுபூதி'' என்று எம்பெருமானாரது ஸ்ரீஸூக்திகளை அவர்தாம் அநுபவிப்பதாகக் கூறியது அவர் தம் சியர்களுக்கு உபதேசிப்பதையும் உபலக்ஷண வகையால் குறிக்கும்.

कथाहवोन्मुखान् बहून् कपर्दिदुर्मताश्रयान्
मुधाकृतागमश्रमान् विधाय वादिनः परान् ।
बुधाधरीकृतिक्षमैः स्ववाग्झरीभरैरसौ
बुधावलीसमीडितश्सकास्ति कूरभूपतिः ।। १५ ।।



*கத$_3$ாஹவோந்முகா$_2$ந் ப$_3$ஹூந் கபர்தி$_3$துர்மதாஶ்ரயாந்*
*முத$_4$ாக்ருதாக$_3$மஶ்ரமாந் வித$_4$ாய வாதி$_3$ந: பராந்*
*பு$_3$த$_4$ாத$_4$ரீக்ருதிக்ஷமை: ஸ்வவாக்$_3$ஜ$_4$ரீப$_4$ைரரஸௌ*
*புத$_3$ாவலீ ஸமீடி$_3$தஶ்சகாஸ்தி கூரபூ$_4$பதி: (15)*

அஸௌ கூரபூபதி: - அந்தக் கூரத்தாழ்வான், கதா ஆஹவ உந்முகாந் - வாதம் என்ற போர் செய்வதற்காகத் தம்மை எதிர் நோக்கி நின்றவர்களும், கபர்தி துர்மத ஆச்ரயாந் -



சிவனுடைய கெட்ட மதத்தைப் பின்பற்றியவர்களுமாகிய, பஹூந் வாதிந: - பல வாதம் செய்யுமவர்களை, புத அதரீக்ருதி க்ஷமை:- புறமதப் புலவர்களை வெல்லுவதற்குரிய ஸ்வவாக் ஜரிபரை: - தமது ஸ்ரீஸூக்திகளாகிற - அதிகமான வெள்ளப் பெருக்கினால், முதாக்ருத ஆகம ச்ரமாந் - பயனற்றதாகச் செய்யப்பட்ட (தமது) சைவாகமப் பயிற்சியை யுடையவர்களாக, விதாய- செய்துவிட்டு, புதாவலீ ஸமீடித: - மத்யஸ்தரான பண்டிதர்களின் திரளினால் மிகவும் துதிக்கப் பட்டவராய், சகாஸ்தி - விளங்குகிறார்

கீழ்ச்லோகத்தில் ''குவாதிவித்விஷ: ப்ரகாலயந்'' என்று சொல்லப்பட்ட - புறமதங்களை மறுக்குந்தன்மையை இதில் விவரிக்கிறார். சிவனே பரம்பொருள் என்ற கொள்கையைத் தெரிவிக்கும் சைவாகமத்தைப் பிரமாணமாகக் கொண்ட சிலர் ஆழ்வானெதிரில் வாதத்துக்கு வந்தார்களாக, அவர்களை வெல்லுவதற்குத் தக்க தமது பேச்சுக்களால் அவர்களை வென்று, அவர்களது சைவாகமப்பயிற்சியைப் பயனற்றதாக ஆக்கி விட்டார் ஆழ்வான். அவரைப் பண்டிதகோ டி ஸ்தோத்ரம் செய்தது - என்றாராயிற்று.

विभूतिमैहिकीं त्यजन् विमोहदायिनीं भृशं
विधातृमुख्यसेवितां अहन्तयाऽतिदूषिताम् ।
श्रुतीडितामनिन्दितां स्वरूपशेमुषीमतां
श्रियं समाश्रयन्नसौ विभाति कूरभूपतिः ।। १६ ।।

*விபூ$_4$திமைஹிகீம்த்யஜந்விமோஹதா$_3$யிநீம்ப்$_3$ருஶம்*
*வித$_4$ாத்ருமுக்$_2$யஸேவிதாம் அஹந்தயாऽதிதூ$_3$ஷிதாம்*
*ச்ருதீடி$_3$தாமநிந்தி$_3$தாம் ஸ்வரூபஶேமுஷீமதாம்*
*ஶ்ரியம் ஸமாச்ரயந்நஸௌ விப$_4$ாதி கூரபூ$_4$பதி:*

அஸௌ கூரபூபதி: - அந்தக் கூரத்தாழ்வான், விதாத்ரு முக்ய ஸேவிதாம் - பிரமன் முதலியவர்களாலே வசிக்கப்பெற்றதும், (அதனால்) அஹந்தயா அதிதூஷிதாம் - அஹங்காரத்தினால் மிகவும் கெடுக்கப்பட்டதும் (அதனால்), ப்ருசம் விமோஹ தாயிநீம் - விஷயங்களே அனுபவிக்கத்தக்கவை என்ற அஜ்ஞானத்தை மிகவும் தரக்கூடியதுமான, ஐஹிகீம் விபூதிம் - இந்த உலகத்தை, த்யஜந் - விட்டொழிப்பவராய்க் கொண்டு, அநிந்திதாம் -இகழப்படாததும், ச்ருதி ஈடிதாம் - வேதத்தினால் புகழப்பட்டதுமான, ஸ்வரூப சேமுஷீமதாம் - ஜீவாத்ம ஸ்வரூப ஜ்ஞானமுடையவர்களுடைய, ச்ரியம்-(மோக்ஷமாகிய) செல்வத்தை, ஸமாச்ரயந் விபாதி - அடைந்தவராய் விளங்குகிறார்.

ஆழ்வான் லீலாவிபூதியை விட்டு நித்யவிபூதியாகிய பரமபதத்தை அடைந்து விளங்குவதை இதில் ப்ரஸ்தாவிக்கிறார். இந்த ச்லோகத்துக்கு முன்ச்லோகமும், இதற்குப் பின்பு சில ச்லோகங்களும் ஆழ்வான் செய்கிற பரபக்ஷப்ரதிக்ஷேபத்தை (புறச் சமயிகளை வெல்லுவதைத்) தெரிவிப்பனவாயிருக்க, அவர் இவ்வுலகவாழ்வை நீத்து ஸ்ரீவைகுண்டமெய்திய செய்தியைக் குறிக்குமதான இந்த ச்லோகம் இடையில் எப்படிப் புகுந்ததென்று விளங்கவில்லை. நிற்க.



விபூதி: - எம்பெருமானால் அடக்கியாளப்படுவதென்ற படி. அது இருவகைப்படும். லீலாவிபூதி என்றும் நித்ய விபூதியென்றும். எம்பெருமான் தன்னுடைய விளையாட்டுக்காக ஒருகால் உண்டாக்கி மற்றொருகால் அழிக்கும் இவ்வுலகம் - லீலாவிபூதி. எம்பெருமான், தானும் தன்மனைவிமார்களும் தன்னடியார்களான நித்யஸூரிகளும் முக்தருமாக அழகோலக்க மிருந்து மகிழ்வதற்காகவே நித்யமாக ஸங்கல்பித்த பரமபதம் - நித்யவிபூதி. இந்த லீலாவிபூதியில் ப்ரஹ்மாதி தேவர்களும் மனிதர்களும் வசிக்கின்றனர். பெரும்பாலும் இவர்கள்



அனைவருமே சரீரமே ஆத்மா என்றும், சரீரத்தைக் காட்டிலும் ஆத்மா வேறாக இருந்தாலும அது ஸ்வதந்திரமே அன்றி பரமாத்மாவுக்குப் பரதந்த்ரமன்று என்றும் ஏற்படுகிற அஹங்காரமுடையவர்கள். இப்படிப்பட்ட அஹங்காரம் உடையவர்கள் வசிப்பதனால் இந்த விபூதி கெடுக்கப்பட்டதாகும். நித்யவிபூதி என்ற பரமபதமோவென்னில் இத்தகைய அஹங்காரம் ஏதுமின்றி, இதற்கு முரணாக, சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டது ஆத்மா என்றும், அதுஸ்வதந்தரமன்று; பரமாத்மாவுக்குப் பரதந்த்ர மானது என்றும் எண்ணி, அந்த பாரதந்தர்யத்துக்குச் சேரும்படி பரமாத்மாவுக்குக் கைங்கரியம் செய்து வருகிற நித்யரும் முக்தரும் வாழுமிடமாகையால் நல்லதாகி இகழப்படாததால் வேதத்தினால் புகழப்பட்டது மாகின்றது. சில பாக்யவான்களான மனிதர் பகவத் கடாக்ஷத்தாலோ ஆசார்ய கடாக்ஷத்தாலோ அஹங்காரம் அழியப் பெற்றும், ஜீவாத்மா, பரமாத்மாவுக்குப் பரதந்தரன் என்னும் அறிவு உண்டாகப் பெற்றும் இவ்வுலகவாழ்வை விட்டு, பரமனுக்கு அடிமை செய்யப் பரமபதம் செல்கின்றனர். அன்னவர்களில் ஒருவரான ஆழ்வானும் இவ்வுலகத்தை விட்டு ஸ்ரீவைகுண்டத்தை அடைந்து பகவத் கைங்கர்யமாகிய செல்வத்தைப் பெற்று விளங்குகிறார் என்றாராயிற்று.

मृषामतं विधाय तन्मृषा स्वयुक्तिभिर्जग-
न्मृषात्वबाधकप्रमाप्रकाशिकाभिरात्मनाम् ।
अनेकतामशेषतां प्रकाशयन् व्यपोहयन्
प्रमातृशेखरस्तुतः प्रकाशतेऽत्र कूरराट् ।। १७ ।।

*ம்ருஷாமதம் வித$_4$ாய தந்ம்ருஷா ஸ்வயுக்திபி$_4$ர்ஜக$_3$ந்*
*ம்ருஷாத்வப$_3$ாத$_4$கப்ரமாப்ரகாஶிகாபி$_4$ராத்மநாம்.*

*அநேகதாமஶேஷதாம் ப்ரகாஶயந் வ்யபோஹயந்*
*ப்ரமாத்ருஶேக$_2$ரஸ்துத:ப்ரகாஶதேத்ர கூரராட்.*

கூரராட் - கூரத்தாழ்வான், ஜகத் ம்ருஷாத்வ பாதகப்ரமா ப்ரகாசிகாபி: - உலகம் பொய்யென்பதை மறுக்கிற அறிவை வெளிப்படுத்துகின்ற, ஸ்வயுக்திபி: - தம்முடைய யுக்திகளாலே, தத் ம்ருஷாமதம் - உலகம் பொய்யென்கிற அந்த அத்வைத மத்தை, ம்ருஷா விதாய - பொய்யாக ஆக்கி (மறுத்து), ஆத்மநாம் - ஆத்மாக்களுடைய, அநேகதாம் - பன்மையை, ப்ரகாசயந் - வெளிப்படுத்துமவராயும், அசேஷதாம் - ஆத்மாக்கள் பகவானுக்கு அடிமையல்ல என்பதை, வ்யபோஹயந் - மறுத்துறைப்பவராயும் ஆகி, ப்ரமாத்ருசேகரஸ்துத: - உண்மையறிவுடையவர்களில் தலைவர்களாலே புகழப்பட்டவராய்க் கொண்டு, அத்ர ப்ரகாசதே - இவ்வுலகில் திகழ்கிறார்.

ஆழ்வான் சைவமதத்தை வென்றமையைக் கீழ் பதினைந்தாவது ச்லோகத்தில் கூறி, இதில் அத்வைத மதத்தை மறுத்தமையைக் குறிப்பிடுகிறார்.

ப்ரஹ்மம் ஒன்றே உள்ளது. அதனில் வேறுபட்ட மற்ற ஆத்மாவோ, மற்றுமுள்ள ஜடப்பொருளோ ஏதுமில்லை. பரமாத்மாவாகிய ப்ரஹ்மமொன்றே அநாதியான மாயையினால் (அஜ்ஞானத்தினால்) மறைக்கப்பட்டு, தன்னை ப்ரஹ்மத்தை விட வேறான ஜீவாத்மாவாகவும், மற்றுள்ள சடப்பொருளாகவும் பலவாக ப்ரமிக்கிறது. ஒவ்வொரு சரீரத்திலும் புகுந்து ஸம்ஸாரியாய் துக்கப்படுகிறது. அந்த ப்ரஹ்மமே ஆசார்யோபதேசத்தாலே (=தத்த்வம் அஸி(த்வம் = நீ, தத் அஸி = அந்த ப்ரஹ்மமே ஆகிறாய், வேறல்ல) என்ற வேத வாக்கியத்தின் அர்த்தத்தை ஆசார்யன் உபதேசித்தனாலே) தன்னை ஜீவாத்மாவாகவும் மற்றுள்ள பொருளாகவும் ப்ரமித்த ப்ரமம் தீர்ந்து மோக்ஷம் பெறுகிறது. பரமாத்மாவே ஜீவாத்மா.



ஆகையால் ஜீவாத்மா பரமாத்மாவுக்கு சேஷமல்ல (அடிமையல்ல). ஜீவாத்மா பலவுமல்ல. ஆக ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யமானது, ஜீவாத்மாவும் ஜடமுமான உலகம் பொய் என்றார்கள் அத்வைதிகள்.

ப்ரஹ்மமென்பது தெளிந்த ஞானமுடையதாக வேதத்தில் சொல்லப்பட்டிருக்கையாலே, தன்னை ப்ரஹ்மத்தை விட வேறான ஜீவாத்மாவாக ப்ரமிக்கையாகிய கலக்கம் அதற்கு ஏற்படுவதற்கு இடமில்லை. 'த்வம் தத் அஸி' என்ற வேத வாக்கியம், மண்ணில் இருந்து உண்டாகும் பானை முதலியன மண்ணே தான்' என்றிவ்வாறு காரிய காரணங்களுக்குள்ள ஒற்றுமை நயத்தைக் கூறுகிற ப்ரகரணத்தில் உள்ளதாகையால் பரப்ரஹ்மத்தினிடமிருந்து உண்டாகும் நீ அந்த பரப்ரஹ்மமே யாகிறாய் என்று ஒற்றுமை நயத்தையே கூறுகிறது. அதாவது ஸ்ருஷ்டிக்கு முன்பு, ஜீவாத்மா சரீரமில்லாமையால் அறிவின் மலர்ச்சியற்று பகவானுக்கு ஸூக்ஷ்மசரீரமாக இருக்கிறான். ஸ்ருஷ்டிக்குப் பின்போவெனில் சரீரத்தோடு கூடி அறிவின் மலர்ச்சியும் பெற்று பகவானுக்கு ஸ்தூல சரீரமாகிறான். ஆகையால் ஸ்ருஷ்டிக்கு முன்பு உள்ள ஸூக்ஷ்மமான ஜீவாத்மாவை சரீரமாகக் கொண்டிருந்த பரமாத்மாவிலிருந்து, ஸ்ருஷ்டியின் போது ஸ்தூலமான ஜீவாத்மாவை சரீரமாகக் கொண்ட பரமாத்மா உண்டாகிறானென்று கொள்ளப் படுவதனாலே காரணமான பரமாத்மாவும், காரியமான பரமாத்மாவும் ஒன்றேயல்லவா? ஆகவே ஸ்ருஷ்டிக்கு முன்பும் பின்பும் பரமாத்மாவும், ஜீவாத்மாக்களும் மற்றுமுள்ள ஜடப் பொருளும் ஸத்யமாக இருக்கின்றன. வேதத்தில் ப்ரஹ்மம், ஜீவன், ஜடம் என்ற மூன்று பொருள்களும் வெவ்வேறாக உள்ளனவாகப் பலவிடங்களிலும், ஜீவனும் ஜடமும் ப்ரஹ்மத்திற்குச் சரீரமென்று பலவிடங்களிலும் கூறப்

பட்டுள்ளமையைக் கவனித்தால், இவை மூன்றும் மெய்யான பொருள்களேயாதலால் இவற்றில் ஏதும் பொய்யன்று என்று நிச்சயிக்கலாம். மேலும், பொய்யானபொருள் உள்ளது போல் தோன்றினால் சற்றுநேரம் கழித்து இது பொய் என்ற அறிவுண்டாவது இயற்கை. ஒருவனுக்கு ஒரு முத்துச் சிப்பி வெள்ளியாகத் தோன்றினால் சில நிமிடங்கள் கழித்து இது முத்துச் சிப்பியே, வெள்ளி என்று தோன்றியது பொய் என்ற அறிவு உண்டாகின் றதல்லவா? அது போல் எ திரில் இருப்பவன் மனிதனென்றும் எதிரில் இருப்பது பானை என்றும் தோன்றினால், பின்பு எவ்வளவு நேரம் கழித்தாகிலும் இவன் மனிதனல்லன் என்றோ இது பானையல்ல என்றோ தோன்றாமையால், ப்ரஹ்மம் தவிர்ந்த மற்ற ஜீவாத்மாக்களும், ஜடப்பொருள்களும் பொய்யல்ல, மெய்யே என்பது ஸ்ரீவை ணவமதம். இப்படிப்பட்ட யுக்திகளைக் காட்டி, ஆழ்வான் - உலகம் பொய்யென்னும் அத்வைதமதத்தைப் பொய்யாக்கினாரென்க. இங்ஙனம் ஜீவாத்மாக்கள் பலரென்றும், அவர் பகவானுக்கு அடிமையென்றும் வேதத்தில் கூறப்பட்டுள்ளமையால், அப்படியே ஒப்புக் கொண்டு ஆத்மாக்கள் அடிமையன்று என்பதை மறுத்து, அவற்றின் பன்மையை வெளிப்படுத்தினார் என்றும் கொள்க.

श्रुतिं दृढप्रमाणयन् जगद्विधातरीश्वरे
परोक्तमानुमानिकेश्वरत्वमप्यधो नयन् ।
अणोर्जगन्निदानतामपोहयन् विराजते
स्वसूक्तिभिः स्वयुक्तिभिः सुधीवरोऽत्राकूरराट् । ।१८

*ஶ்ருதிம் த்$_3$ருட$_4$ப்ரமாணயந் ஜக$_3$த்$_3$வித$_4$ாதரீஶ்வரே*
*ப்ரோக்தமாநுமாநிகேஶ்வரத்வமப்யதே$_4$ா நயந்*



*அணோர்ஜக$_3$ந்நித$_3$ாநதாமபோஹயந் விராஜதே*
*ஸ்வஸூக்திபி$_4$ ஸ்வயுக்திபி$_4$ ஸுதீ$_4$வரோத்ரகூரராட்.*

ஸுதீவர: - புத்திமான்களில் சிறந்தவராகிய, கூரராட் - கூரத்தாழ்வான், ஜகத் விதாதரி -உலகத்தைப் படைத்த, ஈச்வரே - ஈச்வரனாகிய ஸ்ரீமந்நாராயணன் விஷயத்தில், ச்ருதிம் - வேதத்தை, த்ருட ப்ரமாணயந் - அசைக்க முடியாத அத்தாட்சி நூலாக ஒப்புக் கொண்டு, பரோக்தம் - வைசேஷிகர்களால் சொல்லப்பட்ட, ஆநுமாநிக ஈச்வரத்வம் - ஸ்ருஷ்டி கர்த்தாவான சிவன் அனுமான ப்ரமாணத்தினால் ஸித்திக்கிறான் என்ற விஷயத்தை, அதோ நயந் - கீழே தள்ளுகிறவராயும், அணோ: - பரமாணுவுக்கு, ஜகந்நிதாநதாமபி - உலகத்தைக் குறித்து முதற்காரணமாயிருத்தலையும், ஸ்வஸூக்திபி: -தமது பேச்சுக்களாலும், ஸ்வயுக்திபி: - தம்முடைய யுக்திகளாலும், அபோஹயந் - மறுப்பவராயும், விராஜதே - மிகவும் விளங்குகிறார்.

கூரத்தாழ்வான் வைசேஷிக மதத்தை மறுத்தபடியைப் பேசுகிறார்.

கணாதரென்னும் முனிவரின் மதத்தைப் பின்பற்றியவர்கள் வைசேஷிகர்கள். அவர்கள் உலகத்தைப் படைத்தவன்=நிமித்த காரணமானவன் சிவன். அவன் அநுமானப் பிரமாணத்தினால் அறியப்படுகிறான். உலகத்திற்கு முதற்காரணம் பரமாணுக்கள். அவற்றையும் அநுமானத்தைக் கொண்டே அறுதியிட வேண்டும் என்கிறார்கள். அவர்கள் கூறுவதாவது .1. பானை, துணி முதலிய பொருள்களை, அவற்றின் முதற்காரணமாகிய மண்ணையும் நூலையும் அறிந்து அவற்றைத் தனது ஆற்றலாலே உபயோகப்படுத்தி உண்டாக்கும் குயவன் சேணியன் முதலியவர்களைக் காண்கிறோமன்றோ? அதுபோல் மிகப்பெரிய பூமி மலை கடல் முதலிய பொருள்களை, அவற்றின்

முதற்காரணமாகிய பரமாணுக்களைக் கண்ணாலே கண்டு அவற்றைத் தனது பேராற்றலாலே உபயோகப்படுத்தி உண்டாக்கும் ஒருவனை ஒப்புக் கொள்ளவேணுமல்லவா? அப்படிப்பட்ட பேரறிவும் பேராற்றலும் நமக்கு இல்லாமையால், நம்மைவிடப் பெரியவன் ஒருவன் அவசியம் இருந்தே தீர வேணுமென்று, இங்ஙனம் அநுமானத்தினால் ஈச்வரனைக் கருத்தாவாக ஸாதிக்கின்றனர். 2. உலகிற்கு முதற்காரணம் பரமாணுக்கள். பரமாணுவாவது மிகமிகச் சிறிய அணு. நம்வீட்டில் பலகணி (சன்னல்)வழியாக உள்ளே விழும் வெயிலில் பறக்கிற தூசிகளில் ஆறில் ஒரு பகுதியே அப்பரமாணு. அவையிரண்டும் சேர்ந்து த்வ்யணுகமென்கிற பொருள் உண்டாகின்றது. அவை மூன்று சேர்ந்து த்ர்யணுகமென்கிற மற்றொருபொருள் உண்டாகின்றது. அதுவே வெயிலில் தென்படுகிற மிகச்சிறிய தூசி என்கின்றனர். பானை கண்ணுக்குத் தென்படுகிறது. அது தனது அவயங்களாகிய இரண்டு கபாலங்களாலே உண்டாகின்றது என்பதைக் காண்கிறோம் அல்லவா? அதுபோல் கண்ணுக்குத் தென்படுகிற த்ரயணுகமும் தனது அவயங்களாலே உண்டாகின்றதென்று ஒப்புக் கொள்ளவேணும். அந்த அயவயங் களுக்கு த்வயணுகமென்று பெயர், (அது கண்ணுக்குத் தெரியாது) கண்ணுக்குத் தென்படுகிற பானையை உண்டாக்குகிற கபாலம், தனது அவயவங்களாகிய காபாலிகை எனப்படுகின்ற அவயங் களால் உண்டாகின்றது அல்லவா? அதுபோல் கண்ணுக்குத் தென்படுகின்ற த்ர்யணுகத்தை உண்டாக்குகிற த்வ்யணுகமும் தனது அவயங்களால் உண்டாகிறதென்று ஒப்புக்கொள்ள வேணும். அந்த அவயங்களுக்குத் தான் பரமாணுவென்று பெயர் அதுவும் கண்ணுக்குத் தெரியாது. இத்தகைய பரமாணுக்களே உலகிற்கு முதற்காரணம் என்கின்றனர்.

இவ்விரண்டு கருத்துக்களும் தவறென்று, வேதத்தை அசைக்க முடியாத ப்ரமாணமாகக் கொண்டு மறுக்கின்றார்



கூரத்தாழ்வான் என்கிறார் இந்த ச்லோகத்தில். 1. இத்தனை பெரிய பூமி கடல் மலையாகிய இவற்றைப் படைக்க வேணுமென்றால் அவன் அதற்குத் தக்க மிக உயர்ந்த அறிவையும், ஆற்றலையும் உடையவனாக இருக்கவேணும். பானை துணி முதலிய பொருள்களைக் கொண்டு, ஈச்வரனை நிமித்த காரணமாக ஸாதிக்க முடியாது. அப்பொருள்களைப் படைக்கும் குயவன் சேணியன் போன்று குறைந்த அறிவும் ஆற்றலையுமுடை யவனாகவே அவ்வீச்வரன் ஸித்திப்பான். அளவற்ற அறிவும் ஆற்றலுமுடையவனாக ஒருநாளும் ஸித்திக்கமாட்டான். ஆகவே அனுமானத்தாலே ஈச்வரனை ஸாதிக்க முடியாது. (2) பரமாணுவை வருந்தி முற்கூறிய அனுமானத்தாலே ஸாதித்தாலும் பயனில்லை. அது உலகிற்கு முதற்காரணமாக மாட்டாது. இரண்டு கபாலங்களில் ஒன்று தன்னுடைய ஆறு பகுதிகளால் ( நான்கு திசைகளும் மேலும் கீழுமாகிய பகுதிகள் ஆறினால்) மற்றொன்றோடு சேர்ந்து பானையை உண்டாக்கு கின்றது. அது போன்று ஒரு பரமாணு மற்றொரு பரமாணுவோடு இவ் ஆறு பகுதிகளால் சேர்ந்து தன்னைவிடப் பெரிய த்வ்யணுகத்தை உண்டாக்க வேணும். மிக மிக நுண்ணிய பரமாணுவுக்கு இவ் ஆறு பகுதிகள் இல்லையாகையால், ஒன்று மற்றொன்றோடு சேர முடியாமையால் த்வ்யணுகமே உண்டாக வழியில்லை. ஆகையால் பரமாணுவுக்கும் உலகைக் குறித்து முதற்காரணமாகுந் தன்மை கூறவே முடியாது.

ஆனால் உலகிற்கு முதற்காரணம் யாது. கருத்தாவும் யார்? இரண்டு காரணங்களும் பரப்ரஹ்மமொன்றே ஆகும். இவ் விஷயம் பல உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருந்த போதிலும் ச்சாந்தோக்யோபநிஷத்தில் ஒரிடத்தை மட்டும் காண்போம்.

''ஸதேவ ஸோம்யேதம் அக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்'' என்பது அவ்வுபநிஷத்தில் உள்ளதொரு வாக்யம்

- உத்தாலகர் தம்மகனாகிய ச்வேத கேதுவுக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. ஸோம்ய: இதம் - அக்ரே - ஸதேவ - ஏகமேவ - அத்விதீயம் ஆஸீத் என்று அந்வயம். சந்திரன் போல் ப்ரியமானவனே. தேவர் மனிதர் விலங்கு தாவரம் முதலிய பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் கூடிய இவ்வுலக மானது - இதற்குமுன்பு ப்ரளயகாலத்தில் - ஸத் என்ற ஒரே பெயருடனும் ஒரே உருவத்துடனும் ஒன்றாகவே இருந்தது. அது இப்போது பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் தென்படுகிறது. இது இவ்வாக்கியத்துக்குப் பொருளாகும். குயவன்வீட்டில் இன்று நம் கண்முன்னே தென்படுகின்ற - வேறுவேறான பல உருவங்களுடனும், அவற்றுக்குத் தக்க மடக்கு சட்டி பானை சால் முதலிய பல பெயர்களுடனும் கூடியிருக்கும் பல பொருள்களின் திரட்சியானது, நேற்று ஒரே விதமான உருவத்துடனும் மண் என்ற ஒரே பெயருடனும் ஒரே பொருளாக இருந்தது என்றால், இன்று பலவாக உள்ள இப் பொருள்களெல்லாவற்றிற்கும் நேற்றிருந்த மண் என்னும் ஒரு பொருளே முதற் காரணம் என்பதன்றோ தேர்ந்த கருத்து. அது போன்று, இன்று தேவர் மனிதர் விலங்கு தாவரம் முதலிய பல பெயர்களுடனும் பல உருவங்களுடனும் தோன்றும் பல பொருள்களுக்கும் முதற் காரணம் - ஸத் என்னும் ஒரே பெயருடனும் அதற்குத் தக்க ஒரே உருவத்துடனும் கூடி ஒன்றாகவே இருந்த பரப்ரஹ்ம் என்றன்றோ கருத்தாகச் சொல்ல வேண்டுவது. ஆகப்ரஹ்மமே உலகிற்கு முதற்காரணம் என்பது தேறிற்று.

இதற்கு மேல் - இன்றுள்ள பானை சட்டி முதலியவை யெல்லாம் மண்ணாகவே நேற்று இருந்ததென்றால், இவற்றைச் செய்யும் கருத்தாவாகக் குயவன் இருந்தானே. அது போல் இங்கு தேவர் மனிதர் முதலியனவான உலகமெல்லாம் முன்பு ப்ரஹ்மமென்ற ஒரே பொருளாக இருந்ததென்றால், இவ்வுலகத்தைப் படைக்கும் கர்த்தா ஒருவன் இருந்திருக்க வேணுமே என்னும் கேள்வி எழுமன்றோ? அதற்குவிடையே முன் கூறப்பட்ட வாக்கியத்தில் உள்ள 'அத்விதீயம்' என்ற பதம். அது ஸத் என்னும் ப்ரஹ்மத்தைக் கூறும் பதத்திற்கு அடைமொழி யாகும். ப்ரஹ்மம் அத்விதீயம் என்றால், உலகிற்கு முதற்காரணமான ப்ரஹ்மம் தன்னைவிட வேறான கர்த்தாவென்னும் இரண்டாம் பொருளையுடைய தன்று என்பதே பொருளாகையால், உலகிற்குக் கருத்தாவும் ப்ரஹ்மமே என்று தேறிற்று.



ஸத் என்ற ப்ரஹ்மம் நாராயணனே. 'ஸதேவ ஸோம்ய' என்ற வாக்யம் போல், ''ஏகோஹவை நாராயண ஆஸீத், ந ப்ரஹ்மா ந ஈசாந;'' என்ற மஹோபநிஷத் வாக்யமும் காரண வாக்யமேயாகையால் 'ஸத்' என்பது நாராயணனையே சொல்லுகின்றது என்று கொள்வதே உசிதம்.

ஆக இத்தகைய ச்ருதிவாக்யங்களை த்ருடமான ப்ரமாணமாகக் கொண்டும் இதற்குத் தக்க யுக்திகளைக் கொண்டும், ஆழ்வான் உலகிற்கு முதற்காரணம் பரமாணுவன்று, அதற்குக் கர்த்தா (நிமித்தகாரணம்) சிவனன்று. நாராயணனே உலகிற்கு முதற் காரணமும் நிமித்தகாரணமும் ஆகிறான் என்று ஸ்தாபித்தார் என்றாராயிற்று இந்தச்லோகத்தினால்.

மேலும் இங்கு உரைக்க வேண்டிய பலவிஷயங்களை விரிவிற்கு அஞ்சி விட்டிட்டேன்.

शिवात्परं नहीति वै लिखेति चोलभूपतेः
वचःश्रुतेरनन्तरं तदुत्तरं वचो लिखन् ।
अपाहसन्महीसुरै र्य ईडितो महीपतिं
विभाति कूरराड्गुरुस्स सर्वशास्त्रापारगः ।। १९ ।।

*ஶிவாத் பரம் நஹீதி வை லிகே$_2$திசோலபூ$_4$பதே:*
*வச:ஶ்ருதேரநந்தரம் தது$_3$த்தரம் வசோ லிக$_2$ந்*
*அபாஹஸந்மஹீஸுரைர்ய ஈடி$_3$தோ மஹீபதிம்*
*விப$_4$ாதி கூரராட்$_3$கு$_3$ருஸ்ஸஸர்வ ஶாஸ்த்ரபாரக$_3$:*

ஸர்வசாஸ்த்ர பாரக: - எல்லா சாஸ்த்ரங்களையும் கரைகண்ட (நன்றாக அறிந்த), ய; - யாவரொருவர், சிவாத் பரம் - சிவனை விட உயர்ந்த தத்வம், நஹி இதி வை - இல்லவே இல்லை என்றே, லிக இதி - நீர் எழுதும்' என்று, சோல பூபதே: வச:- சோழராஜன் கூறிய வார்த்தையை, ச்ருதே: அநந்தரம் - கேட்டவுடனே, ததுத்தரம் வச: - (அதையெழுதாமல்) அதன் விடையான வார்த்தையை, லிகந் - எழுதுமவராய், மஹீபதிம் - அச்சோழராஜனை, அபாஹஸத் -பரிஹாஸம் (ஏளனம்) செய்தாரோ, ஸ; கூரராட குரு: - அந்த கூரத்தாழ்வானாகிய ஆசாரியர், மஹீஸுரை: - ஸ்ரீவைஷ்ணவர்களால், ஈடித: விபாதி - துதிக்கப்பட்டவராய் விளங்குகிறார்.

எம்பெருமானார் காலத்திலிருந்த சோழவரசனொருவன் வீரசைவனாகையாலே சைவாகமத்தைப் பிரமாணமாகக் கொண்டு 'சிவாத் பரதரம் நாஸ்தி' (சிவனே பரம்பொருள், அவனைவிட உயர்ந்த பொருள் இல்லை) என்று ஓலையில் எழுதிக் கையெழுத்திடும்படியாகப் பல பண்டிதர்களை நிர்ப்பந்தித்து அச்சுறுத்தியும், நிலமும் பொருளும் கொடுத்தும் அவர்களின் கையெழுத்திடப் பெற்றுப் பரதத்வ நிர்ணயம் செய்துவிட்டோமென்று இறுமாந்திருந்தான். அவனிடம் வேலை செய்யும் நாலூரான் என்பவன் "எம்பெருமானார் கையெழுத்திட்டாலன்றோ அவ்வார்த்தை உண்மையாவது" என்று கூற, அவ்வரசன் எம்பெருமானாரை அழைத்து வரும்படி ஏவலாளரை அனுப்ப, அவர்கள் ஸ்ரீரங்கம் சேர்ந்து மடத்து வாசலிலே வந்து, "எம்பெருமானார் எங்கே?" என்று வினவ,



கூரத்தாழ்வான் எம்பெருமானார் திருமேனியை ரக்ஷிக்க எண்ணி, நீராடவெழுந்தருளியிருந்த அவருடைய திரிதண்டம் காஷாயம் முதலியவற்றை தரித்து, எம்பெருமானார்க்கு விண்ணப்பியாமல், தாமே எம்பெருமானாராய்ச் சென்று, சோழன், வழக்கப்படியே 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்றெழுதி கையொப்பம் இடும்படி கேட்க, அதை யெழுதாமல் 'த்ரோணமஸ்தி தத; பரம்' என்றெழுதிக் கையெழுத்திட்டு, அச்சைவவரசனைப் பரிஹாஸம் செய்த கதையை இதில் குறித்தருளுகிறார்.

உபநிஷத்துக்களையே ப்ரமாணமாகக் கொண்ட எம்பெருமானாருடைய சி யராகையாலே கூரத்தாழ்வான் "ஏகோஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா ந ஈசாந:" (உலக ஸ்ரு டிக்கு முன்பு நாராயணன் ஒருவனேயல்லவா இருந்தான், பிரமனோ சிவனோ யாருமில்லை) என்ற மஹோபநிஷத் வாக்கியத்தையறிந்தவராகையாலே, சிவனே பரம் பொருள் என்பதை ஒப்புப் கொள்ள இசையாமல் அரசனது தண்டனைக்கும் அஞ்சாமல், "த்ரோணம் அஸ்தி தத: பரம்" என்றெழுதினார். சிவசப்தம் எட்டுப்படியளவு கொண்ட குறுணிக்கும் பெயராகையாலே, சோழன் வாக்கியத்துக்கு குறுணியைவிடப் பெரியது இல்லை என்ற பொருளும் சொல்லலா மாகையால் கபடமாக அப்பொருளை ஆழ்வான் எண்ணி, அது பொருந்தாமையால் - "த்ரோணம் அஸ்தி தத: பரம்" (பதினாறு படியளவு கொண்ட பதக்கு குறுணியைவிடப் பெரியது) என்றெழுதினார். இதனால் கோபங்கொண்ட அச்சோழன் ஆழ்வானுடன் துணையாகச் சென்றிருந்த பெரிய நம்பிகளின் கண்ணையும், ஆழ்வான் கண்ணையும் குத்தும்படி ஆணையிட, அதனால் பெரிய நம்பிகள் கண்களை இழக்க, ஆழ்வான் தாமே தம் கண்களைக் குத்திக் கொண்டு, எம்பெருமானார் தரிசனத்தைக்

காப்பாற்றுவதற்காகத் தம் தரிசனத்தை இழந்தார். (தரிசனம் - மதமும், கண்ணும்) இப்படிச் சோழவரசனை ஏளனம் செய்த ஆழ்வானைப் பண்டிதரனைவரும் புகழ்ந்தார்களென்றாராயிற்று.

यतीश्वरग्रहागतान् भटान् विलोक्य भूपते:
स्वयं त्रिदण्डितां भजन् तदीयरक्षणेच्छया ।
शिलीमुखाल्पकीटयोर्नयं सदार्यशिष्ययो:
प्रदर्शयन् स्वचर्यया चकास्ति कूरभूपति: ।।२०।।

*யதீஶ்வரக்₃ரஹாக₃தாந் ப₄டாந் விலோக்யபூ₄பதே:*
*ஸ்வயம் த்ரித₃ண்டி₃தாம் ப₄ஜந் தத₃ீயரக்ஷணேச்ச₂யா*
*ஶிலீமுக₂ால்பகீடயோர்நயம் ஸத₃ார்யஶிஷ்யயோ:*
*ப்ரதர்ஶயந் ஸ்வசர்யயா சகாஸ்தி கூரபூ₄பதி:*

கூரபூபதி: -கூரத்துக்கு அரசரான ஆழ்வான், யதீச்வர க்ரஹ ஆகதாந் - யதிராஜரான எம்பெருமானாரைப் பிடித்துப் போவதற்காக வந்த, பூபதே: படாந் - அரசனுடைய வேலை யாட்களை, விலோக்ய - பார்த்து, ததீய ரக்ஷண இச்சயா - அவருடையதான ரக்ஷணத்திலே தாம் கொண்ட ஆசையினால், ஸ்வயம் - தாமே , த்ரிதண்டி தாம் - திரிதண்டத்தை, பஜந் - கைப்பற்றியவராய், ஸ்வசர்யயா - (இத்தகைய) தமது நடத்தை யினால், சிலீமுக அல்பகீடயோ: - குளவிக்கும் சிறு புழுவுக்கும் உண்டான நியாயத்தை, ஸதார்யசிஷ்யயோ: - நல்ல ஆசார்யருக்கும் நல்ல சிஷ்யனுக்கும் உள்ளதான, ந்யாயம் - ந்யாயத்தை, ப்ரதர்சயந் - வெளிப்படுத்திக் கொண்டு, சகாஸ்தி - விளங்குகிறார்.

முன் ச்லோகத்தில் கூறிய கதையில், ஆழ்வான் எம்பெருமானாரின் திரிதண்டகாஷாயங்களைத் தரித்து ராஜஸபைக்கு எழுந்தருளினமை குறிக்கப்பட்டதன்றோ? அதில்



ப்ரமரகீடந்யாயத்தை ஸமந்வயப்படுத்துகிறார். சிலீமுக: -ப்ரமர: குளவி; கீட: - புழு, அல்பகீட: - சிறுபுழு. ப்ரமரகீட ந்யாயமாவது - ஒரு குளவி சிறு புழுவைக் கொண்டு வந்து தன் கூட்டில் வைத்து அதை எப்போதும் கொட்டிக் கொண்டிருந்தால், அப்புழு அக்குளவியின் உருவத்தையே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்து அக்குளவியாகவே ஆகிவிடுமென்னும் நியாயமாகும். எம்பெருமானாரால் வளர்க்கப்பட்ட கூரத்தாழ்வான், எம்பெருமானாரை த்யானித்து த்யானித்துக் கடைசியில் அவரைப் போல் திரிதண்டகாஷாயங்களைத் தரித்து எம்பெருமானாராகவே ஆகிவிட்டபடியால், ப்ரமரகீட ந்யாயத்தை ஆசார்ய சி யர்களுக்கும் உள்ளதாக உலகுக்குக் காட்டினாரென்க.

'ஸதார்யசி யயோ:' என்பதன் கண் உள்ள ஸத் என்பது இரண்டிடத்திலும் பொருந்தி, 'ஸதார்ய ஸச்சி யயோ:' என்ற பொருளைத் தந்தது. நல்ல குருவுக்கும் நல்ல சீடனுக்கும் என்பது கருத்து.

'யதீச்வராச்ரமாகதாந்' யதிராஜருடைய ஆச்ரமத்துக்கு வந்த (வேலையாட்களை) என்பது பாடாந்தரம். அதைவிட 'யதீச்வரக்ரஹாகதாந்' என்ற பாடம் சிறக்கும்.

निराकर्तु मोहं निखिलजनचित्ताश्रयमसौ
दयासिन्धु: सान्द्रात् निरवधिकविज्ञानविभवात् ।
महीभागे मासे मकरमहिताख्ये समजनि
प्रशस्ते हस्तर्क्षे शुभगुणनिधि: कूरनृपति: ।।२१।।

*நிராகர்த்தும் மோஹம் நிகி₂லஜநசித்தாச்ரயமஸௌ*
*த₃யாஸிந்து₄: ஸாந்த்₃ராத் நிரவதி₃கவிஜ்ஞாந விப₄வாத்*

*மஹீப$_4$ாகே$_3$ மாஸே மகரமஹிதாக்யே ஸமஜநி*
*ப்ரஶஸ்தே ஹஸ்தர்க்ஷே சுபகு$_3$ணநிதி$_4$: கூரந்ருபதி:*

சுபகுணநிதி: -நல்ல குணங்களுக்கு நிதியான, அஸௌ கூரந்ருபதி: - அந்த கூரத்தாழ்வான், தயாஸிந்து: ஸந் - (அக்குணங்களில் முக்கியமான) தயைக்குக் கடலாயிருந்து, ஸாந்த்ராத் - அதிகமான, நிரவதிக - எல்லையில்லாத, விஜ்ஞாந விபவாத் - (தமது) ஞானத்தின் பெருமையினாலே, நிகில ஜநசித்தாச்ரயம் - எல்லா மக்களுடையவும் மனத்தைப் பற்றியிருக்கிற, மோஹம் நிராகர்த்தும் - அறியாமையை அகற்றுவதற்காக, மஹீபாகே - (இந்த) பூப்ரதேசத்தில், மகர மஹித ஆக்யே - மகரம் (தை) எனப்படுகின்ற கௌரவிக்கப் பட்ட பெயரையுடைய , மாஸே - மாதத்தில், ப்ரசஸ்தே - கொண்டாடப்பெற்ற, ஹஸ்தர்க்ஷே - ஹஸ்தமென்னும் நக்ஷத்திரத்தில், ஸமஜநி -தோன்றினார்.

முற்கூறியபடியே எம்பெருமானார் கடாக்ஷத்தாலே ஸகல சாஸ்த்ரங்களிலும். முக்கியமாக வேதாந்த சாஸ்த்ரத்திலும் விசேஷமாகப் பாண்டித்யத்தைப் பெற்று, சி யர்களுக்கும் உபதேசித்துத் தாமும் அச்சி யர்களுமாக நற்போது போக்கிக் கொண்டே, நம் சமயத்துக்குப் புறம்பான சைவ வைசேஷிக அத்வைதாதி மதங்களை மறுத்தொழித்த ஆழ்வான் அவதரித்த மாஸ நக்ஷத்திரங்களைக் கொண்டாடுகிறார் - இந்த ச்லோகத்தால்.

ஆழ்வான் எல்லாக் கல்யாணகுணங்களும் நிறையப் பெற்றவர். விசி ய தயாகுணத்திற்குக் கடல் போன்றவர். அல்லது கடல் போல் அளவிடவியலாத தயையுடையவர். அவர் அந்த தயைகொண்டு என்ன செய்தார் என்றால், உலகோரின் மனத்தில் அசையாது நின்ற அறியாமையை அகற்றுவதற்காகவே உலகில் தோன்றினார் என்கிறார். தோன்றிய மாதம் மகரம். நக்ஷத்திரம் ஹஸ்தம். மம் - மங்களம்,



கரோதி - உத்பாதயதி இதி மகர: , மகம் - அலங்காரம், ராதி - ததாதி - இதி மகர: என்று மகரசப்தத்திற்கு வ்யுத்பத்திகள் கூறப்படுகின்றன. நன்மையை உண்டாக்குகிற மாதம் என்றும், மாஸங்கள் எல்லாவற்றுக்கும் அலங்காரத்தை - சோபையைத் தருகிற மாதமென்றும் முறையே பொருள் கொள்க. ஹஸ்த நக்ஷத்திரத்திற்கு அதிதேவதை சூரியன். இத்தகைய மாதத்தில் அவதரித்ததனால், ஆழ்வான் உலகுக்கு நன்மையை உண்டாக்குகிறார், எம்பெருமானார்சி யகோ டிக்கு அலங்காரத்தை - சோபையைத் தந்தருளுகிறார் என்றும், ஹஸ்த நக்ஷத்திரத்தில் தோன்றினமையால், சூரியன் போல் உள்ளிருளான அறியாமையாகிய இருளைப் போக்குகிறார் என்றும் கூறலாம். மேலும் மகர மாஸத்தில் அவதரித்த திருமழிசைப் பிரான் போல் பிறமதத்தவரைப் புறங்கண்டு பரதத்வ நிர்ணயம் செய்தருளுகிறார் என்றும், ஹஸ்தத்தில அவதாரம் செய்தருளிய பேரருளாளப் பெருமாள் எம்பெருமானார்க்கு ஆறுவார்த்தையருளிச் செய்து உபகாரம் செய்தாற்போல் ஆழ்வானும் வ்ருத்திக்ரந்தத்தை நினைவில் இருத்திக் கொண்டு அவ்வெம்பெருமானார்க்கே விண்ணப்பித்து உபகாரம் புரிந்தாரென்றும் கூறுதல் ஏற்கும். அத்தத்தில் அவதரித்த தேவப்பெருமாள் பேரருளாளர் எனப்படுகிறார். அத்தகைய இவர் இந்த ச்லோகத்தில் 'தயாஸிந்து' என்று குறிப்பிடப் பெற்றுப் பேரருளாளரானாரிறே. 'தயாஸிந்து: - தயைக்குக் கடல் போன்றவர் - பேரருளாளரன்றோ?

अनाधृष्यां ब्रह्मादिभिरपि सुरैरात्मकृतिभि:
सदाऽप्येकाकाराम् अनाधिगतवृद्धिक्षयकथाम् ।
अहन्तामज्ञानां प्रकृतिमनुरूपां ममकृते:
पराकुर्वन् कूरप्रभुरखिलनृणां विजयते ।। २२ ।।

*அநாத்$_4$ருஷ்யாம் ப்$_3$ரஹ்மாதி$_3$பி$_4$ரபி ஸூரைராத்மக்ருதிபி$_4$:*
*ஸதா$_3$ப்யேகாகாராம் அநதி$_4$க$_3$தவ்ருத்$_3$தி$_4$க்ஷயகத$_2$ாம்*
*அஹந்தாமஜ்ஞாநாம் ப்ரக்ருதிமநுரூபாம் மமக்ருதே:*
பராகுர்வந் கூரப்ரபு$_4$ரகி$_2$லந்ருணாம் விஜயதே

கூரப்ரபு: - கூரத்தாழ்வான், ப்ரஹ்மாதிபி: - பிரமதேவன் முதலிய, ஸூரைரபி - தேவர்களாலும், அநாத்ருஷ்யாம் - போக்கமுடியாததும், அநதிகத வ்ருத்திக்ஷயகதாம் - வளர்வது தேய்வது என்னும் பேச்சைக் கூட அறியாததும், ஸதாபி - எப்போதும், ஏக ஆகாராம் - பூர்ண்மானவளர்ச்சி என்கிற ஒரே விதமான வடிவையுடையதும், மமக்ருதே: -மமகாரத்திற்கு, அநுரூபாம் ப்ரக்ருதிம் - ஏற்ற மூல காரணமானதுமான, அஜ்ஞாநாம்- - அறிவிலிகளான, அகிலந்ருணாம் - எல்லா மனிதர்களுடையவும் அஹந்தாம் - அஹங்காரத்தை, பராகுர்வந்ஸந் - போக்கடித்துக் கொண்டே, விஜயதே - வெற்றிபெறுகிறார்.

முன்பு எல்லாருடைய அறியாமையைப் போக்கு வதற்காகவே ஆழ்வான் அவதரித்ததாகக் கூறப்பட்டது. இப்போது அவ்வறியாமையால் உண்டாகும் அஹங்காரத்தைப் போக்கும்படி கூறப்படுகிறது.

நான் ஸ்வதந்த்ரன் என்றிருப்பது அஹங்காரம். என்னைத் தவிர்ந்த பொருளனைத்தும் என்னுடையவை என்றிருப்பது மமகாரம். இவை - தன்னுடைய ஸ்வரூபத்தையும் மற்ற பொருள்களின் ஸ்வரூபத்தையும் அறியாதவர்களுக்கு ஏற்படுமவை. தன்னை அறிகையாவது தான் ஸ்வதந்த்ரனல்லன், எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவன் என்றறிகை. மற்ற பொருள்களை அறிகையாவது இவையும் தன்னைப் போல் எம்பெருமானுக்கே உரியவை என்றறிகை. அஹங்காரம் மமகாரத்திற்குப் பொருத்தமான மூலகாரணம். நான் ஸ்வதந்த்ரன்-



யாருக்கும் உரியவனல்லேன் என்னும். அஹங்காரம் உண்டானால், 'மற்றும் உலகிலுள்ள பொருள்கள் யாவும் என்னுடைய அனுபவத்திற்காகவே இருப்பவையாகையால் என்னுடையவையே' என்ற மமகாரம் உண்டாகுமன்றோ. எனவே ஆழ்வான் அறிவிலிகளான மக்களுக்கு 'நீங்கள் திருமாலுக்கே உரிய தொண்டர்கள். ஸ்வதந்த்ரர்கள் அல்லீர்' என்று உபதேசித்து 'நான் ஸ்வதந்த்ரன்' என்ற அஹங்காரத்தைப் போக்கினார். அஹங்காரம் அழியவே அதனை மூலகாரணமாகக் கொண்ட 'இவையெல்லாம் என்னுடையவை' என்ற மமகாரமும் அழியுமென்பது போதரும். இத்தகைய அஹங்காரமும் மமகாரமும் மிகமிகப் பெரியோர்களாகப் பிரசித்தி பெற்ற ப்ரஹ்மாதி தேவர்களாலும் போக்க முடியாதது -அவர்களுக்கும் அஹங்கார மமகாரங்கள் உண்டாகையாலே என்க. ஆகையாலன்றோ 'விதாத்ரு முக்ய ஸேவிதாம் அஹந்தயா அதிதூஷிதாம் விபூதிம் ஐஹிகீம்' என்று (16ல்) இவர் தாமும் பணித்தருளியது. ப்ரஹ்மாதிதேவர்கள் அஹங்கார மமகாரங் களால் கெடுக்கப்பட்டவர்களாகையாலே அவர்கள் வசிக்கிற இவ்விபூதியும் - இவ்விபூதியிலுள்ள மக்களும் அவற்றால் கெடுக்கப்பட்டமையால் ஆழ்வான் இதைவிட்டுப் பரமபதம் அடைந்ததாகக் கூறப்பட்டமை காணத்தக்கது. இவை வளர்வதும் தேய்வதும் என்கிற கதையேயில்லாமல் மிகவும் வளர்ந்து, அவ்வளர்ச்சியின் எல்லையாகிய ஒரே நிலையில் உள்ளமையால் ''ஸதாபி ஏகாகாராம்'' எனப்பட்டன. இப்படிப்பட்ட இவற்றை ஆழ்வான் ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்குவதன் வாயிலாகப் போக்கி, பகைவரை வென்று விளங்கும் அரசன் போல் விளங்குகிறார் என்றார்.

अमोघैरुत्कूलैरनुपधि समुत्थैरनुपमैः
कटाक्षैः प्रेमार्द्रैः कलिमलमशेषं व्यपनयन् ।

जनानामानन्दं निरवधिकमद्यापि जनयन्
जयत्येष श्रीमान् मम कुलगुरुः कूरनृपतिः ।।२३।।

*அமோகை₄ருத்கூலைரநுபதி₄ஸமுத்தை₂ரநுபமை:*
*கடாக்ஷை:ப்ரேமார்த்₃ரை: கலிமலமஶேஷம் வ்யபநயந்*
*ஜநாநாமாநந்த₃ம் நிரவதி₃கமத்₃யாபி ஜநயந்*
*ஜயத்யேஷ ஸ்ரீமாந் மம குலகு₃ரு: கூரந்ருபதி:.*

மம குலகுரு; - அடியேனது குலகுருவானவரும், ஸ்ரீமாந் - ஸ்ரீவைஷ்ணஸ்ரீயை உடையவருமான, ஏஷ;கூரந்ருபதி: -இந்தக் கூரத்தாழ்வான், அமோகை: - வீணாகாதவையும், அநுபமை; - நிகரில்லாதவையும், ப்ரேமார்த்ரை: -அன்பினால் குளிர்ந்தவையும், அநுபதிஸமுத்தை: - நிர்ஹேதுமாக உண்டானவையும், உத்கூலை: - கரை கடந்தவையுமான, கடாக்ஷை: - தமது கடைக்கண்பார்வைகளாலே, கலிமலம் -கலியினால் உண்டாகின்ற தோஷத்தை, அசேஷம்- மிச்சமில்லாமல் வ்யபநயந் - போக்குமவராய்க் கொண்டும் (அதனால்), ஜநாநாம் - மக்களுக்கு, நிரவதிகம் ஆநந்தம் - எல்லையில்லாத மகிழ்ச்சியை, அத்யாபி - இன்றும், ஜநயந் - உண்டாக்குமவராய்க் கொண்டும், ஜயதி- மேம்பட்டு விளங்குகிறார்.

அஹங்கார மமகாரங்களை ஆழ்வான் போக்கினபடியை முன்பு அருளிச்செய்தவர், இந்தச்லோகத்தில் அவை காரணமாக உண்டாகும் பாபங்கள், அதனால் வரும் நரகம் முதலிய கலியுகக் குற்றங்களையும் நீக்கி மக்களுக்கு மகிழ்ச்சியை உண்டு பண்ணுகிறாரென்கிறார்.

ஆழ்வானுடைய கடாக்ஷங்களுக்கு எத்தனை அடைமொழிகள் என்பதனைக் காண்க. அவை நல்ல பயனைக் கொடுத்தே தீரும். கரை கடந்து பெருகும் ஆறு போன்றவை.



நம்மிடம் எப்பயனையும் எதிர்பார்த்து உண்டாகுமவையல்ல. உள்ளே இருக்கிற தயையினால் நனைந்து குளிர்ந்து, ஸகல தாபங்களையும் போக்குமவை. ஆகையால் நிகரற்றவை என்கிறார். உண்மையில் பகவத் கடாக்ஷங்களையும், யாரும் இத்தனை யடைமொழிகளையிட்டுச் சொல்லவில்லை எனலாம். 'ஆழ்வானுடைய தயை'. 'ஆழ்வானுடைய கடாக்ஷம்' என்றால் அவை அஸாதாரணமன்றோ?

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயாவது - எம்பெருமானே சேஷி, அவனே மோக்ஷோபாயம், அவன் திருவடிகளில் பரிசர்யையே பரமபுருஷார்த்தம் என்கிற அறிவும், அவ்வெம்பெருமான் திறத்தில் அநந்யப்ரயோஜநமான பக்தியும், இதர விஷயங்களில் விரக்தியும் முதலியன. இவற்றை மிகமிகப் பெற்றவர் ஆழ்வான் என்கிறது ஸ்ரீமான் என்னுமது.

இந்நூலாசிரியர் ஆழ்வானை 'மம குல குரு:' என்று குறித்தருளுகையால், இவர் ஆழ்வானுடைய திருவம்சத்தில் அவதரித்தவராக இருக்கலாமோ என்னும் ஸம்சயம் தோன்றுகிறது. 'மஹாந்த: ப்ரமாணம்.'

अविद्यामाहात्म्यादविदितनिजाकारविभवान्
अशेषानुद्धर्तुं भवजलधिमग्नान् जनिभृतः ।
असौ कूराधीशः स्वयमवतरन् भूरिकृपया
नयन् नावं विष्णुं विगततरपण्यां विजयते ।।२४।।

*அவித்₃யாமாஹாத்ம்யாத₃விதி₃தநிஜாகாரவிப₄வாந்*
*அஶேஷாநுத்₃த₄ர்த்தும் ப₄வஜலதி₄மக்₃நாந் ஜநிப்₄ருத:*
*அஸௌ கூராதீ₄ஶ: ஸ்வயமவதரந் பூ₄ரிக்ருபயா*
*நயந் நாவம் விஷ்ணும் விக₃ததரபண்யாம் விஜயதே.*

அஸௌ கூராதீச: -அந்தக் கூரத்தாழ்வான், அவித்யா மாஹாத்ம்யாத் - தீவினையின் மஹிமையினால், அவிதித நிஜாகார விபவாந் -அறியப்படாத தமது உண்மை வடிவமாகிய (பகவத் சேஷத்வமாகிய) பெருமையை உடையவர்களாய் (அதனால்), பவஜலதி மக்நாந் - இவ்வுலகவாழ்வாகிய துன்பக் கடலில் மூழ்கியிருக்கிற, ஜநிப்ருத: அசேஷாந் - பிறவியெடுத்த அனைவரையும், உத்தர்த்தும் -உயரத்தூக்குவதற்காக, பூரி க்ருபயா - பெருங்கருணையினால், ஸ்வயம் அவதரந் - தாமே அவதரித்து நின்று, விஷ்ணும் நாவம் - வி ஷ்ணுவென்னும் படகை, விகத தரபண்யாம் - ஓடக்கூலியில்லாமல், நயந் - ஓட்டுமவராய், விஜயதே - விளங்குகிறார்.

கீழ் நான்காம் ச்லோகத்தில் ஆழ்வான் ஸம்ஸாரக்கடலில் அழுந்தியவரை உயரத்தூக்க விரதம் பூண்டவர், ஐந்தில்-அவர் அவதரிக்கவில்லை யென்றால் மக்கள் எங்ஙனம் அக்கடலைக் கடப்பர்கள், ஏழில் - அம்மக்களுக்கு பகவத்சேஷத்வ ஜ்ஞானத்தை உதவுமவர், பத்தில் - அம்ருதம் உண்டாகும் திருப்பாற்கடல் போன்றவர், இருபத்திரண்டில்-அஹங்கார மமகாரங்களை நீக்குமவர் - என்று கூறப்பட்டதை யெல்லாம் திருவுள்ளத்தில் கொண்டு, இந்த ச்லோகத்தில் - மக்கள் தாம் செய்த பெரிய தீவினையின் வன்மையினால், 'தம்முடைய ஆத்மஸ்வரூபம் பகவானுக்கு அடிமைப்பட்டதேயன்றி சுதந்திரமன்று' என்று அறியாமையால், சுதந்திரமென்று நினைத்திருந்ததற்கு ஏற்ப, தம்மி டப்படியே மேன்மேலும் தீவினைகளைச் செய்து ஸம்ஸாரக்கடலில் ஆழ்ந்திருக் கிறார்கள், இவர்களுக்கு 'ஆத்மஸ்வரூபம் பகவானுக்கு அடிமைப்பட்டது' என்ற ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கினால் மேன்மேலும் பாபங்களைச் செய்ய மாட்டார்கள், பகவானுகந்த நல்ல காரியங்களையே செய்வார்கள். ஆகையால் இவர்கள் இனி வருந்த வேண்டிய தில்லை' என்றெண்ணிப் பரமக்ருபை



யுடன்தாமே அவதரித்து, முற்கூறிய ஸ்வரூபஜ்ஞானத்தைத் தமது உபதேசத்தினால் மக்களுக்கு உண்டாக்கித் திருத்தி - ஒரு படகைக்கொண்டே கடலைத் தாண்டவேண்டியிருப்பதனாலே, அவர்களை பகவானாகிய படகிலே ஏற்றி (=பகவானுக்கு அடைக்கலப் பொருளாக ஆக்கி) அப்படகின் வாயிலாக அவர்களை ஸம்ஸாரக் கடலில் அழுந்தாதபடி தாண்டுவிக்கிறார் என்கிறார். படகாகிய எம்பெருமான் ஆழ்வானுக்குச் சொந்தமாகையால், தமக்கு வேண்டியவர்களை - படகைத் தாண்டுவித்தற்காகப் பெறத்தக்க கூலிப்பணமேயில்லாமல் நிர்ஹேதுக க்ருபையாலே அப் படகைச் செலுத்திக் கடலைக் கடத்திப் பரமபதத்தை அடைவிக்கிறார் என்கிறார். இவ்விடத்தில் 'ஞானமனுட்டான மிவை நன்றாகவேயுடையனான குருவை யடைந்தக்கால் - மாநிலத்தீர் - தேனார்கமலத்திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தந்தரும்' என்ற உபதேசரத்தின மாலைப்பாசுரம் நினைத்தல் தகும். மிகமிக உயர்ந்த ஆசார்யர்கள் தம்மை யடைந்த சிஷ்யர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞானத்தை யுண்டாக்கினால், எம்பெருமான் ஸ்வரூபஜ்ஞான முண்டாக்கப் பெற்ற இவர்களைத் தானே படகுபோல் இருந்து ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிக்கிறான் என்றபடி.

पलायध्वं वेगात् क्वचन कथकाः काननतले
निलीना भूयास्त प्रतिकथकमत्तेभमृगराट् ।
जयी नानातन्त्र प्रवचनचणैः प्रौढवचनैः
समेतः शिष्यौघैरटति वसुधां कूरनृपतिः ॥२५॥

பலாயத்₄வம் வேக₃ாத் க்வசந கத₂கா:காநநதலே
நிலீநா பூ₄யாஸ்த ப்ரதிகத₂க மத்தேப₄ம்ருக₃ராட்
ஜயீ நாநாதந்த்ர ப்ரவசநசணை: ப்ரௌட₄வசநை:
ஸமேத:ஶிஷ்யௌகை₄ரடதி வஸுத₄ாம் கூரந்ருபதி:

ப்ரதிகதக மத்த இப ம்ருகராட் -எதிர்வாதம் செய்யுமவர்கள்கிய மதம் பிடித்த யானைகளைக் கொல்லும் ஸிம்ஹமாகிற, கூரந்ருபதி: - கூரத்தாழ்வான், நாநாதந்த்ர ப்ரவசந சணை: - பலவகையான சாஸ்த்ரார்த்தங்களை விளக்குவதில் ஆற்றல் படைத்த, ப்ரௌடவசநை: - கம்பீரமான தமது ஸ்ரீ ஸூக்திகளினால், ஜயீ - உங்களை வெல்லுமவராய்க் கொண்டு, சிஷ்யௌகை: ஸமேத: - (தம்மைப்போன்ற) சிய ஸமூஹங்களோடு கூடியவராய், வஸூதாம் அடதி - பூமியில் ஸஞ்சரிக்கிறார். கதகா: - வீண்வாதம் செய்யுமவர்களே! வேகாத் - விரைவாக, க்வசந பலாயத்வம் - எங்காவது ஓடிப்போய் விடுங்கள், காநநதலே -காட்டிடத்தில், நிலீநா: பூயாஸ்த - ஒளிந்து கொள்ளுங்கள்.

கீழ் - ஆத்மஸ்வரூபஜ்ஞானமில்லாமையினாலே ஸம்ஸாரக் கடலில் அழுந்திக்கிடக்கிற ஜனங்களை ஸ்வரூபத்தையறிவித்து எம்பெருமானோடு சேர்த்து அவனைக் கொண்டு அக்கடலைத் தாண்டுவிக்கிறார் ஆழ்வான் என்றருளினார். எவ்வளவு உபதேசித்து ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கப் பார்த்தாலும், ஸ்வரூபத்தை அறியவொட்டாமல் தத்தம் மதக்கொள்கைகளையே பிதற்றிப் பிரசாரம் செய்யும் புறமதத்தவர்கள் இருக்கும் வரையில் அந்த ஸ்வரூப ஜ்ஞானத்துக்குத் தடையேற்படும் என்ற பயத்தாலும், புறமதத்தவர்களும் ஆழ்வானிடம் அகப்பட்டுத் தோற்றுப்போய் வருந்தாமல் இருக்கட்டுமென்ற தயையினாலும் அவர்களை ஓட்டுகிறார் இச்லோகத்தில். ஆழ்வானை ஸிம்ஹமாகவும், புறச்சமயிகளை மதயானையாகவும் உருவகம் செய்கிறார். சிங்கத்துக்கே மத யானைகளின் மத்தகத்தைப் பிளக்கும் சக்தியுள்ளமையாலும், பிற விலங்குகளைக் கொல்வது ஸிம்ஹத்திற்கு ஒரு பெருமை ஆகாமையாலும், ஆழ்வானை ஸிம்ஹமென்றும் புறமதத்தவரை மதயானையென்றும் கூறினாரென்க.



ஆழ்வானாகிற ஒரு ஸிம்ஹமேயன்று. அவரைப் போல் புறச்சமயிகளையடர்க்கு மாற்றல் படைத்த சி யர்களாகிய பல ஸிம்ஹங்கள் திரிகின்றன. ஆகையால் உங்களுக்கினி உய்வு கிடையாது. எங்காவது ஓடிச்சென்று ஒளிந்து கொள்ளுங்கள் என்று அவர்களுக்கும் ஹிதோபதேசம் செய்தாராயிற்றிதனால்.

श्रुतिश्रेणीचूडायसमुसलमादाय शठजिद्-
वच:श्रेणीनित्यानुभवनिरतो जृम्भितमद: ।
प्रधावन्नभ्येति प्रतिकथकवादाहवरुचिं
निरुन्धन् कूरेशद्विरदनृपतिर्बृंहितरवै: ।। २६ ।।

*ச்ருதிஶ்ரேணீசூட$_3$ாயஸமுஸலமாத$_3$ாய ஶடஜித்$_3$*
*வச:ஶ்ரேணீநித்யாநுப$_4$வநிரதோ ஜ்ரும்பி$_4$தமத$_3$:*
*ப்ரத$_4$ாவந்நப்$_4$யேதி ப்ரதிகத$_2$கவாத$_3$ாஹவருசிம்*
*நிருந்த$_4$ந் கூரேஶத்$_3$விரத$_3$ந்ருபதிர்ப்$_3$ரும்ஹிதரவை:*

ஹே கதகா: - ஓ வாதம் செய்யுமவர்களே!, சடஜித் வச: ச்ரேணீ நித்யாநுபவ நிரத: - சடகோபரான நம்மாழ்வாருடைய திருவாய்மொழி முதலிய ஸ்ரீ ஸூக்தித் திரள்களை எப்போதும் அனுபவிப்பதில் மிகவும் விருப்பமுடையதாயும், ஜ்ரும்பிதமத: - வளர்ந்த மதத்தை உடையதாயும் இருக்கிற, கூரேச த்விரத ந்ருபதி: - கூரத்தாழ்வானாகிய உயர்ந்த யானை, ச்ருதிச்ரேணீ சூடா ஆயஸமுஸலம்- உபநிஷத்துக்களாகிற இரும்புலக்கையை, ஆதாய -எடுத்துக்கொண்டு, ப்ரும்ஹிதரவை: -பிளிறல்களின் ஒலிகளாலே, ப்ரதிகதக வாத ஆஹவருசிம் - எதிர்வாதம் செய்யுமவர்களின் - வாதப்போரில் உண்டான ஆசையை, நிருந்தந் - தடைசெய்துகொண்டு ப்ரதாவந் அப்யேதி - (உங்களை நோக்கி) ஓடி வருகிறது.

'எங்காவது ஓடிவிடுங்கள், காட்டில் ஒளிந்து கொள்ளுங்கள்' என்று முன் ச்லோகத்திலுள்ளதை இங்கும் சேர்த்துக் கொள்க. அங்குள்ள ''கதகா:'' என்பதையும் கூட்டிக் கொள்க.

முன் ச்லோகத்தில் -''கலி மிக்க செந்நெல்'' என்ற இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரத்தில் 'வலி மிக்க சீயம் இராமாநுசன்' என்று எம்பெருமானாரை ஸிம்ஹமாகக் குறித்தாற் போன்று, அவர் தம் சிஷ்யரான ஆழ்வானை ஸிம்ஹமாகக் குறித்தவர் - அங்குள்ள ''பண்தருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய், விண்டிட எங்களிராமாநுசமுனிவேழம் மெய்ம்மை கொண்ட நல்வேதக் கொழுந்தண்ட மேந்திக் குவலயத்தே மண்டி வந்தேன்றது வாதியர்காள் உங்கள் வாழ்வற்றதே'' என்ற பாசுரத்தைப் பெரும்பாலும் பின்பற்றி, அங்கு எம்பெருமானாரை மத்தகஜமாகக் குறிப்பிட்டது போல், இப்பாட்டில் ஆழ்வானை மதயானையாகக் குறிப்பிடுகிறார்.

அங்கும் இங்கும், எம்பெருமானார்க்கும் ஆழ்வானுக்கும், திருவாய்மொழி முதலிய ஆழ்வார் பாசுரங்களின் அநுஸந்தானமே மதமாகப் பெருகுவதையும், வேதாந்தங்களே உலக்கையாவதையும், அங்கு 'மண்டி வந்தேன்றது வாதியர் காள், உங்கள் வாழ்வற்றது' என்று கூறியதை, 'உங்களை நோக்கி ஓடிவருகிறது, வாதம் செய்யுமவர்களே, எங்காவது ஓடி ஒளிந்து கொள்ளுங்கள்' என்று இங்குக் கூறியுள்ளதையும் கவனித்தல் தகும். உலக்கை பகைவர்களை அழிக்குமது. வேதாந்தமாகிற உலக்கை, வாதம் செய்யுமவர்களின் சமயங்களை அழிக்குமது. எம்பெருமானாரும் ஆழ்வானும் தமது ஆனந்தத்திற்கு உடலாக அனுபவிப்பது தமிழ் வேதங்களையே என்பதும், புறச்சமயிகளை வெல்லுவதற்காக உபயோகிப்பது ஸம்ஸ்க்ருத வேதங்களையே என்பதும், அப்பாட்டிலும் இந்த ச்லோகத்திலும் ஸ்ப டமாக உள்ளமை காண்க.



असारं संसारं बहुलरतरदुःखाकरमिमम्
विसृज्य श्रीमन्तं भजत विभुमानन्दभरितम् ।
उदारस्सर्वेभ्यो वितरति जना: स्वेन समताम्
असावित्यत्रात्यानुपदिशति कूराधिपगुरु: ।। २७ ।।

*அஸாரம் ஸம்ஸாரம் ப$_3$ஹுலதரது$_3$:க$_2$ாகரமிமம்*
*விஸ்ருஜ்ய ஸ்ரீமந்தம் ப$_4$ஜத விபு$_4$மாநந்த$_3$ப$_4$ரிதம்*
*உத$_3$ாரஸ்ஸர்வேப்$_4$யோவிதரதி ஜநா: ஸ்வேந ஸமதாம்*
*அஸாவித்யத்ரத்யாநுபதி$_3$ஶதி கூராதி$_4$பகு$_3$ரு:*

ஹே ஜநா: - ஓ மக்களே!, கூராதிபகுரு: - கூரத்தாழ்வானாகிய ஆசாரியர், "பஹுலதர து:க்காகரம் - மிகவும் அதிகமான துன்பங்களுக்குப் பிறப்பிடமானதும், அஸாரம் - ஸாரமான ஆனந்தம் சிறிதுமில்லாததுமான, இமம் ஸம்ஸாரம் - இந்த உலக வாழ்க்கையை, விஸ்ருஜ்ய-அறவே விட்டுத் தொலைத்து, ஆநந்த பரிதம் -ஆனந்தம் நிறைந்தவனாய், விபும் - எல்லாம் வல்லவனான, ஸ்ரீமந்தம் - திருவின் மணாளனான திருமாலை, பஜத-அடையுங்கள், உதார: அஸெள - கொடையாளியாகிய அத்திருமால், ஸர்வேப்ய:- (இன்னார் இனையாரென்று பாராமல் தன்னையடைந்த) அனைவர்க்கும், ஸ்வேந ஸமதாம் - தன்னோடு ஒப்புமையை (தன்னோடு ஸமானமான ஆனந்தத்தை), விதரதி - அளிக்கிறான்", இதி - என்று, அத்ரத்யாந் - இவ்வுலகிலுள்ள மக்களைக் குறித்து, உபதிசதி - உபதேசிக்கிறார்.

முன்னிரண்டு ச்லோகங்களில், ஆழ்வான் பகைவர் திறத்தில் ஸிம்ஹமாகவும் யானையாகவும் இருந்து அவர்களை அச்சுறுத்துகிறார் என்பதைக் கூறி, இந்த ச்லோகத்தில் அவர் நல்ல மக்களுக்கு உபதேசம் செய்யும் விதத்தைக் கூறுகிறார்.

''இவ்வுலகவாழ்க்கையில் - உண்மையில் ஆனந்த மென்பது இல்லவேயில்லை. இருப்பதெல்லாம் துன்பமே. இதை அடியோடு விட்டுத் தொலையுங்கள். 'நாங்கள் விட்டாலும் அது எங்களை விடமாட்டேன் என்கிறதே என் செய்வோம்' என்று கேட்காதீர்கள். எல்லா விதமான ஆற்றலும் படைத்து ஆனந்தம் நிறைந்தவனான திருமாலை அடைக்கலம் புகுருங்கள். அவன் இந்தத் துன்பமயமான ஸம்ஸார வாழ்க்கையை விடுவித்து, உங்களுக்குத் தான் இருக்கும் பரமபதத்தைக் கொடுத்துத் தனக்குள்ள அத்தனை ஆனந்தத்தையும் உங்களுக்குத் தருவான். அவ்வளவு பெரியவன் அதை நமக்கு நல்குவானா என்று ஸந்தேஹப்படவேண்டாம். அளவற்ற ஆனந்தத்தை நமக்கு அளிக்கும்படியாகப் பக்கத்திலுள்ள திருமகள் நமக்காகப் பரிந்துரைப்பாள். விரைவில் அப்பெருமானைத் தஞ்ச மடையுங்கள்'' என்று, ஆசார்யராகையால் உபதேசிக்கிறார் என்கிறார். இங்கு, ''தம்மையே நாளும் வணங்கித் தொழு வார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்வர்'' என்ற பெரிய திருமொழி (11-3-5) பாசுரப்பகுதி நினைத்தற்கு உரியது. ''ஹே ஜநா: ஸ்ரீமந்தம் பஜத, உதார: ஸ: ஸர்வேப்ய: விதரதி'' என்றதனால், எம்பெருமானை அடைவதற்கும் மோக்ஷம் பெறுவதற்கும் இன்னார் இனையாரென்ற வாசியில்லை என்பது கூறப்பட்டது.

विरक्तानामग्र्यो विमलचरितो वैदिकवर:
विनेताऽऽचाराणां विगतमदमोहादिमगुण:
असूयानिर्मुक्त: शमदममुखानन्तसुगुण:
सदा श्रोत्रानन्दं कलयति परं कूरनृपति: ।। २८ ।।

விரக்தாநாமக்$_3$ர்யோ விமலசரிதோ வைதி$_3$கவர:
விநேதாऽऽசாராணாம் விக$_3$தமத$_3$மோஹாதி$_3$மகு$_3$ண:



அஸூயாநிர்முக்த: ஶமத$_3$மமுக$_2$ாநந்தஸுகு$_3$ண:
ஸதா$_3$ஶ்ரோத்ராநந்த$_3$ம்கலயதிபரம்கூரந்ருபதி:

விரக்தாநாம் - ஆசையற்றவர்களில், அக்ர்ய: - முதல்வரும், விமலசரித: - குற்றமற்ற நடத்தையுடையவரும், வைதிக வர: - வேதத்தை ப்ரமாணமாகக் கொள்பவர்களில் சிறந்தவரும், ஆசாராணாம் - அவ்வேதத்தில் கூறப்பட்ட ஆசாரங்களை, விநேதா - சிஷ்யர்கள் அநுஷ்டிக்கும்படி செய்பவரும், விகத மத மோஹ ஆதிம குண: - செருக்கு அறியாமை முதலான கெட்ட குணங்களில்லாதவரும், அஸூயா நிர்முக்த:- பொறாமையினால் விடப்பெற்றவரும், சம தம முக அநந்த ஸுகுண: - மனவடக்கம், புலனடக்கம் முதலிய, எல்லை யில்லாத நற்குணங்களை உடையவருமான, கூரந்ருபதி: - கூரத்தாழ்வான், ஸதா - எப்போதும், ச்ரோத்ராநந்தம் - செவிக்கினிமையை பரம் கலயதி - மிகவும் உண்டாக்குகிறார்.

இதற்கு முன் ச்லோகத்தில் - ஆழ்வான் உலகமக்களைக் குறித்து, ''திருவின் மணாளனே பரம்பொருள், அவன் பரம பதத்தில் அனுபவிக்கும் ஆனந்தம் போன்ற மோக்ஷானந்தமே புருஷார்த்தம், அதனைப் பெறுவதற்கு அவனைத் தஞ்சம் பற்றுவதே உபாயம்'' என்று உபதேசிப்பதாக கூறிய தம்மிடம் வந்து சிலர், ''ஆழ்வானுடைய உபதேசம் நம்பத்தகுந்ததுதானா? மற்ற மதத்தைச் சேர்ந்தவர்களும்தான் ஏதோ சில உபதேசங்களைச் செய்து போருகிறார்கள். அவை அத்தனையும் பொய்யென்றும் இவருபதேசம் மட்டும் மெய்யென்றும் நாங்கள் நம்புவது எது கொண்டு?'' என்று கேட்டார்களாக, ''ஆழ்வான் - குற்றமேதுமில்லாதவர், குணங்கள் நிறையப் பெற்றவர், மற்றும் ஆசார்யலக்ஷணங்கள் அனைத்தும் அமையப் பெற்றவர். அவர் அருளும் உபதேசமத்தனையும் எப்போதும் ஒரே தன்மையதாய்ச் செவிக்கின்பத்தையே பயக்கும். பொய்யாக

இருந்தால் சில நாட்கள் இனித்து. பின்பு கைக்காதா'' என்று அவர்களுக்கு இதனால் பதிலளிக்கிறார்.

''ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரேஸ்தாபயத்யபி, ஸ்வயமாசரதே யஸ்து ஆசார்யஸ் ஸோZபிதீயதே'' என்பது ஆசார்யலக்ஷணம். எவன் வேதமாகிய சாஸ்திரத்தின் பொருள்களைக் கற்கிறானோ? அப்பொருளுக்குச் சேரும்படி நடந்துகாட்டுகிறனோ, தான் நடக்கிறபடியே தன்னைச் சேர்ந்தவரையும் நடக்கும்படி செய்கிறானோ அவனே ஆசார்யனாகச் சொல்லப்படுகிறான் என்பது இதன் பொருள். இந்த லக்ஷணங்களில் முதலது - இந்த ச்லோகத்தில் 'வைதிகவர:' (வேதத்தைப்ரமாணமாகக் கொண்டவர்களில் தலைவர்) என்றதனால் கூறப்பட்டது. வேதார்த்தங்களை நன்றாகக் கற்றிருந்தாலன்றோ அவ்வர்த்தங்களெல்லாம் மெய்யாகை யாலே வேதம் ப்ரமாணமாகக் கொள்ள முடிவது. ''விமலசரித:'', என்பதனாலும் ''ஆசாராணாம் விநேதா'' என்பதனாலும் முறையே - அவ்வேதப் பொருளுக்குச் சேரும்படி குற்றமற நடந்து காட்டுகையாகிய இரண்டாவது லக்ஷணமும், அங்ஙனமே தன்னைச் சேர்ந்தவரும் நடக்கும்படி செய்தலாகிய மூன்றாம் லக்ஷணமும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. மற்றுள்ள அடை மொழிகளாலே, ஆழ்வானிடம் ஆசை, பொறாமை, முதலிய குற்றங்களில்லாமையும், மனத்தை அடக்குதல், மற்ற புலன்களையடக்குதல் தொடக்கமான நற்குணங்கள் உள்ளமையும் ஸ்ப டமாகவே தெரிகிறது.

ஆகவே - ஆழ்வான் எல்லாப் பெருமையும் தம்மிடம் சேரப்பெற்றவாராகையால் அவர் செய்யுமுபதேசம் நம்பத் தக்கதே. நீங்கள் அதன்படியே நடந்து கொள்வது நன்று. பிற மதத்தவர் - வேதத்தை ப்ரமாணமாகக் கொள்ளாமையாலும் அதன்படியே தாமும் அனு டித்துப் பிறரையும்



அனு டிப்பி யாமையாலும் அவர்கள் செய்யும் உபதேசம் நம்பத் தகுந்தவை யல்ல என்று அவர்களுக்கு விடையருளிச் செய்தாராயிற்று.

यदीयेक्षापात्रं भजति मनुजः प्रेमपदतां
परं पद्माभर्तुः पतितजन चूडामणिरपि ।
यदीया श्रीसूक्तिः निखिलनिगमान्तार्थ विवृतिः
स जीयात् कूरेशः सकलशुभसन्तानसरणिः ।।२९।।

*யதீ₃யேக்ஷாபாத்ரம் ப₄ஜதிமநுஜ: ப்ரேமபத₃தாம்*
*பரம் பத்₃மாப₄ர்த்து: பதிதஜநசூட₃ாமணிரபி,*
*யதீ₃யாஶ்ரீஸூக்தி:நிகி₂லநிக₃மாந்தார்த்த₂ விவ்ருதி:*
*ஸ ஜீயாத் கூரேஶ: ஸகல ஶுப₄ஸந்தாநஸரணி:*

யதீயா ஈக்ஷா பாத்ரம் - யாருடையதான பார்வைக்கு இலக்கான, மநுஜ: - மனிதன், பதித ஜந சூடாமணிரபி - ஜாத்யாசாரங்களிலிருந்து நழுவி விழுந்தவர்களில் தலைவனா யிருந்தபோதிலும், பத்மாபர்த்து: - திருமகள் மணவாளனாகிய திருமாலுடைய, ப்ரேமபததாம் - அன்பு இலக்காந் தன்மையை, பஜதி - அடைகிறானோ, யதீயா - யாருடைய தான, ஸ்ரீஸூக்தி: நல்வார்த்தையானது, நிகில நிகமாந்தார்த்த விவ்ருதி: - எல்லா வேதாந்தப் பொருள்களுக்கும் விளக்கவுரையாகிறதோ, ஸ: - அந்த, ஸகலசுபஸந்தான ஸரணி: - ஸகல மங்கள ஸமூஹத்திற்கும் வழியான (உபாயமான), கூரேச: ஜீயாத் - கூரத்தாழ்வான் மேம்பட்டு விளங்குக.

ஆழ்வானுடைய உபதேசம் நம்பத்தக்கதென்பதற்குச் சான்றாக, அவர்தம்முடைய மற்றுமுள்ள சில பெருமைகளையும் கூறுகிறார்.

ஒருவன் ஆழ்வானுடைய கடாக்ஷத்தைப் பெற்றானாயின் அவன் பரம வ்ராத்யனாயிருந்தாலும், அவன் ச்ரிய:பதியின் அன்புக்கிலக்காகி மோக்ஷம் பெறுவான். அவருடைய ஸ்ரீஸூக்தி களான ஸ்தவங்களைந்தும் எல்லா வேதாந்தார்த்தங்களையும் விளக்கமாகத் தெரிவிப்பனவாகும். அவருடைய கடாக்ஷம் மோக்ஷத்திற்கேயன்றி, இங்கிருக்கும் நாளில் அர்ச்சாவதார பகவதனுபவ கைங்கர்யங்கள், பகவத் பாகவதாசார்ய கைங்கர்யங்களுக்கு உறுப்பான செல்வம், நல்லபதத்தால் மனைவாழ்வு வாழ்வதற்குரிய கொண்டபெண்டிர் மக்கள் உற்றார் தொடக்கமான எல்லா நன்மைகளுக்கும் உபாயமாகும். ஆகையால் அவருடைய வார்த்தை நம்புதற்கு உரியது என்றாராயிற்று.

विशुद्धज्ञानाब्धिः विगतममकारः स्वपरयोः
विनेता सर्वेषामतिविमलबोधस्य विदुषाम् ।
विहर्ता श्रीरङ्गिप्रियतमयतीशानपदयोः
प्रहर्ताऽसौम्यानां भवति भविनां कूरनृपतिः ॥३०॥

*விஶுத்$_3$த$_4$ஜ்ஞாநாப்$_3$தி$_4$: விக$_3$த மமகார: ஸ்வபரயோ:*
*விநேதா ஸர்வேஷாமதிவிமலபே$_3$ாத$_4$ஸ்ய விது$_3$ஷாம்*
*விஹர்த்தா ஸ்ரீரங்கி$_3$ப்ரியதமயதீஶானபத$_3$யோ:*
*ப்ரஹர்த்தாऽஸௌம்யாநாம் ப$_4$வதி ப$_4$விநாம் கூரந்ருபதி:*

கூரந்ருபதி: - கூரத்தாழ்வான், விசுத்த ஜ்ஞான அப்தி: மிகத் தூய்மையான அறிவுக்குக் கடலாகவும், ஸ்வபரயோ: தன்னிடத்திலும் பிறபொருளிடத்திலும் , விகத மமகார: 'யான் என்னுடையவன், இவை எல்லாம் எனது' என்னும் செருக்குக் கழியப் பெற்றவராகவும், ஸர்வேஷாம் விதுஷாம்



- அறிவுடையோர் அனைவர்க்கும் , அதிவிமல போதஸ்ய - (தமது அறிவைப் போன்ற) மிகவும் நிர்மலமான (தூய்மையான) அறிவை, விநேதா - நன்றாக அடைவிப்பவராகவும், ஸ்ரீரங்கி ப்ரியதம யதீசான பதயோ: - ஸ்ரீரங்கநாதனுடைய அன்பிற்கு மிகவும் இலக்காகிய யதிராஜருடைய திருவடிகளில், விஹர்த்தா - விளையாடுமவராகவும், அஸௌம்யாநாம் - முரடர்களான, பவிநாம் - ஸம்ஸாரிகளை, ப்ரஹர்த்தா - துன்புறுத்துமவராகவும் பவதி - இருக்கிறார்.

இதுவும் ஆழ்வானுடைய பெருமைகளையே குறிக்கிறது. 'நானும், என்னுடையனவாக இதுவரையில் நினைத்திருந்த பொருளும் எம்பெருமானுக்குரிய பொருள்களே' என்ற சுத்தமான அறிவுடையவராகையாலே, 'நான் என்னுடையவன் (ஸ்வதந்த்ரன்), இவையெல்லாம் என்னுடைய பொருள்கள் என்று நினைத்தலாகிய இருவகையான மமகாரங்களும் கழியப் பெற்றவர் என்பது முதலடியின் கருத்து. அறிவுடையவர் களுக்குத் தம்முடைய அறிவுபோன்ற முற்கூறிய சுத்தமான அறிவைப் புகட்டுவர் என்பது இரண்டாமடியின் கருத்து. அறிவற்ற முரடர்களாய், 'நாங்கள் உம்முடைய உபதேசத்தைக் கேட்கமாட்டோம் என்றிருக்கும் ஸம்ஸாரப் பற்றுடையவர்களை வசைகூறித் துன்புறுத்துவர்' என்பது நாலாமடியின் கருத்து. இப்படியிருப்பதற்குக் காரணமான உத்ஸாஹம் எங்கிருந்து வந்தது? என்றால் - அழகியமணவாளனுடைய அறவிஞ்சிய அன்புக்கு உரியவரான எம்பெருமானார் திருவடிகளிலே ஸேவை செய்கையாலே வந்ததென்கிறது இதில் மூன்றாமடி.

पुराणानां पुंसां सरणिमनुयन् तत्वविवृतौ
प्रकृत्यात्मेशानां परमतमपास्यन्ननृतताम्।
पराकुर्वन् तत्त्वप्रमितपदयोः जीवतमसोः
समिन्धे कूरेशः श्रुतिशिखरसन्तानशरणम्॥ 31

*புராணாநாம்பும்ஸாம்ஸரணிமநுயந் தத்த்வவிவ்ருதௌ*
*ப்ரக்ருத்யாத்மேஶாநாம் பரமதமபாஸ்யந்நந்ருததாம்*
*பராகுர்வந் தத்த்வப்ரமிதபத$_3$யோ: ஜீவதமஸோ:*
*ஸமிந்தே$_4$கூரேஶ: ஶ்ருதிஶிக$_2$ரஸந்தாநஶரணம். 31*

கூரேச: - கூரத்தாழ்வான், ப்ரக்ருதி ஆத்மா ஈசாநாம் -மூல ப்ரக்ருதி-ஜீவாத்மா-பரமாத்மா என்ற மூன்றினுடையவும், தத்த்வவிவ்ருதௌ - ஸத்யத்வத்தை விளக்குவதில், புராணாநாம் பும்ஸாம் - பூர்வர்களான புருஷர்களுடைய, ஸரணிம் அநுயந் - வழியைப் பின்செல்லுமவராயும், தத்த்வப்ரமிதபதயோ: -உண்மைப் பொருள்களென்று வேதத்தின் மூலமாக அறியப்பட்ட பொருள்களாகிய, ஜீவ தமஸோ: - ஜீவாத்மா மூலப்ரக்ருதி என்றிவற்றினுடைய, அந்ருததாம் - பொய்ப் பொருளாம் தன்மையை, பராகுர்வந் - மறுப்பவராய், (மறுப்பதன்வாயிலாக) பரமதம் -அத்வைத மதத்தை, அபாஸ்யந் - வெகுதூரத்தில் தள்ளுமவராயும், ச்ருதி சிகர ஸந்தாந சரணம் - வேதாந்தவாக்ய ஸமூஹங்களை ரக்ஷிப்பவராய்க் கொண்டு, ஸமிந்தே - நன்றாக விளங்குகிறார்.

ஆழ்வான் வேதாந்தவாக்கியங்களில் ஒன்றையும் விடாமல், உண்மைப் பொருள்களைக் கூறி, அவற்றை ரக்ஷித்துக் கொண்டு விளங்குகிறாரென்று. இந்த ச்லோகமும் அவருடைய பெருமையையே குறிக்கிறது.

ஆழ்வான் தான் தோன்றியாக எதையும் கூறாமல், நம்முடைய ஸ்ரீவைணவ விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைப் பரப்பிய பூர்வ புருஷர்களான பராசர வ்யாஸ போதாயநாதி மஹர்ஷிகளென்ன, நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களென்ன, ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார் ஆகிய ஆசார்யர்களென்ன - இவர்கள் வழியிலே சென்று, மூல ப்ரக்ருதியாகிய சடப்பொருள், அறிவுள்ள பொருளாகிய



ஜீவாத்மா, பரமாத்மா - இம்மூன்று தத்வங்களையும் ஸத்யமென்று கூறியும். பரமாத்மாவைப் போல் ஸத்யமான பொருள்களாகவே வேதாந்தவாக்கியங்களின் வாயிலாக அறியப்படுகிற மூல ப்ரக்ருதி, ஜீவாத்மா என்ற இருபொருள்களை அஸத்யமென்று கூறும் அத்வைதிகளை மறுத்துரைத்தும், இம்மூன்றையும் உண்மைப் பொருள்களாகத் தெரிவிக்கும் வேதாந்த வாக்யங்கள் அனைத்தையும் காப்பாற்றிக் கொண்டு விளங்குகிறார் என்பது கருத்து. 'தத்த்வப்ரமித பதயோ:' என்றவிடத்திலுள்ள பதம் - என்பது பொருளைக் குறிக்கும். பதம் = கால், இடம், வஸ்து (=பொருள்). 'தமஸ்' என்பது தமோகுணத்தை அதிகமாகப் பெற்ற மூலப்ரக்ருதியைக் குறிக்குமது.

स्वरूपाभिव्यक्तिं श्रुतिशिखरसिद्धामभिदधत्
निरूप्यां वृत्त्यैवाखिलतनुभृतां तां च कथयन्।
तदीयार्चासीमां स्वयमपि वितन्वन् यतिपते:
अशेषं कैङ्कर्यं जयति सुमति: कूरनृपति:।। 32

*ஸ்வரூபாபி$_4$வ்யக்திம் ஶ்ருதிஶிக$_2$ரஸித்$_3$த$_4$ாமபித$_3$த$_4$த்*
*நிரூப்யாம்வ்ருத்த்யைவாகி$_2$லதநுப்$_4$ருதாம்தாம்ச கத$_2$யந்*
*ததீ$_3$யார்ச்சாஸீமாம் ஸ்வயமபி விதந்வந் யதிபதே:*
*அஶேஷம் கைங்கர்யம் ஜயதி ஸுமதி: கூரந்ருபதி:*

ஸுமதி:கூரந்ருபதி: -நல்லறிவு படைத்த ஆழ்வான், அகில தநு ப்ருதாம் -எல்லா ஸம்ஸாரி ஜீவர்களுடையவும், ச்ருதி சிகர ஸித்தாம் -வேதாந்த சாஸ்த்ரத்திலிருந்து தேறிய, ஸ்வரூப அபிவ்யக்திம் - (இதுவரையில் மறைந்திருந்த) ஸ்வரூபத்தின் ப்ரகாசமான மோக்ஷத்தை, வ்ருத்யைவ - பகவத் கைங்கர்யத்தைக் கொண்டே, நிருப்யாம் - அறுதியிடத்தக்கதாக, அபிததத் - கூறுமவராயும், தாம் ச - அந்த வ்ருத்தியாகிய

பகவத்கைங்கர்யத்தையும், ததீய அர்ச்சா ஸீமாம் - பாகவத கைங்கர்யத்தைத் தனது எல்லையாக உடையதாக, கதயந் - சொல்லுமவராயும், ஸ்வயமபி - தாமும், யதிபதே: - யதி ராஜருடையதான, அசேஷம் கைங்கர்யம் - கைங்கர்யங்கள் அனைத்தையும், விதந்வந் - பரக்கச் செய்பவராயும், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

இதற்கு முன்பு, ஆழ்வான் தமது பூர்வர்கள் சென்ற வழியைப் பின்பற்றி, புறச்சமயிகளை வென்று, ப்ரக்ருதி ஜீவன் பரமாத்மா ஆகிய இம்மூன்று தத்வமும் ஸத்யமென்று அறுதியிட்டருளினபடியைக் கூறி, இப்போது, வேதாந்த ஸித்தமான மோக்ஷம் ஸ்வரூபாவிர்ப்பாவம், அதன் பலம் பகவத் கைங்கர்யம், அதுவும் பாகவத கைங்கர்ய பர்யந்தமாக இருக்கும் என்று உபதேசித்து, அப்படியே தாமும் அநு டிக்கிறாரென்று கூறி அவருடைய பெருமையையே குறிப்பிடுகிறார்.

ச்சாந்தோக்யோபநிஷத்தில் 'ஏஷ ஸம்ப்ரஸாத: அஸ்மாத் சரீராத் ஸமுத்தாய, பரம் ஜ்யோதி; உபஸம்பத்ய ஸ்வேந ரூபேண அபிநி பத்யதே' (இந்த ஜீவாத்மா இந்த சரீரத்தை விட்டுக் கிளம்பிப் பரமாத்மாவைக் கிட்டி (இதுவரையில் ஸம்ஸார தசையில் தீவினைகளினால் மறைந்திருந்த) தனதேயான உண்மைத் தன்மைகள் வெளிப்படப் பெறுகிறான்) என்றுள்ளது. தனதான தன்மை - 'அபஹதபாப்மா விஜர: விம்ருத்யு: விசோக; விஜிகத்ஸ; அபிபாஸ; ஸத்யகாம; ஸத்யஸங்கல்ப; என்று எட்டுவகைப் படுமென்றும் அவ்வுபநிஷத்திலே கூறப் பட்டுள்ளது. பாபம் அனைத்தும் நீங்கப்பெறுதல், கிழத்தன மில்லாமை மரணமில்லாமை, துன்பமில்லாமை, பசியில்லாமை, தாகமில்லாமை, பகவத் கைங்கர்யத்துக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் நித்யமாக அடையப்பெறுதல், புதிதாக ஏதேனுமொரு பொருள் வேண்டுமென்று தோன்றினால், அது



நினைத்தவுடனே ஸித்திக்கப் பெறுதல் - ஆகிய இவ்வெட்டும் தனக்கேயுரிய தன்மைகள். இத்தகைய தன்மைகள் வெளிப்படுதலையே இந்த ச்லோகத்தில் ஸ்வரூபாபிவ்யக்தி என்பதனால் குறித்தார். இங்ஙனம் பரமாத்மாவைக் கிட்டி எட்டு வகையான தன்மைகள் மிகமிக விளங்கப் பெற்ற ஜீவாத்மா, வெறுமனே இருந்தால் தரிக்கமாட்டாமல் அப்பரமபத நாதனுக்குக் கைங்கர்யம் செய்வானாகையால் ஸ்வரூப ஆவிர்ப்பாவத்திற்குப் பயன் பகவத் கைங்கர்யம். அங்கும் இங்கும் நாம் செய்யும் பகவத் கைங்கர்யம் மட்டும் போதாது. அவனடியார்களுக்குக் கைங்கரியம் செய்வது, அவனுக்குச் செய்யும் கைங்கர்யத்தைவிட, அவனுக்கு மிகவும் ப்ரீதியை உண்டு பண்ணுமதாகையால், அப்பகவத் கைங்கர்யம் பாகவத கைங்கர்யத்தளவும் வளர்ந்து செல்லும். பாகவதர்க்குச் செய்யும் கைங்கர்யத்தைக் காட்டிலும், பாகவதர்களில் உயர்ந்த ஆசார்யர்க்குச் செய்யும் கைங்கர்யமே அப்பாகவதர் உகக்குமதாகையாலே, அது ஆசார்ய கைங்கர்யத்தைத் தனக்கு எல்லையாக உடையதாயிருக்கும். இத்தகைய விஷயங்களை ஆழ்வான் தமக்கு வேண்டியவர்களுக்கு உபதேசிப்பதோடு அமையாமல், தாமும் தமக்கு ஆசார்யரான எம்பெருமானார்க்கு எல்லாக் கைங்கர்யங்களையும் செய்து போருவராம். எம்பெருமானார்க்குச் செய்யும் கைங்கர்யங்கள் பாகவதர் களுக்கு உகப்பையூட்டி, அவ்வழியாக பகவானுடைய உகப்புக்குக் காரணமாயிருக்குமாகையால், ஆழ்வான் முற்கூறிய மூவர்க்கும் கைங்கர்யம் செய்தவராகிறார். இவை ஆழ்வா னுடைய பெருமைகள்.

அதுவேயன்றி, யதிபதே: என்ற ஷ ஷ விபக்தி, அபிமதமென்று பொருள்பட்டு, யதிபதிக்கு அபிமதமான பகவத் பாகவதகைங்கர்யங்கள், தம்கைங்கர்யம் ஆகிய இம்மூன்றை யும் நேரே குறிக்குமதாகவும் கொள்ளல் தகும்.

निरालम्बं कौतस्कुतमसारं निजवचः-
प्रपञ्चैः वेदान्तप्रचुरफणितार्थाननुगतैः।
पराकुर्वन् प्रौढप्रमितिजनकैर्लक्ष्मणमुनेः
परिष्कुर्वन् भाष्यं प्रथयति मतं कूरनृपतिः।। 33

*நிராலம்ப$_3$ம் கௌதஸ்குதமஸாரம் நிஜவச:*
*ப்ரபஞ்சை: வேத$_3$ாந்தப்ரசுரப$_2$ணிதார்த்தா$_2$நநுக$_3$தை:*
*பராகுர்வந் ப்ரௌட$_4$ப்ரமிதிஜநகைர்லக்ஷ்மணமுநே:*
*பரிஷ்குர்வந் ப$_4$ாஷ்யம் ப்ரத$_2$யதி மதம் கூரந்ருபதி: 33*

கூரந்ருபதி: - கூரத்தாழ்வான், வேதாந்த ப்ரசுரபணித அர்த்தாந் - உபநிஷத்துக்களில் ஒருபொருளைப் பற்றிய பெரும்பாலான வாக்யங்களின் அர்த்தங்களை, அநுகதை: - பின்பற்றியவைகளும் (அதனால்), ப்ரௌட ப்ரமிதி ஜநகை: - பரிபக்குவமான தெளிந்த அறிவை உண்டாக்குமவைகளுமான, நிஜ வச: ப்ரபஞ்சை: - தம்முடைய வார்த்தைகளின் பரப்பினால் (விளக்கமான பேச்சுக்களினால்), நிராலம்பம் - ஆதாரமற்றதும், அஸாரம் - ஸாரமான பொருள் அற்றதுமான, கௌதஸ்குத மதம் - ஏன் ஏன் என்று கேட்கும் யுக்திமாத்ரவாதிகளின் மதத்தை, பராகுர்வந் - மறுப்பவராயும், லக்ஷ்மணமுநே: - பகவத் ராமாநுஜ முனிவருடைய, பாஷ்யம் பரிஷ்குர்வந் - ஸ்ரீபாஷ்யத்தை ப்ரகாசப்படுத்துமவராயும், லக்ஷ்மணமுநே: மதம் - ஸ்ரீராமாநுஜ முனிவரின் மதத்தை, ப்ரதயதி - பிரசித்தமாக்குகிறார்.

முன்பு ஆழ்வான் எம்பெருமானார்க்கு எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்து வருகிறாரென்று கூறியவர், பணிவிடைகள் மட்டுமேயன்றி, அவர் செய்தருளிய ஸ்ரீபாஷ்யத்தின் மூலமாக அவரது மதத்தைப் பரப்புவதும் எம்பெருமானார்க்குச் செய்யும் கைங்கர்யமேயாகையால், அவர்



அது செய்யும் வகையை இதில் அருளிச் செய்கிறார். அதுவும் ஆழ்வானுடைய பெருமைகளில் ஒன்றே என்பது கருத்து.

உபநிஷத்துக்களில் ஒன்றோடொன்று மாறுபட்ட இரண்டு கருத்துக்கள் கூறப்பட்டிருந்தால் - அவற்றில் ஏதாவது ஒரு கருத்தே உண்மையாயிருக்க முடியுமாகையால், எது மெய் எது பொய் என்று எப்படி அறுதியிடுவது என்று கேள்வி எழும். எக்கருத்து பல வாக்கியங்களால் சொல்லப்பட்டிருக்கிறதோ அதுவே மெய். அதையே கொள்ள வேண்டும். எக்கருத்து சிற்சில வாக்கியங்களினால் தெரிவிக்கப்பட்டிருக்கிறதோ அது பொய். அதை அப்படியே கொள்ளக் கூடாது. மெய்க் கருத்துக்கேற்ப வேறு பொருள் கொள்ள வேண்டும் என்று நம் பெரியோர் அருளிச் செய்துள்ளார்கள். அதையொட்டி ஆழ்வானும் பலவாக்கியங் களால் கூறப்பட்ட அர்த்தங்களையே ஸத்யமாகப் பேசுமவர் என்றபடி.

இங்ஙனம் உபநிஷத்துக்களில் பலவாக்கியங்களால் த்ருடப்படுத்தப்பட்ட அர்த்தங்களையே தெளியத் தெரிவிக்கிற தமது வார்த்தைகளால் கௌதஸ்குதர்களின் மதத்தை மறுத்தருளுகிறாராம் ஆழ்வான். ஒரு ப்ரமாணத்தை மூலமாகக் கொண்டு, ஒரு விஷயத்தை ஒருவர் கூறினால், எதையும் பிரமாணமாகக் கொள்ளாமல் குத: குத: (அது எப்படி இது எப்படி, அது ஏன் இது ஏன்) என்று ஓயாமல் கேட்டுக் கொண்டிருக்கிற விதண்டாவாதிகள், கௌதஸ்குதர்கள் எனப்படுகிறார்கள். அவர்கள் கேட்பதென்னவென்பதை ஆழ்வான் தாமே அருளிச் செய்த ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் முப்பத்தெட்டாவது ச்லோகத்தைக் கொண்டு அறிதல் தகும்.

ஒரு குயவன் - தடி சக்கரம் முதலியவற்றைக் கருவி யாகவும், மண்ணை முதற்காரணமாகவும், கொண்டு ஓரிடத்தில் இருந்து கொண்டு, விற்றால் வரும் பணத்தைப் பயனாகக்

கொண்டு பானையைச் செய்கிறானல்லவா? இப்படி உங்கள் பகவான் உலகைப் படைக்கும் போது எதைக் கருவியாகக் கொண்டு எதை முதற்காரணமாகக் கொண்டு எதை இடமாகக் கொண்டு எந்தப் பயனைக் கருதிப் படைக்கிறார் என்று கேட்கிறார்களாம். ஏதாவதொன் றைக் கருவியாகச் சொன்னால், அந்தக் கருவியைப் படைக்கும் போது எதை முதற்காரணமாகக் கொள்கிறார் என்று கேட்டுக் கொண்டே போவார்களாம். ஏதாவதொரு இடத்தைச் சொன்னால், அந்த இடத்தைப் படைக்கும் போது எவ்விடத்திலிருந்து கொண்டு படைக்கிறார் என்று கேட்டுக் கொண்டே போவார்களாம். ஏதாவது ஒன்றைப் பயனாகக் குறிப்பிட்டால், உலகைப் படைத்தால் பகவானுக்கு உண்டாகும் பயன் படைப்பதற்கு முன்பு உண்டாக வழியில்லை யாகையால், நீங்கள் அப்பகவானை 'அவாப்த ஸமஸ்தகாம:', (தான் விரும்பும் எல்லாப் பயனும் ஏற்கெனவே அடையப் பெற்றவன்) என்று எங்ஙனே சொல்லுவீர்கள் என்கிறார்களாம். பயனேதுமில்லை என்றால், 'ப்ரயோஜநமநுத்திச்ய நமந்தோபி ப்ரவர்த்ததே' (ஒரு பயனையும் எதிர்பாராமல் ஒருகாரியத்தை முட்டாள் கூடச் செய்ய முயலமாட்டானே.) உங்கள் பகவானை நீங்கள் 'ஸர்வஜ்ஞ:' (எல்லாமறிந்தவன்) என்று எங்ஙனே சொல்லுவீர்கள் என்று கேட்கிறார்களாம். இப்படிப்பட்ட- ஓயாத குதர்க்கங்களைச் செய்து கொண்டு செல்லுகின்ற கௌதஸ்குதர் களை, வேதவாக்யங்களை ப்ரமாணமாகக் கொண்டு ஆழ்வான் மறுக்கிறாரென்கிறார் தொட்டாசார்யஸ்வாமி.

வேதவாக்யங்களை ப்ரமாணமாகக் கொண்டால் முற்கூறிய கேள்விகளுக்கு விடையிறுக்க முடியும். 'ய: ஸர்வஜ்ஞ:' (எவன் எல்லாவற்றையுமறிகிறானோ) என்று முண்டகோபநிஷத்தில் (1-1-10) ஸர்வஜ்ஞத்வத்தையும், 'பரா அஸ்யசக்தி: விவிதைவ ச்ரூயதே' (இந்த பகவானுடைய உயர்ந்த சக்தியானது பலவகையாகவே கேட்கப்படுகிறது) என்று



ச்வேதாச்வதரத்தில் (6-8) ஸர்வசக்தித்வத்தையும் குறித்து உள்ளமையினால் இவ்விரண்டு குணங்களோடு கூடிய ப்ரஹ்மமே உலகத்திற்குக் கருவி என்றும், 'ஸதேவ ஸோம்ய இதம் அக்ரே ஆஸீத்' (பல வகையாகத் தென்படுகின்ற இவ்வுலகம், ஸ்ரு டிக்கு முன்பு ஸத் என்று சொல்லப்படுகிற ப்ரஹ்மமாகவே இருந்தது) என்று ச்சாந்தோக்யோபநிஷத்தில் (6-21) ஸ்தூலமாய்ப் பலவான சேதநாசேதநங்களாய்த் தென்படுகின்ற இவ்வுலகத்திற்கு, ஸூக்ஷ்மமாயிருக்கிற சேதநா சேதநங்களைச் சரீரமாகக் கொண்ட ப்ரஹ்மமே முதற்காரணம் என்றும், ஸ்வே மஹிம்நி ப்ரதி டித: (தன்னுடைய தான மஹிமையில் நிலை பெற்றிருக்கிறார்) என்று ச்சாந்தோக்ய உபநிஷத்தில் (7-24-1) தன்னையே ஆதாரமாகக் கொண்டிருக்கையினால், மற்றோரிடத்தில் இருந்து கொண்டு தான் உலகத்தைப் படைக்க வேண்டிய நிர்ப்பந்தமில்லையென்றும், 'க்ரீடதோ பாலகஸ்யேவ சே டாம் தஸ்ய நிசாமய' (விளையாடுகிற சிறுபிள்ளையைப் போலவே வி ணுவினுடைய ஸ்ரு ட்யாதி வ்யாபாரங்களை யறிவாய்) என்று வேதாந்த விவரணமான வி ணுபுராணத்தில் (1-2-18) உலகப்படைப்பு முதலியவற்றை பகவானுக்கு லீலையாகச் சொல்லுகையாலே, பகவானுடைய தாத்காலிக ஸந்தோஷமே பயனாகக் கொள்ள வேண்டுமென்னும் விடைகள் காண்க. நித்யனான பரமாத்மாவே கருவியும் முதற்காரணமும் இடமுமாகையாலே அவற்றைப் படைக்க வேண்டிய அவசியம் இல்லாமையாலே, வேறொரு கருவியும் முதற்காரணமும் இடமும் எது எது என்று கௌதஸ் குதர்கள் கேட்க முடியாமையைத் தெரிந்துக் கொள்ளலாம். எல்லாம் நிறைந்த அரசன் கூட அப்போதைய மகிழ்ச்சிக்காகப் பந்தாடலாமாகையால், பகவானுடைய அவாப்த ஸமஸ்த காமத்வத்துக்குக் குறையேதும் கூற முடியாமையையும் அறிந்து கொள்ளலாம்.

கிம்ஸாதந: - க்வநிவஸந் கிமுபாததாந: கஸ்மை பலாய ஸ்ருஜதீச: இதம் ஸமஸ்தம். இத்யாத்யநி டித குதர்க்கம் அதர்கயந்த: த்வத்வைபவம் ச்ருதிவிதோ விது: அப்ரதர்க்யம் (ஸ்ரீ வைகுண்டஸ்தவம் 38) ('ஸர்வேச்வரன் இவையெல்லாப் பொருள்களையும், எதனைக் கருவியாகக் கொண்டு, எந்த இடத்தில் இருந்து கொண்டு, எதை முதற்காரணமாகக் கொண்டு, எந்தப் பயனுக்காகப் படைக்கிறான்' என்றிவ்வாறாகிய- ஓரிடத்தில் நிலைபெறுதலில்லாமல் போய்க் கொண்டேயிருக்கிற குதர்க்கங் களைச் செய்யாத வேதாந்தமறிந்த பெரியோர், எம்பெருமானே! உன் பெருமையைப் பற்றிப் பேசினால் அது எப்படி இது எப்படி என்று கேட்கக் கூடாதென்று கருதுகிறார்கள்.) என்றிந்த ச்லோகத்தைப் பின்பற்றியே தொட்டாசார்ய ஸ்வாமி இந்த 33ம் ச்லோகத்தை இயற்றினார் என்பது பொருந்தும்.

प्रवालरुचिराधरस्फुरितचारुमन्दस्मितः
प्रकाममधुराक्षरैरभिनवैः स्ववाग्गुम्फनैः!
सदा व्यवहरन् कलाः समिति सात्त्विकाग्रेसरान्
तनोति बहुविस्मयातिशयचित्रितान् कूरपः।। 34



*ப்ரவாலருசிராத$_4$ரஸ்பு$_2$ரிதசாருமந்த$_3$ஸ்மித:*
*ப்ரகாமமது$_4$ராக்ஷரைரபி$_4$நவை:ஸ்வவாக்$_3$கு$_3$ம்ப$_2$நை:*
*ஸத$_3$ாவ்யவஹரந்கலா:ஸமிதிஸாத்த்விகாக்$_3$ரேஸராந்*
*தநோதி பஹு விஸ்மயாதிஶயசித்ரிதாந் கூரப: 34*

கூரப: - கூரத்தாழ்வான், ப்ரவாலருசிர அதர ஸ்புரித சாரு மந்தஸ்மித: - பவழம் போல அழகிய உதடுகளில் விளங்குகிற அழகான புன்சிரிப்பை உடையவராய், ப்ரகாம மதுர அக்ஷரை: - மிகவும் இனிமையான எழுத்துக்களைக்



கொண்டவைகளும், அபிநவை: - இதற்கு முன்பு கேட்டிராத வைகளுமான , ஸ்வவாக் கும்பநை: - தமது சொற்களின் சேர்க்கைகளால், ஸமிதி - வாதப் போரில், ஸதா - எப்போதும், கலா: - சாஸ்த்ரார்த்தங்களை, வ்யவஹரந் - தெரிவித்துக் கொண்டு, ஸாத்த்விக அக்ரேஸராந் - ஸத்வகுணம் படைத்தவர் களில் தலைவர்களை, பஹு விஸ்மயாதிசய சித்ரிதாந் - பலவகைப்பட்ட ஆச்சர்யங்களின் மிகுதியினால், சித்திரத்தில் எழுதப்பட்டவர் போல், தநோதி - செய்கிறார்.

ரஜோகுணமும் தமோகுணமுமுள்ள புறச்சமயிகளோடு ஆழ்வான் வாதப் போர் நிகழ்த்தும்போது, சிறிதும் கோபமின்றி புன்சிரிப்போடு பேசுகின்றாராம். அவர் திருவாக்கிலிருந்து பலவகையான சாஸ்த்ரார்த்தங்கள் வெளிவருகின்றனவாம். சொற்களின் சேர்த்தியும் அபூர்வமாயிருக்கிறதாம். இத்தகைய சப்தங்களையும் அர்த்தங்களையும் கேட்ட அச்சபையில் குழுமியிருந்த ஸத்த்வகுணம் படைத்த வித்வத்வரிஷ்டர்கள், ஆச்சரிய மிகுதியினால் பரவசமடைந்து தம்முடலையும் உதடுகளையும் அசைக்கமாட்டிற்றிலராய்ச் சித்திரத்தில் எழுதப் பட்ட ஓவியம் போலிருந்தார்களாம். இங்கு 'சுருண்டிருண்ட குழல் தாழ்ந்த முகத்தான் ஊதுகின்ற குழலோசை வழியே, மருண்டு மான்கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர, இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே' என்ற பெரியாழ்வார் திருமொழிப் (3-6-9) பாசுரம் நினைக்கத் தக்கது. குழலோசையின் பொருள் ஆய்ச்சியர்க்கேயன்றி மான்க ணங்களுக்குத் தெரியாது. ஓசை மட்டும் கேட்டு மான்கணங்கள் அ டைந்த ஆச்சரியத்தைக் காட்டிலும், ஆழ்வானுடைய சப்தங்களையும் சாஸ்த்ரார்த்தங் களையும் கேட்டு ஸாத்த்விகர்கள் அனுபவிக்கும் ஆச்சரியம் மிகப் பெரிதாய் வாசாமகோசரமன்றோ? அவர்கள் ஓவியம் போல இருந்ததில் வியப்பொன்றுமில்லை. இதுவும்

ஆழ்வானுடைய பெருமையே. ஸமித்=யுத்தம். இங்கே வாதயுத்தமாயிற்று.

कथाऽऽहवकृतोद्यमान् कलिमलानुलिप्ताशयान्
तथागतमतानुगान् तदितरान् द्विषद्वादिनः।
मुधाकृतपरिश्रमान् मुकुलितात्मवाग्जृम्भणान्
विधाय विबुधस्तुतो जयति कूरनाथो गुरुः।। 35

*கத$_3$ாஹவக்ருதோத்$_3$யமாந் கலிமலாநுலிப்தாஶயாந்*
*தத$_2$ாக$_3$தமதாநுகாந் ததி$_3$தராந் த்$_3$விஷத்$_3$வாதி$_3$ந;*
*முத$_4$ாக்ருதபரிஶ்ரமாந் முகுலிதாத்மவாக்$_3$ஜ்ரும்ப$_4$ணாந்*
*வித$_4$ாய விபு$_3$த$_4$ஸ்துதோ ஜயதி கூரநாதே$_2$ா கு$_3$ரு: 35*

கூரநாதோ குரு: - கூரநாதரென்றும் ஆசாரியர், கலிமல அநுலிப்த ஆசயாந் - கலியின் குற்றத்தினால் கெடுக்கப்பட்ட மனத்தையுடையவர்களாய் , கதா ஆஹவ க்ருதோத்யமாந் - வாதமாகிய போரில் மூண்டவர்களான,ததாகதமத அநுகாந்- புத்தனுடைய மதத்தைப் பின்பற்றியவர்களையும், ததிதராந் - அவர்களை விட வேறான, த்விஷத் வாதிந: - எதிரிகளாய் வாதம் செய்யுமவர்களையும், முகுலித ஆத்ம வாக் ஜ்ரும்பணாந் - மூடப்பட்ட தமது பேச்சின் வளர்ச்சியை யுடையவர்களாகவும், முதாக்ருத பரிச்ரமாந் - பயனற்றதாகச் செய்யப்பட்ட தமது உழைப்பையுடையவர் களாகவும், விதாய - செய்து, விபுதஸ்துத: - ஸாத்த்விக பண்டிதர்களால் துதிக்கப்பட்டவராய்க் கொண்டு, ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

இந்த ச்லோகத்தில் ஆழ்வான் புத்த மதத்தவர்களோடும் மற்றுமுள்ள புறச்சமயிகளோடும் வாதம் செய்து அவர்களை வென்று அவர்கள் வள வளவென்று பேசும் பேச்சுக்களை



அடக்கி, அவர்கள் தம்தம் சாஸ்த்ரங்களில் உழைத்த உழைப்பைப் பயனற்ற காரியமாகச் செய்து விட்டாராம். அதைக் கண்டு அங்குள்ள பண்டிதர்கள் அவரைப் புகழ்ந்தார்களாம். அல்லது முன்ச்லோகத்தில் - ஆச்சரியத்துக்குப் பரவசப்பட்டு மோஹித்துச் சித்திரம் போலிருந்தவர்களாகச் சொல்லப்பட்ட ஸாத்த்விக பண்டிதர்களே சற்று நேரம் கழித்து அம்மோகந் தீர்ந்து கொண்டாடியதாகவும் கொள்ளலாம். ததாகத: = புத்தன்.

निराकृतदुरीहितैः निगमसारसन्दर्शिभिः
निरस्तदुरितालिभिः निखिलसंशयच्छेदिभिः।
नितान्तमधुरैश्शुभैः निखिलसौख्यसम्पादकैः
निजैर्वचनगुम्फनैः जयति कूरनाथो गुरुः।। 36

*நிராக்ருதது$_3$ரீஹிதை: நிக$_3$மஸாரஸந்த$_3$ர்ஶிபி:*
*நிரஸ்தது$_3$ரிதாலிபி$_4$: நிகி$_2$லஸம்ஶயச்சே$_2$தி$_3$பி$_4$:*
*நிதாந்தமது$_4$ரைஶ்ஶுபை$_4$: நிகி$_2$லஸௌக்யஸம்பாத$_3$கை:*
*நிஜைர்வசநகு$_3$ம்ப$_2$நை: ஜயதி கூரநாதே$_2$ா கு$_3$ரு: 36*

கூரநாதோகுரு: - ஆழ்வானாகிய ஆசாரியர், நிகமஸார ஸந்தர்சிபி: - வேதாந்தங்களின் ஸாரார்த்தங்களை அறிவிப் பனவும், நிகில ஸம்சயச்சேதிபி:- எல்லா ஸந்தேஹங் களையும் அறுக்கவல்லனவும், நிதாந்த மதுரை: - மிகவும் இனியனவும், சுபை: - நன்மை பயப்பனவும், நிகில ஸௌக்ய ஸம்பாதகை: - எல்லாவகையான ஸௌக்யத்தையும் உண்டாக்குவனவும், நிராக்ருத துரீஹிதை: - போக்கடிக்கப் பட்ட மாறுபட்ட கருத்துக்களையுடையனவும், நிரஸ்த துரித ஆலிபி: - (மாறு பட்ட கருத்துண்டாவதற்குக் காரணமான) பாப ஸமூஹத்தைத் தூக்கியெறிவனவுமான, நிஜை: - தம்முடைய, வசந கும் பநை:- வார்த்தைகளின் சேர்த்திகளால், ஜயதி-வெற்றி பெறுகிறார்.

ஆழ்வானுடைய சப்தஸந்தர்ப்பமானது வேதஸாரத்தைப் போதித்து ஐயமனைத்தையும் நீக்குமது. கேட்பதற்கும் இனிமையானது. அதுவேயன்றி எல்லாநன்மைகளையும் உண்டாக்க வல்லது. எதிரிகளின் மாறான எண்ணங்களையும் அதற்குக் காரணமான பாபங்களையும் நீக்கவல்லது என்கிறார். பெரியோர்களின் பேச்சுக்கு இவையன்றோ லக்ஷணமாவது?

कलिर्हतभवोऽभवत् कलुषजातमुन्मूलितं
तमश्च रजसा समं विलयमाप सत्त्वं पुनः।
समेत्युपचितिं नृणामुदयमेति धीवल्लरी
महीतलमुपागते महति कूरनाथे गुरौ।। 37

*கலிர்ஹதப$_4$வோऽப$_4$வத் கலுஷஜாதமுந்மூலிதம்*
*தமஶ்ச ரஜஸா ஸமம் விலயமாப ஸத்த்வம் புந:*
*ஸமேத்யுபசிதிம் ந்ருணாமுத$_4$யமேதி தீ$_4$வல்லரீ*
*மஹீதலமுபாக$_3$தே மஹதிகூரநாதே$_2$ கு$_3$ரௌ. 37*

கூரநாதே - கூரத்தாழ்வானாகிற, மஹதி குரௌ - மஹாசார்யர், மஹீதலம் உபாகதே - பூமியை அடைந்தவளவில், கலி;- கலியுகமானது, ஹதப்வ: - நாசம் செய்யப்பட்ட உண்மையையுடையதாக, அபவத் - ஆயிற்று. (எப்படி என்றால்), கலுஷஜாதம் - பாபஸமூஹமானது, உந்மூலிதம் - வேரோடு களைந்தெறியப்பட்டது.தமச்ச ரஜஸாஸமம் - தமோகுணம் ரஜோகுணத்தோடு, விலயம் ஆப - அழிவை அடைந்தது. ஸத்த்வம் புந: - ஸத்துவகுணமோ என்னில், உபசிதிம் ஸமேதி - வளர்ச்சியை மிகவும் அடைந்து கொண்டேயிருக்கிறது. (அதனால்), தீவல்லரீ -அறிவென்னும் கொடியானது, உதயம் ஏதி - வளர்ச்சியை அடைகிறது.

ஆழ்வானுடைய அவதாரத்தின் பெருமையை அருளிச் செய்கிறார். கடல் வண்ணன் பூதமான (=கடல் வண்ணனான



எம்பெருமானே பரதத்துவமென்றறிந்ததனால் ஸத்தை பெற்ற) ஆழ்வான் இம்மண்மேல் தோன்றியவுடன், 'கலியும் கெடும்' என்ற ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியின்படி கலியுகம் கெட்டே போய் விட்டது. கலியுகமாவது - பாபமும், அதற்குக் காரணமான ரஜோகுணமும், தமோகுணமும், மலியப் பெற்று ஸத்துவகுணம் மிகக் குறையப் பெற்ற யுகமாகும். அதன் உண்மையழிவதாவது -அதற்குமாறாக ஸத்துவகுணம் மல்குதலும், ரஜோகுணமும் தமோகுணமும் அழிதலும் ஆகும். ஸத்துவகுணம் மலிந்தால் அதன் காரிய்மான அறிவும் வளர்ச்சியடையும். ஆக ஆழ்வானுடைய அவதாரத்தினால், கலியுகத்தின் தோஷங்கள் எல்லாம் நீங்கி, க்ருதயுகத்தின் தருமமான ஸத்துவகுணமும் அதனால் அறிவும் வளர்ந்ததென்றபடி.

दयादिसुगुणावलिः दनुजवैरिणा स्वामिना
नियन्त्रितनिजाकृतिः निलयमेत्य कूराधिपम्।
प्रतिक्षणविजृम्भिताकृतिरवाप्य लक्ष्यं परं
प्रकाशमधिगच्छति प्रतिहतात्मतुल्याधिकः।। 38

*தயாதி$_3$ஸுகு$_4$ணாவலி: தநுஜவைரிணா ஸ்வாமிநா*
*நியந்த்ரிதநிஜாக்ருதி: நிலயமேத்ய கூராதி$_4$பம்*
*ப்ரதிக்ஷணவிஜ்ரும்பி$_4$தாக்ருதிரவாப்ய லக்ஷ்யம் பரம்*
*ப்ரகாஶமதி$_4$க$_3$ச்ச$_2$தி ப்ரதிஹதாத்ம துல்யாதி$_4$க: 38*

தநுஜவைரிணா - அஸுரசத்ருவான, ஸ்வாமிநா - எம்பெருமானாலே,நியந்த்ரித நிஜாக்ருதி: - குறைக்கப்பட்ட தத்தம் வடிவுகளை உடைய, தயா ஆதி ஸுகுண ஆவலி: - தயை முதலிய நற்குணங்களின் கூட்டமானது, கூராதிபம் - கூரத்தாழ்வானாகிற, நிலயம் ஏத்ய - ஒளிவிடத்தை அடைந்து, ப்ரதிக்ஷண விஜ்ரும்பித ஆக்ருதி: - க்ஷணந்தோறும் வளர்ந்த

தத்தம் வடிவுகளையுடையதாய், பரம் லக்ஷ்யம் - வளர்ச்சியில் உயர்ந்த குறிக்கோளை, அவாப்ய - அடைந்து, ப்ரதிஹத ஆத்ம துல்ய அதிக: - தன்னோடு ஒத்ததும் மிக்கதுமான குணத்தொகுதி மற்றொன்றில்லாததாய்க் கொண்டு, ப்ரகாசம் அதிகச்சதி - விளக்கத்தையடைகிறது.

முன்பு ஆழ்வானுடைய அவதாரப் பெருமை கூறப்பட்டது. இதில் அவர் தம்முடைய தயை முதலிய நற்குணங்களின் பெருமை கூறப்படுகிறது.

அஸுரர்க்குப் பகைவனான திருமால் தயை முதலிய தனது நற்குணங்களை அஸுரரிடம் காட்டாமல் தேவர்களிடத்தில் மட்டுமே காட்டி, அவற்றை அதிகமாக வளரவொட்டாமல் அடக்கி வைத்தானாம். அவை இனி இங்கேயே இருந்தால் தாம் எண்ணியவளவுக்கு வளர முடியாதென்று எண்ணி, எம்பெருமானை ஏமாற்றி ஆழ்வானிடம் வந்து சேர்ந்து ஒளிந்து கொண்டு தாம் எண்ணிய எல்லையான வளர்ச்சியையடைந்து விளங்குகின்றனவாம். இதனால் எம்பெருமானுடைய தயை தொடக்கமான நற்குணங்களை விட ஆழ்வானுடைய அந்நற் குணங்கள் உயர்ந்தன என்றதாயிற்று. தயையாவது - தன் பயனைக் கருதாது, வருந்துகிற பிறர்பக்கல் இரக்கம் காட்டுதல், ஆதிசப்தத்தால் - குற்றங்களை குணமாகக் கொள்ளுதலாகிய வாத்ஸல்யமும், மிகப் பெரியவன் மிகத் தாழ்ந்தவர்களோடு பேதமின்றிக் கலந்து பழகுவதாகிய ஸௌசீல்யமும் முதலியவை கொள்ளத்தக்கன. ஆழ்வான் இக்குணங்களை நாலூரான் முதலிய பகைவரிடமும் காட்டியபடியால் ஆழ்வானுடைய குணங்கள் மிகமிக வளர்ந்தனவென்க.

श्रिय:पतिरुदारधी: श्रुतिगणैककण्ठ्येडितां
विहाय परमेशतां भुवि यदात्मनाऽऽचार्यताम्।



अवाप्तुमवतीर्य तत्समुपलब्धये शिष्यतां
अवाप यतिभूपते: विजयतां स कूराधिप:।। 39

*ச்ரிய:பதிருதா$_3$ரதீ$_4$: ஶ்ருதிக$_3$ணைககண்ட்$_2$யேடி$_3$தாம்*
*விஹாயபரமேஶதாம் பு$_4$வி யதா$_3$த்மநாசார்யதாம்*
*அவாப்துமவதீர்ய தத்ஸமுபலப்$_3$த$_4$யே ஶிஷ்யதாம்*
*அவாப யதிபூ$_4$பதே: விஜயதாம் ஸ கூராதி$_4$ப: 39*

உதாரதீ: - உயர்ந்த எண்ணம் படைத்த, ச்ரிய;பதி: - ஸ்ரீமந்நாராயணன், ச்ருதிகணஐககண்ட்ய ஈடிதாம் - வேதவாக்ய ஸமூஹத்தினால் ஒருமிடறாக ஸ்தோத்ரம் செய்யப்பட்ட, பரம ஈசதாம் - மிகமிகவுயர்ந்த ஸர்வேச்வரத்வத்தை, விஹாய - விட்டொழித்து, ஆசார்யதாம் அவாப்தும் ஆசார்யத்வத்தை அடைவதற்காக, புவி- பூமியில், யதாத்மநா - யாருடைய வடிவமுடையவனாக, அவதீர்ய- அவதரித்து, தத் ஸமுலப்தயே - அவ்வாசார்யத்வத்தைப் பூர்ணமாகப் பெறுவதற்காக, யதிபூபதே: - யதிராஜரான எம்பெருமானாருக்கு, சிஷ்யதாம் - சியராம் தன்மையை, அவாப்ய - அடைந்தானோ, ஸ: கூராதிப: - அந்தக் கூரத்தாழ்வான், ஜயது - வெற்றிபெற்றிடுக.

எம்பெருமானுடைய தயாதி குணங்களை விட ஆழ்வானுடைய அக்குணங்கள் உயர்ந்தனவென்று முன்பு கூறியவர், இதில் எம்பெருமானே - 'ஸர்வேச்வரனை ஒப்புக் கொள்ளாத நாஸ்திகர்களும் ஆசார்யனை ஒப்புக் கொள்ளுகிறபடியால் ஸர்வேச்வரனான நம்மைவிட ஆசார்யனே உயர்ந்தவன்' என்று கருதிப் பூமியில் கூரத்தாழ்வானாக அவதரித்தான். அதனாலும் ஆசார்யத்வ பூர்த்தியை அடையமுடியாதென்று நினைத்து எம்பெருமானார்க்கு சியனாக ஆகி அது தன்னை

அடைந்தான் என்கிறார். எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்திறே எழுபத்து நால்வர் ஆசார்ய புருஷர்களாயிற்றதும்.

वचोभिरनृतेतरैः अखिलजीवजीवातुभिः
मुमुक्षुजनतामुदे मुररिपोर्महावैभवम्।
सबाष्पनयनं ब्रुवन् सपुलकोद्गमं सादरं
समिद्धमधुरस्मितो जयति कूरपृथ्वीपतिः।। 40

*வசோபி$_4$ரந்ருதேதரை: அகி$_2$லஜீவஜீவாதுபி$_4$:*
*முமுக்ஷுஜநதாமுதே$_3$ முரரிபோர்மஹாவைப$_4$வம்*
*ஸப$_3$ாஷ்பநயநம் ப்$_3$ருவந் ஸபுலகோத்$_3$க$_3$மம் ஸாத$_3$ரம்*
*ஸமித்$_3$த$_4$மது$_4$ரஸ்மிதோ ஜயதி கூரப்ருத்$_3$வீபதி: 40*

கூரப்ருத்வீபதி: - கூரத்தாழ்வான், அகிலஜீவஜீவா துபி: - எல்லா ஜனங்களுக்கும் ஜீவனௌஷதமாய், அந்ருதேதரை: - பொய்யல்லாத (ஸத்யமான), வசோபி: - வேதவாக்யங் களைக் கொண்டு அல்லது பொய்யில் பாடலான திருவாய்மொழி முதலியவற்றைக் கொண்டு, முரரிபோ: - முராசுரனையழித்த எம்பெருமானுடைய, மஹாவைபவம்- மிகவுயர்ந்த பெருமையை, முமுக்ஷுஜநதா முதே - முக்தி பெறவிரும்பும் மக்களின் மகிழ்ச்சிக்காக, ஸபாஷ்பநயநம் -கண்ணீர் பெருகும் கண்களோடும், ஸபுலகோத்கமம் - மயிர்க் கூச்செறி தலோடும், ஸமித்தமதுரஸ்மித: - மிகவிளங்கிய இனிய புன் சிரிப்பையுடையவராய்க் கொண்டு, ஸாதரம் - ப்ரீதியோடு ப்ருவந் - பேசும்வராய், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

இதில் ஆழ்வான் செய்தருளும் பகவதனுபவத்தைப் பற்றிக் கூறுகிறார். ஆசார்யர்கள் தினந்தோறும் செய்யவேண்டிய கார்யங்களில். உபயவேதாந்த க்ரந்தங்களைக் கொண்டு



எம்பெருமானுடைய பெருமையை கண்களில் நீர்மல்கப் பெற்றும் உடலில் மயிர்க் கூச்செறியப் பெற்றும் ப்ரீதியோடும் புன் சிரிப்போடும் கூடித் தாம் அநுபவித்து முமுக்ஷுஜனங்களையும் அநுபவிக்கச் செய்வதாகிற காலக்ஷேபமும் ஒன்றன்றோ? அது தன்னை ஆழ்வான் நிர்வஹிக்கும்படியை அருளிச் செய்தாராயிற்று.

भवाख्यमरुमेदिनीवलनजाततापातुरान्
जनान् हरिकथामृतैः मधुरशीतलैर्जीवयन्
तदीयपदशेषताधियमपारमुत्पादयन्
विभाति भुवि कूरराट् विबुधसङ्घसंसेवितः।।41

*ப$_4$வாக்$_2$யமருமேதி$_3$நீவலநஜாததாபாதுராந்*
*ஜநாந் ஹரிகத$_2$ாம்ருதை: மது$_4$ரஶீதலைர்ஜீவயந்*
*ததீ$_3$யபத$_3$ஶேஷதாதி$_4$யமபாரமுத்பாத$_3$யந்*
*விப$_4$ாதி பு$_4$வி கூரராட் விபு$_3$த$_4$ஸங்க$_4$ஸம்ஸேவித: 41*

கூரராட் - கூரத்தாழ்வான், பவாக்ய மருமேதிநீ வலந ஜாத - ஸம்ஸாரமென்று பெயர்பெற்ற பாலை நிலத்தில் ஸஞ்சரிப்பதனால் உண்டான, தாப ஆதுராந் - தாபத்தினால் வருந்திய, ஜநாந் - மக்களை, மதுரசீதலை: -இனியனவாய்க் குளிர்ந்தவையுமான, ஹரிகதா அம்ருதை: - பகவத் கதைகளாகிய அமுதப் பெருக்குகளால், ஜீவயந் - பிழைப்பிப்பவராயும், ததீய பத சேஷதாதியம் -ஜீவாத்மாக் கள் - அவ்வெம்பெருமானடியார்களுடைய திருவடிகளுக்கும் அடியவர்கள் - என்னும் அறிவை, அபாரம் - அதிகமாக, உத்பாதயந் - உண்டாக்குமவராயும். விபுதஸங்க ஸம்ஸேவித - வித்வத் கோஷ்டியினால் ஸேவிக்கப் பெற்றவராய் , புவி விபாதி - பூமியில் விளங்குகிறார்.

இந்த ச்லோகத்திலும், ஆழ்வானுடைய பகவதனுபவ ப்ரகாரத்தைக் கூறி, ஜீவாத்மாக்களுடைய பாகவத சேஷத்வத்தை நன்றாக அவர்களுக்கு அறிவித்து, வித்வத்கோ டியினால் ஸேவிக்கப்படும்படியைத் தெரிவிக்கிறார். ஜீவாத்மாக்கள் பகவானுக்கு அடிமையாவது மட்டும் போதாது, அவனடியார் களான பாகவதர்கட்கும் அடிமையாயிருக்கவேணும். எம்பெருமான் தானும் தனக்கடிமையானாரைத் தன்னடியார்க்கும் அடியவராக ஆக்குகிறான். அழகிய மணவாளன் திருவேங்கட முடையான் பேரருளாளப் பெருமாள் ஆகிய இவ்வெம் பெருமான்கள் மூவரும், தம்மடியரான திருப்பாணாழ்வார் தொண்டைமான்சக்ரவர்த்தி எம்பெருமானார் ஆகிய இம்மூவரையும், முன்பே தமக்கு அடியவராகியிருக்கிற லோகஸாரங்கமாமுனிகள், குறும்பறுத்த நம்பிகள், திருக்கச்சி நம்பிகள் என்னும் இம்மூவர்க்கும் அடியவர்களாக ஆக்கியது இங்கே நினைக்கத் தக்கது. இப்படி ஆழ்வான் எம்பெருமான் பெருமையை அனுபவித்து ஆத்மாக்கள் பகவானுக்கு சேஷமென்பதைக் குறிப்பாக அறிவித்து, அவர்கள் பாகவதர்க்கு சேஷமென்பதனை ஸ்ப டமாக அறிவித்தபடியால், அங்ஙனேயறியப் பெற்ற பண்டிதர்களால் ஸேவிக்கப்பட்டு விளங்குகிறாரென்று இதனால் தெரிவித்தாராயிற்று.

असद्भिरनुपद्रुताम् अनिदमादिवाणीं सतीम्
अनन्यपदसंश्रितां हरिपदानुषक्तां परम्।
जनार्दनपरत्वधीजनितभावबद्धाशयैः
वचोभिरुपलालयन् जयति कूरनाथो गुरुः।। 42

*அஸத்பி$_4$ரநுபத்$_3$ருதாம் அநித$_3$மாதி$_3$வாணீம் ஸதீம்*
*அநந்யபத$_3$ஸம்ஶ்ரிதாம் ஹரிபத$_3$ாநுஷக்தாம் பரம்*



*ஜநார்த$_3$னபரத்வதீ$_4$ஜநிதப$_4$ாவப$_3$த்$_3$த$_4$ாஶயை:*
*வசோபி$_4$ருபலாலயந் ஜயதி கூரநாதோ$_2$ கு$_3$ரு: 42*

கூரநாதோ குரு: - கூரேசரென்றும் ஆசாரியர், அநிதமாதி வாணீம் - இது தான் பிறந்தகாலம் என்பதில்லாத (அநாதியான) வேதவாக்கை, ஜநார்தந பரத்வ தீஜநித 'எம்பெருமானையே பரம்பொருளாகக் கொண்டது வேதம்' என்ற அறிவினால் உண்டு பண்ணப்பட்ட, பாவபத்த ஆசயை: - மனதில் ஊன்றிய கருத்தைத் தெரிவிக்கிற, வசோபி: - தமது வார்த்தைகளினால், ஸதீம் -பதிவ்ரதையாகவும், அஸத்பி: - அஸத்துக்களான புறச்சமயிகளாலே, அனுபத்ருதாம் - தமக்குத் தோற்றியபடியெல்லாம் பொருள் சொல்லிக் கெடுக்கப் படாததாகவும், அநந்யபதஸம்ச்ரிதாம் -மற்றொரு தேவர் களின் காலில் குனியாததாகவும், பரம் -மிகவும், ஹரிபதஅநுஷக்தா- எம்பெருமான்திருவடிகளில் ஆசை கொண்டதாகவும், உபலாலயந் - உபதேசித்துக் கொண்டாடு மவராய், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

ஆழ்வான் - தம்முடைய பகவதனுபவத்திற்கு மூலமாக அமைந்த வேதம் எம்பெருமானையே பரதெய்வமாகக் கொண்டுள்ளது, அது எம்பெருமான் திறத்தில் மிக்க ஆசை கொண்டு அவன் திருவடிகளிலேயே தன் தலையைச் சாய்க்குமது, வேறொருவர் காலில் குனியாதது, என்றெல்லாம் எல்லோர்க்கும் எடுத்துரைத்து, அவ்வேதத்தை எம்பெருமான் விஷயத்தில் பதிவ்ரதையாகவும் புறச்சமயிகளால் உபத்ரவம் செய்ய முடியாததாகவும் கொண்டாடினார் என்றாராயிற்று இதனால்.

अनन्तगुणमौक्तिकैः अखिलचेतनामोदकैः
अनन्तनयसागरात् स्वयमुपाहृतैश्शोभनैः।

अनन्तपदसंश्रितानभिविभूषयन् शोभते
ह्यनन्तगुणशेवधि जयति कूरनाथो गुरुः।। 43

*அநந்தகு$_3$ணமௌக்திகை: அகி$_2$லசேதநாமோத$_3$கை:*
*அநந்தநயஸாக$_3$ராத் ஸ்வயமுபாஹ்ருதைஶ்ஶோப$_4$நை:*
*அநந்தபத$_3$ஸம்ஶ்ரிதாநபி$_4$விபூ$_4$ஷயந்ஶோபதே*
*ஹ்யநந்தகு$_3$ணஶேவதி$_4$ர் ஜயதி கூரநாதே$_2$ா கு$_3$ரு: 43*

அநந்தகுணசேவதி: - எல்லையில்லாத நற்குணங்களுக்கு நிதியான, கூரநாதோ குரு; - கூரத்தாழ்வானாகிய ஆசார்யர், அநந்த நய ஸாகராத் - எல்லையில்லாத சாஸ்த்ரங்களாகிய கடலிலிருந்து, ஸ்வயம் -தாமாகவே, உபாஹ்ருதை; - எடுக்கப்பட்டவைகளும், அகில சேதந ஆமோதகை: - மக்களனைவர்க்கும் மகிழ்ச்சியை ஊட்டுவனவும், சோபநை: -நல்லவைகளுமான, அநந்த - நற்குணம் நிறைந்த எம்பெருமானுடைய, குண - நற்குணங்களாகிற, மௌக்திகை: -முத்துக்களினாலே, அநந்தபத ஸம்ச்ரிதாந் - எம்பெருமான் திருவடிகளைப் பற்றின பக்தர்களை, அபிவிபூஷயந் - நன்றாக அலங்கரிப்பவராய்க் கொண்டு, சோபதே - ப்ரகாசிக்கிறார்.

ஆழ்வான் சாஸ்த்ரங்களாகிற ஸமுத்ரங்களிலிருந்து அனந்தகுணங்களாகிற முத்துக்களைஎடுத்து அவற்றாலே பகவத் பக்தர்களை அலங்கரிக்கிறாரென்கிற இதுக்கு - அனந்த குணங்(பகவத் குண)ங்களை உபதேசித்து அவற்றை எப்போதும் அடியவர்கள் நினைக்கும்படி செய்து, அப்படி அவர்கள் நினைத்த முத்துக்களை - குணங்களை அவர்களுக்கு ஆத்மாபரணமாக்குகிறார் என்றும், அனந்தகுணங் (எல்லையில்லாத ஆத்ம குணங்)களை அடியவர்க்கு உபதேசித்து, அவ்வாத்ம குணங்களை யுடையவர்களாக அவர்களைத் திருத்தி அக்குணங்களை அவர்களுக்கு



ஆத்மாபரணமாக்குகிறார் என்றும் பொருள் கொள்ளலாம். இதனால் ஆழ்வான் - பகவத்பக்தர்களைத் தம்மைப் போலே ஆத்ம குணபூர்ணராகவும் பகவத்குணாநுஸந்தானம் செய்பவர்களாகவும் செய்து அவர்களை விளங்கச் செய்யும் பெருமையையுடையவரென்று கூறினாராயிற்று.

अवाङ्मनसगोचरामलदयागुणैकास्पदं
कुलादिमददूषितोत्तरणबद्धदीक्षः स्वयम्।
यतीश्वरमघापहं निखिलदेहिनां दर्शयन्
विलक्षणजनाश्रितो जयति कूरनाथो गुरुः।। 44

*அவாங்மனஸகே$_3$ாசராமலத$_3$யாகு$_3$ணைகாஸ்பத$_3$ம்*
*குலாதி$_3$மத$_3$தூ$_3$ஷிதோத்தரணபத்$_3$த$_4$தீ$_3$க்ஷ: ஸ்வயம்*
*யதீச்வரமக$_4$ாபஹம் நிகிலதே$_3$ஹிநாம் த$_3$ர்ஶயந்*
*விலக்ஷணஜநாச்ரிதோ ஜயதி கூரநாதே$_2$ா கு$_3$ரு: 44*

அவாங்மனஸகோசர அமல தயாகுண ஏகாஸ்பதம் - வாக்குக்கும் மனஸ்ஸுக்கும் எட்டாத - குற்றமற்ற தயையாகிய குணத்துக்கு ஒரே கொள்கலமாகிய, கூரநாதோ குரு: - ஆழ்வானென்னும் ஆசார்யர், ஸ்வயம் - தாமாகவே (யாரும் வேண்டாமல்), குலாதி மத தூஷித உத்தரண பத்ததீக்ஷ: - நற் குலப்பிறப்பு முதலியவற்றாலுண்டான செருக்கினால் கெடுக்கப் பட்டவர்களை மோக்ஷமடைவிப்பதில் விரதம் பூண்டவராய், நிகில தேஹிநாம் -எல்லா மக்களுக்கும், யதீச்வரம் - யதிராஜ ரான எம்பெருமானாரை, அகாபஹம் - பாபம்போக்கி மோக்ஷமடைவிப்பவராக, தர்சயந் - காட்டுமவராய்க்கொண்டு, விலக்ஷணஜந ஆச்ரித: - உயர்ந்த ஜனங்களால் அடையப் பட்டு, ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

ஆழ்வான் தம்மையண்டினவர்களை, எம்பெருமானார் திருவடிகளில் சேர்த்து மோக்ஷமடைவிப்பர் என்கிறார் இதனால். 'குலத்தினாலும் கல்வியினாலும் செல்வத்தினாலும் நாமே உயர்ந்தவர்' என்று செருக்குக் கொண்டு மேன்மேலும் ஸம்ஸார வாழ்க்கையிலே கிடந்துழல்வாரைத் தமது அபாரகாருண்யத்தாலே மோக்ஷமடைவிக்க வேணுமென்று விரதம் கட்டிக் கொண்டு, 'மக்களே! எல்லாருடைய பாபங்களையும் போக்கி நற்கதி பெறுவிக்கும் எம்பெருமானாரை அடைந்து உய்ந்து போங்கள்' என்று உபதேசித்து உய்வு பெறுவிக்கிறார் ஆழ்வான் என்றாராயிற்று. எம்பெருமான் தயை வாக்குக்கும் மனதுக்கும் எட்டினாலும் எட்டும். ஆழ்வானுடைய தயை அவற்றுக்கு எட்டாது என்பார் 'தயாகுணைகாஸ்பதம்' என்று ஏகசப்தத்தை யிட்டார்.

यतीशितुरधीशतामसहतोऽपि रङ्गामृतात्
स्वकैश्शममुखैर्गुणैः स्वपदशिष्यतामेयुषः।
गुरोस्समुपलब्धया निखिलयापि रङ्गश्रिया
यतीशमभिनन्दयन् जयति कूरनाथो गुरुः।। 45

*யதீஶிதுரதீ4ஶதாமஸஹதோऽபி ரங்க3ாம்ருதாத்*
*ஸ்வகைஶ்ஶமமுகை2ர்கு3ணை: ஸ்வபத3ஶிஷ்யதாமேயுஷ:*
*கு3ரோஸ்ஸமுபலப்3த4யா நிகி2லயாபி ரங்க3ஶ்ரியா*
*யதீஶமபி4நந்த3யந் ஜயதி கூரநாதே2ா கு3ரு:(45)*

கூரநாதோ குரு: - கூரத்தாழ்வானாகிய ஆசார்யர், யதீசிது: - யதிராஜரான எம்பெருமானருடைய, அதீசதாமபி - மஹாசார்யத்வத்தையும், அஸஹத: - பொறுக்காதவராய், ஸ்வகை: சமமுகை:குணை: - தம்முடையவையான சாந்தி முதலிய குணங்களினாலே, ஸ்வபத சிஷ்யதாம் - தம் திருவடிகளில் சி யராயிருத்தலை, ஏயுஷ: - அடைந்தவருமான,



ரங்காம்ருதாத் குரோ: - திருவரங்கத்தமுதனாரென்ற ஆசார்யரிடமிருந்து, ஸமுபலப்தயா - பெறப்பட்ட, நிகிலயாபிரங்கச்ரியா - ஸமஸ்த மான ஸ்ரீரங்கைச்வர்யத்தாலும், யதீசம் - எம்பெருமானாரை, அபிநந்தயந் - மிக மகிழ்விப்பவராய், ஜயதி - விளங்குகிறார்.

எம்பெருமானாரையும் மதியாமல் செருக்கித்திரிந்த திருவரங்கத்தமுதனாரை, ஆழ்வான் தம்முடைய சமதமாதி (மனத்தையடக்குதல் பொறிகளையடக்குதல் முதலான) குணங்களாலே வசீகரித்துத் தம் திருவடிகளிலே சேர்த்து சி யராக்கிக் கொண்டு அவர்வசத்திலிருந்த திருவரங்கச் செல்வமனைத்தையும் ஸ்வாதீனமாக்கி, அதனை எம்பெருமானாரிடம் ஸமர்ப்பித்து அவர்க்கு மிகவும் உகப்பையுண்டு பண்ணினாரென்றருளிச் செய்கிறார். ஆழ்வானுடைய பெருமைகளில் சிகரமான பெருமையாகுமிது. இல்லையேல், 'தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே' (ஆர்த்திப்ரபந்தம் 31) என்று இன்று நாம் எம்பெருமானாரை வாழ்த்த முடியாமற்போயிருக்கும். அச்செல்வம் தம்வசமாயிருந்தாலன்றோ திருத்தவியலுவது. அது தன்னை எம்பெருமானார்க்கு வசமாக்கியவர் ஆழ்வானிறே. 'குரும் ப்ரகாசயேத் தீமாந்' (புத்திசாலியான சி யன் ஆசார்யனை ப்ரகாசிக்கச் செய்யக் கடவன்) என்னும் சி யலக்ஷணம் ஆழ்வானிடம் மிகவும் ப்ரகாசித்தது. மேலும், படிக்காத உலகமக்களைத் தம்படிப்பைக் கொண்டு திருத்தி நாரணற்கு ஆளாக்கின எம்பெருமானாரை விட, படித்த அமுதனாரைத் தம் குணத்தாலே திருத்தி எம்பெருமானார்க்கு ஆளாக்கிய ஆழ்வானுடைய பெருமை அளவிடற்பாலதன்றிறே.

ஆக, கீழே இருபத்தேழாவது ச்லோகத்தில் ஆழ்வான் உலகமக்களைக் குறித்து, 'ஜனங்களே! எள்ளளவும் இன்பமின்றி, எல்லாம் துன்பேமேயான இவ்வுலகவாழ்க்கையை நீத்து, இன்பமயனான திருவின் மணவாளனைத் தஞ்சமடையுங்கள்.

உதாரனான அப்பெருமான் தனது இன்பத்தோடு ஒத்த இன்பமாகிய மோக்ஷானந்தத்தை உங்களுக்கு அளித்தருள்வான்' என்று உபதேசிப்பதாகக் கூற, அது கேட்டுச் சிலர் தம்மிடம் வந்து, இப்படி போதிக்கும் ஆழ்வான் வார்த்தை நம்பத் தக்கதுதானா?என்று கேட்க, அவருடைய உபதேசம் நம்பத் தக்கதேயென்பதற்குச் சான்றாக, 'விரக்தாநாமக்ர்ய:' என்ற இருபத்தெட்டாம் ச்லோகம் தொடங்கி இந்த ச்லோக மீறாகப் பதினெட்டு ச்லோகங்களால் ஆழ்வானுடைய பெருமைகளையெல்லாம் அருளிச்செய்து அவர்களுக்கு நம்பிக்கையை உண்டுபண்ணினார். அவர்களும், 'அப்படியே எம்பெருமானை ஆச்ரயிக்கிறோம்' என்றார்கள். அர்ஜுனனை நம்ப வைப்பதற்குக் கண்ணபிரானுக்கு கீதை பதினெட்டு அத்யாயங்கள் தேவைப்பட்டது. இவர்களை நம்பச் செய்வதற்குப் பதினெட்டு ச்லோகங்களே போதுமாயின. பகவத் சேஷனான அர்ஜுனனை விட பாகவத சேஷர்களான இவர்களின் பெருமை என்னே! அத்யாயங்களாகவுமாம். ச்லோகங்களாகவுமாம். பதினெட்டென்கிற எண்ணின் பெருமை எண்ணமுடியாதிறே.

अनर्घविपुलांशुकःसुलसदूर्ध्वपुण्ड्राङ्कितः
सरोजतुलसीमणिप्रचुरमालिकालङ्कृतः।
किरीटकटकादिभिर्विविधभूषणैर्भूषितः
समावहति कूरराट् अखिललोकनेत्रोत्सवम्।। 46

*அநர்க₄விபுலாம்ஶுக: ஸுலஸதூ₃ர்த்₄வபுண்ட்₃ராங்கித:*
*ஸரோஜதுளஸீமணிப்ரசுரமாலிகாலங்க்ருத:*
*கிரீடகடகாதி₃பி₄ர்விவித₄பூ₄ஷணைர்பூ₄ஷித:*
*ஸமாவஹதி கூரராட் அகி₂லலோகநேத்ரோத்ஸவம்.*

அநர்கவிபுல அம்சுக: - விலைமதிப்பில்லாத பெரிய திருப்பரிவட்டங்களையணிந்தவரும், ஸுலஸத் ஊர்த்வபுண்ட்ர





அங்கித - பளிச்சென்று விளங்குகிற திருமண் காப்புக்களால் உண்டான ஸ்ரீவைணவக் குறியையுடையவரும், ஸரோஜ துளஸீமணிப்ரசுர மாலிகா அலங்க்ருத: - தாமரைமணி துளஸீமணிகள் நிறைந்த மாலைகளால் அலங்கரிக்கப் பட்டவரும், கிரீட கடக ஆதிபி: - கிரீடம் காப்பு முதலிய, விவித பூஷணை: -பலவகையான திருவாபரணங்களால், பூஷித: - பூஷிக்கப்பட்டவருமாய்க் கொண்டு, கூரராட் - கூரத்தாழ்வான், அகிலலோக நேத்ரோத்ஸவம் - மக்களனைவரின் கண்களுக்கு ஸந்தோஷத்தை, ஸமாவஹதி - உண்டாக்குகிறார்.

இது முதலாக ஐந்து ச்லோகங்களால், கூரத்தில் எழுந்தருளியிருக்கிற ஆழ்வானுடைய அர்ச்சாவதாரத் திருமேனியின் இயற்கையழகும், திருப்பரிவட்டம் தாமரைமணி துளஸீமணிமாலைகள், கீரிடம் முதலிய பற்பல திருவாபரணங்கள், புஷ்பமாலைகள் ஆகியவற்றால் உண்டாகிற செயற்கையழகும் இவற்றுடன், தை மாதத்தில் நடைபெறுகின்ற அவதாரோத்ஸவத்தில் காலை வேளையில் பல்லக்கில் எழுந்தருளித் திருவீதிகளை அலங்கரித்தலும், இரவு வேளையில் பெரிய தோளுக்கினியானில் ஏறியருளி வேதமோதும் அந்தணர்களால் சூழப்பெற்று திருவீதியில் உலாவருதலும், தைமாதஹஸ்த நக்ஷத்ரமாகிய தமது திருவவதார நன்னாளன்று, சந்தனம்புஷ்பமாலை இவற்றைத் தாம் பூசியணிந்து, சர்க்கரைப் பொங்கல் முதலிய பலவகைப் பிரஸாதங்களைத் தாம் அமுது செய்து, எல்லாமக்களுக்கும் அவற்றை விநியோகம் செய்வித்து அவர்களை ஜந்மஸாபல்யமுண்டாம்படி பண்ணுதலும் கூறி இந்த ஸ்தோத்ரத்தைத் தலைகட்டியருளுகிறார்.

महार्घमकुटोज्ज्वलःस्फुरदुदारहारावलिः
विलोलमणिकुण्डलोल्लसितपीनगण्डस्थलः।
विचित्रकुसुमावलीकलितदिव्यमाल्याञ्चितः
विभातमधुराकृतिः जयति कूरराड्देशिकः।। 47

*மஹார்க4மகுடோஜ்வல: ஸ்பு2ரது3த3ர்ஹாராவலி:*
*விலோலமணிகுண்ட3லோல்லஸிதபீநக3ண்ட3ஸ்த2ல:*
*விசித்ரகுஸுமாவலீகலிததி3வ்யமால்யாஞ்சித:*
*விப4ாதமது4ராக்ருதி: ஜயதிகூரராட்3தே3ஶிக: 47*

விபாத மதுர ஆக்ருதி: - மிக விளங்குகிற காண்பதற்கினிய திருமேனியை உடையவரான, கூரராட் தேசிக: - கூரத்தாழ்வானென்னும் ஆசார்யர், மஹார்க மகுட உஜ்வல: -பெருவிலையனான திருவபிஷேகத்தினால் விளங்குமவராகவும். ஸ்புரத் உதார ஹார ஆவலி: -மின்னுகின்ற பெரிய முத்து மாலைகளின் வரிசைகளையணிந்தவராகவும், விலோல மணி குண்டல உல்லஸித பீன கண்டஸ்தல: -அசைகிற ரத்நகுண்டலங்களாலே ஒளிவீசப்பெற்ற - பருத்த கன்னங்களையுடையவராகவும், விசித்ர குஸுமாவலீ கலித மால்யாஞ்சித:- பல நிறமுள்ள மலர்த்தொகுதிகளால் தொடுக்கப்பட்ட மாலைகளினால் அலங்கரிக்கப்பட்டராகவும், ஜயதி - மேம்பட்டு விளங்குகிறார்.

இந்த ச்லோகத்தில் 'விபாதமதுராக்ருதி:' என்றதனால் ஆழ்வானுடைய அர்ச்சைத் திருமேனியின் இயற்கையழகும், முன்ச்லோகத்திலும் இந்தச்லோகத்திலும் உள்ள மற்றுமுண்டான விசேஷணங்களினால் அத்திருமேனிக்கு ஆபரணம் புப மாலை கீரிடம் முதலியவற்றால் ஏற்படும் செயற்கையழகும் வருணிக்கப்பட்டன..

उपारूढे भानावुदयमधिरुह्यानुदिवसं
विचित्रामान्दोलीं विविधमणिभिः काञ्चनमयीम्।
अलङ्कुर्वन् वीथीः अनुपदकृताकल्पसुभगाः
समिन्धे कूरेशो मकरमहकालेऽतिरुचिरः।। 48



*உபாருடே4ப4ாநாவுத3யமதி4ருஹ்யாநுதி3வஸம்*
*விசித்ராமாந்தே3ாலீம் விவித4மணிபி4:காஞ்சநமயீம்*
*அலங்குர்வந் வீதீ2: அநுபத3க்ருதாகல்பஸுப4கா:*
*ஸமிந்தே4கூரேஶோ மகரமஹகாலேzதிருசிர: 48*

கூரேச:-கூரத்தாழ்வான், மகரமஹகாலே- தைமாதவுத்ஸவ ஸமயத்தில், அநுதிவஸம் - ஒவ்வொரு நாளும், பாநௌ - சூரியன், உதயம் உபாருடே - உதயத்தை அடைந்தவளவில், விவிதமணிபி: -பலவகையான ரத்னங்களினால், விசித்ராம் - பலவர்ணங்களையுடையதான, காஞ்சனமயீம் - ஸ்வர்ணமயமான, ஆந்தோலீம் - திருப்பல்லக்கை, அதிருஹ்ய - ஏறி வீற்றிருந்து, அதிருசிர: -முற்கூறிய இருவகையழகுகளும் மிகப் பெற்றவராய், அநுபத க்ருத ஆகல்ப ஸுபகா: -அடிதோறும் செய்யப்பட்ட கோலம், வாழைமரம், பாக்குமரம் மாவிலைத் தோரணம் முதலிய அலங்காரங்களினால் அழகு பெற்றிருக்கிற, வீதீ: - திருவீதிகளை (தமது புறப்பாட்டினால்), அலங்குர்வந் - அலங்கரித்துக்கொண்டு, ஸமிந்தே - மிகவும் ப்ரகாசிக்கிறார்.

தைமாதவுத்ஸவம் பத்துநாட்களிலும் காலையில் ஆழ்வான், பலவகைமணிமாலைகள் தொங்கவிடப்பட்ட தங்கப் பல்லக்கில் வீற்றிருந்து, ஒவ்வொரு திருமாளிகை வாசலிலும் கோலமிட்டும் பூர்ணகும்பம் வைத்து, மாவிலைத் தோரணமும் வாழை கமுகு மரங்களும் கட்டப்பெற்று மிக அழகிய திருவீதிகளில் எழுந்தருளுவதை இதனால் குறித்தாராயிற்று.

समास्थाय श्रीमान् निशि निशि भुजाभोग्यमतुलं
महायानं ब्रह्मप्रभमखिलभूषाञ्चिततनुः।
त्रयीगाथासक्तैर्निबिडसविधो वैष्णववरैः
चरन् श्रीवत्साङ्को जयति विशिखां कूरनगरे।। 49

*ஸமாஸ்தா2ய ஶ்ரீமாந்நிஶிநிஶிபு4ஜாபோ4க்3யமதுலம்*
*மஹாயாநம்ப்3ரஹ்மப்ரப4மகி2லபூ4ஷாஞ்சிததநு:*

*த்ரயீகா3தா2ஸக்தைர்நிபி3ட3ஸவிதோ4வைஷ்ணவவரை:*
*சரந் ஸ்ரீவத்ஸாங்கே ஜயதி விஶிகா2ம் கூரநக3ரே. 49*

ஸ்ரீமாந் ஸ்ரீவத்ஸாங்க: - திருவாளரான கூரத்தாழ்வான், கூரநகரே - கூரமென்னும் நகரத்தில், நிசிநிசி - இரவுகள் தோறும், அகிலபூஷா அஞ்சிததநு: - ஸமஸ்தாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட திருமேனியையுடையவராய், ப்ரஹ்மப்ரபம் - ப்ரஹ்மதேஜஸ்ஸை உடையதும், அதுலம் - நிகரற்றதும், புஜாபோக்யம் மஹாயாநம் - தோளுக்கு இனியான் என்ற பெரியவாஹனத்தை, ஸமாஸ்தாய - ஏறி வீற்றிருந்து, த்ரயீகாதா ஸக்தை: - ருக் யஜுஸ் ஸாம வேதங்களைப் பாடுவதில் ஊற்றமுள்ள, வைஷ்ணவவரை: - ஸ்ரீவைணவோத்தமர்களாலே, நிபிடஸவித:- நெருக்க முடைய ஸமீப ப்ரதேசத்தை யுடையராய்க்கொண்டு, விசிகாம் சரந் - பெரியதெருவில் எழுந்தருளுமவராய், ஜயதி - விளங்குகிறார்.

ஆழ்வான் தையுத்ஸவத்தில் மாலை வேளைகளில், ஸர்வாபரணபூஷிதராய் வைதிகவொளி நிறைந்த பெரிய தோளுக்கினியானில் எழுந்தருளியிருந்து, தம்மைச் சூழ ஸ்ரீவைணவர்கள் உபயவேதபாராயணம் செய்து கொண்டு எழுந்தருள, பெரியதெருவில் புறப்பாடு கண்டருள்வதை வருணித்தாராயிற்றிதனால். மஹாயாநம் = பெரியவாஹனம். புஜாபோக்யம் = தோள்களுக்கு போக்யமானது. அதிக பாரம் இல்லாமையால் புஜாபோக்யமெனப்பட்டது. மஹாயாநம் புஜாபோக்யம் என்ற இரண்டு பதமும் சேர்ந்து 'பெரிய தோளுக்கினியான்' என்ற மங்களகிரியைக் குறிப்பதாகக் கொள்ளலாம். விசிகா - ஊர் நடுவில் உள்ள பெரியவீதி; ராஜவீதி.

सताम्बूलैर्गन्धैः कुसुमसहितैर्भक्ष्यनिवहैः
गुडान्नाद्यैरन्नैरपि निजमहास्वादमहितैः।
कृतार्थानातन्वन् निखिलमनुजान् कूरनृपतिः
स्वजन्मर्क्षे हस्ते मकरमहकाले विजयताम्।। 50



*ஸதாம்பூலைர்க3ந்தை4 குஸுமஸஹிதைர்ப4க்ஷ்யநிவஹை:*
*கு3டா3ந்நாத்3யைரந்நைரபி நிஜமஹாஸ்வாத3மஹிதை:*
*க்ருதார்த்தா2நாதந்வந் நிகி2லமநுஜாந் கூரந்ருபதி:*
*ஸ்வஜந்மர்க்ஷே ஹஸ்தே மகரமஹகாலே விஜயதாம்.*

கூரந்ருபதி: - கூரத்தாழ்வான், மகரமஹகாலே - தை மாதவுத்ஸவ ஸமயத்தில், ஸ்வஜந்மர்க்ஷே - தமது திருவவதார நக்ஷத்திரமான, ஹஸ்தே - ஹஸ்தத்தில், நிஜமஹாஸ்வாத மஹிதை: - தாம் அனுபவித்துச் சிறப்பிக்கப் பட்டவைகளான, ஸதாம்பூலை: - வெற்றிலை பாக்குக்களோடு கூடியவைகளும், குஸுமஸஹிதை: - புஷ்பங்களோடு கூடியவைகளுமான, கந்தை: - சந்தனங்களாலும், குடாந்ந ஆத்யை: - சர்க்கரைப் பொங்கல் முதலான, அந்நைரபி - ப்ரஸாதங்களாலும் பக்ஷ்ய நிவஹை: பக்ஷணஸமூஹங்களாலும், நிகிலமநுஜாந் - மக்களனைவரையும், க்ருதார்த்தாந் - தன்யர்களாக, ஆதந்வந் - ஆக்குமவராய்க் கொண்டு, விஜயதாம் - வெற்றி பெற்று வாழ்க.

ஆழ்வான் தைத்திங்களில் நடக்கும் தம்முடைய திருவிழாவில், சாத்துமுறை நன்னாளான ஹஸ்த நக்ஷத்திரத் தன்று, விசேஷமாக, சந்தனக் காப்பும் புஷ்பமாலைகளும் தாம் சாத்திக்கொண்டும், சர்க்கரைப் பொங்கல் முதலிய உயர்ந்த ப்ரஸாதங்களையும் பலவகைப் பணியாரங்களையும் அமுதுசெய்தும், தாம்பூலசர்வணம் செய்தும் அவற்றைப் பரிசுத்தமாக்கி எல்லார்க்கும் விநியோகம் செய்வித்து அவர்களைப் பரமபாக்யவான்களாக ஆக்கிக் கொண்டு விளங்குவதைக் குறிப்பிட்டு இப்படியே மேன்மேலும் விளங்கவேணுமென்று, மங்களாசாஸனத்தோடு ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டினாராயிற்று. 'ஜயஜய' என்று முதலில் செய்த மங்களாசாஸனத்தை 'விஜயதாம்' என்று முடிவிலும் செய்தருளினார்.

श्रीमता शुद्धसत्त्वेन दोड्डार्येण महात्मना।
पञ्चाशत् कूरनाथस्य स्तोत्रमीरितमुत्तमम्।।

*ஸ்ரீமதா ஶுத்₃த₄ஸத்₃வேந தொ₃ட்₃டா₃ர்யேண மஹாத்மநா*
*பஞ்சாஶத் கூரநாத₂ஸ்ய ஸ்தோத்ரமீரிதமுத்தமம்.*

சுத்தஸத்வேந - சுத்தஸத்த்வம் என்று கூறப்படும் வம்சத்தில் தோன்றியவராய், மஹாத்மநா - பரந்தமனம் படைத்தவராய், ஸ்ரீமதா - ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயால் நிறைந்தவருமான, தொட்டார்யேண - தொட்டாசார்யராலே, கூரநாதஸ்ய - கூரத்தாழ்வான் விஷயமான , பஞ்சாசத் - ஐம்பது ச்லோகங்களைக் கொண்ட, உத்தமம் ஸ்தோத்ரம் - மிகவுயர்ந்த ஸ்தோத்ரமானது, ஈரிதம் - விண்ணப்பிக்கப்பட்டது.

கூரநாதபஞ்சாசத்தென்னும் ஸ்தோத்ரத்தை அருளிச் செய்தவர் ஸ்ரீமான் சுத்தஸத்த்வம் தொட்டாசார்யஸ்வாமி என்பது இந்த ச்லோகத்தினால் விளங்குகிறது. இந்த ச்லோகத்தை இந்த க்ரந்தகாரரே பணித்திருக்கலாம். அல்லது வேறொருவரும் பணித்திருக்கலாம். ஸ்ரீமான் என்றது - பகவத்பாகவதாசார்ய பக்தியாகிற ஸ்ரீவைஷ்ணவச் செல்வத்தால் நிரம்பியவர் என்றபடி. மஹாத்மா - பெரிய மனமுள்ளவர். மனஸ்ஸுக்குப் பெருமையாவது முற்கூறிய பக்திக்கு உபகரணமாக விருத்தலேயாகும். தொட்டாசார்யர் - மஹாசார்யர். கன்னடமொழியில், தொட்ட என்பது பெரிய என்னும் பொருளுடையது.

ஆழ்வான் திருவடிகளே சரணம்

தொட்டாசார்யர் ஸ்வாமி திருவடிகளே சரணம்.